# சைவ சமய இலக்கிய அகராதி

## இரண்டாம் தொகுதி

ஆசிரியர்
'செந்தமிழ்ச் செல்வன்', 'தமிழாகரர்'
'நல்லாசிரியர்', 'திருக்குறள் செம்மல்'

***முனைவர் ச. சாம்பசிவனார்***




அ.பெ. எண். 35,
மதுரை - 625 016.

## நூல் விவரக் குறிப்பு

நூற்பெயர் : சைவ சமய இலக்கிய அகராதி (தொகுதி-2)

நூலாசிரியர் : முனைவர் ச. சாம்பசிவனார்

வெளியீடு : தமிழ் மாருதம்
அ.பெ. எண். 35,
67/1, பாரத வங்கி அலுவலர் 1வது குடியிருப்பு,
புறவழிச்சாலை,
மதுரை 625 016. (தொலைபேசி : 2384246)



பதிப்பு : முதற்பதிப்பு, நவம்பர், 2008

பக்கம் : iv + 231

படிகள் : 1000

அச்சிட்டோர் : அமுதச்சம், மதுரை - 625 016.
(தொலைபேசி : 2382029)

விலை : ரூ. 100/-

"SAIVA SAMAYA ILAKKIYA AGARATHI"
(Vol.II)
By
Dr. S. SAMBASIVANAR, M.A., Ph.D.,

This Book is published with the Financial Assistance of Tirumala-Tirupati Devasthanams under their scheme to pubilsh religious books. My sincere thanks to T.T.D. -Author.

Published by
Dr. S. SAMBASIVANAR,
Tamil Maarudham,
P.B.No. 35,
67/1, State Bank Staff Ist Colony,
Bye Pass Road, Madurai - 625 016.

# முன்னுரை

"அன்பும் சிவமும் ஒன்றேயாம்!
அன்பாய் வாழ்தலே மெய்யேயாம்!
அன்பரல் சிவத்தை உணர்தல்தான்
அதுவே முத்திக் குறைவிடமாம்!
அன்பால் அடியவர் வாழ்ந்தமையால்
அவனியும் சிறக்க எண்ணினரே!
அன்பால் நூல்கள் ஆக்கிவைத்தார்!
அவற்றுக் கிணைதான் வேறுண்டோ?"

(சிவனார் விடுபூக்கள்)

"சைவம் என்பது 'சிவசம்பந்தம்' என்று பொருள் தரும். 'சைவம் சிவனோடு சம்பந்தமாவது' என்பது திருமந்திரம். 'சிவம்' என்பது 'சிவன்' எனவும் வழங்கும். வேற்றுச் சமயத்தவரும் விரும்பிக் காதலித்து மேற்கொண்டொழுகும் வீறு சிறந்தது, 'சிவம்' எனும் இச்செந்தமிழ்ச் சொல்! 'சிவம் என்பது தமிழ்ச்சொல்' என மேனாட்டு மொழிநூல் வல்லுநரான கிரையர்சன் முதலியோர் நடுநின்று கண்டுரைத்துள்ளனர்.

"சிவசம்பந்தம் சைவம் ஆதலால், சிவத்துக்கும் உயிர்கட்கும் உள்ள சம்பந்தம் 'சைவம்'; சிவத்துக்கும் உயிரில்லாத உலகிற்கும் உள்ளதொடர்பு 'சைவம்'. ஆகவே, உயிர்கட்கும் அவ்வுலகிற்கும் உள்ள தொடர்பு சைவமாம். உயிரின் வேறாய் அதற்கு நிலைக்களமாய் விளங்கும் உடம்பு, உலகியற் பொருளாய் விடுவதால் உயிர்க்கும் உடம்புக்கும் உளதாகிய தொடர்பும் சைவமாம். உயிர்க்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பாவது 'அன்பு' என்றார் திருவள்ளுவர். 'சிவம்' எனக் கண்டார் திருமூலர். அதனால் அவர் 'அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார் . . .' என்று விளக்கினார். இச்சம்பந்தத்தை அறிந்தொழுகும் திருநெறி, சைவம் ஆயிற்று!" (தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபை 65ஆம் ஆண்டு நிறைவு விழாத் தலைமையுரை) என்பது 'சைவம்' என்பதற்கான 'உரைவேந்தர்' ஔவை சு. துரைசாமிப்பிள்ளை தரும் விளக்கம்.

இத்தகு மேன்மைகொள் சைவ சமயத்தில் தோன்றிய நூல்கள் எண்ணில் பலவாம். சங்க இலக்கியமாகிய 'திருமுருகாற்றுப்படை' தொடங்கி இக்காலம் வரை, சிவனடியார்களும் முருக பத்தர்களும் பாடிய சைவ சமய இலக்கியங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. பன்னிரு திருமுறைகள், பெரியபுராணம்,

தலபுராணங்கள், 'பிள்ளைத்தமிழ், உலா, கலம்பகம்' எனும் சிற்றிலக்கியங்கள். கீர்த்தனைகள், காவடிச் சிந்து, வழிபாட்டுப் பாடல்கள், சைவ சித்தாந்த நூல்கள் எனப் பலவும் இதன்கண் இடம் பெற்றுள்ளன. ஒரு நூறு ஆண்டுக்கு முன்னிருந்த நூல்கூடக் காலப்போக்கில் பெயரளவில் மட்டுமே தெரியு மளவுக்கு உள்ளது. இவ் ஆய்வில் இடம்பெற்றுள்ள பல நூல்களைப் பலரும் பார்த்தறியார்; கேட்டறியார். இத்தகைய நூல்கள் பற்றிய குறிப்பும் இதன்கண் உள்ளன.

'**சைவ சமய இலக்கிய அகராதி**' எனும் இவ் ஆய்வில், பெரும்பாலும் கிடைத்த நூல்களைக் கொண்டு எழுதப்பட்டுள்ளன. முதல் தொகுதியில் 417 நூல்களின் வரலாறு செம்மையாகச் சொல்லப்பட்டுள்ளது. இவ் இரண்டாம் தொகுதியில் 359 நூல்களின் வரலாறு இடம் பெற்றுள்ளது.

'நூலின் தலைப்பு'; அதனையடுத்து நூலாசிரியரின் பெயர்; பின்னர் அந்த நூலின் அமைப்பு, யாப்பு வடிவம், பாடல் எண்ணிக்கை, சொல்லப்படும் பொருள் எனும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நூலையும் படித்துப் பார்த்து, அதிலுள்ள சுவையான அல்லது பயனுள்ள ஒரு பாடலும் தரப்பட்டுள்ளது. அப்பாடலைக் காண்பவர் எவரும், அந்நூலின்கண் ஆர்வங்கொண்டு, அந்நூலினைப் படிக்கத் தலைப்படுவர். **இத்தகைய அமைப்பினை வேறு இலக்கிய அகராதிகளில் காண்டல் அரிது.**

இதில் இடம்பெற்றுள்ள பல நூல்களைக் கண்டறிவதற்குச் சென்னை, தஞ்சை முதலான ஊர்கட்குச் சென்று நூலகங்களைப் பார்வையிட வேண்டிய தாயிற்று! **இஃது, இரண்டாம் தொகுதியாகும்.** இதன்கண், 'அ' முதல் 'வ' வரையிலான நூல்கள் இடம்பெற்றுள்ளன. மேலும் இதேபோல் இன்னும் சில தொகுதிகள் வெளியிடலாம். ஆனால், அரிய நூலகங்கள் இருக்குமிடம் சென்று பல நாட்கள் தங்கிச் செய்யவேண்டிய பணி இது!

இத்தகைய அரிய பணியைச் செய்வதற்கு இசைவளித்த ம. கா. பல்கலைக்கழகப் பெருமைமிகு, துணைவேந்தர், பதிவாளர், ஒருங்கிணைப்பாளர், துறைத்தலைவர் முதலானோர்க்கு என் மனங்கனிந்த நன்றியை உளப்படுத்துகின்றேன்.

இந்நூல் வெளிவர நிதி உதவியளித்த திருமலை – திருப்பதி தேவத்தானத்தினர்க்கு என் நன்றி!

இதனை விரைவில் கணினிமூலம் ஆப்செட்டில் அச்சடித்துக் கொடுத்த அமுதச்சகத்தார்க்கு என் நன்றி!

வாழ்க தமிழ் !

மதுரை – 16

14–11–2008 முனைவர் ***ச. சாம்பசிவனார்***

தி. வ. ஆண்டு 2036

# 'அ'

## அகத்தியர் தேவாரத்திரட்டு (உரையுடன்)

கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் (உ.ஆ.)

சைவத்திருமுறை பன்னிரண்டில் முதல் ஏழு திருமுறைகளைப் பாடியவர்கள் சம்பந்தர், அப்பர், சுந்தரர் எனும் மூவராவர். இவ் ஏழு திருமுறைகளும் 'அடங்கன் முறை' எனப்படும். சிவாலய முனிவர் என்பவரின் வேண்டுதலுக்கிணங்க அகத்தியர், 25 பதிகங்களைத் திரட்டிக் கொடுத்து, 'இவைகளை முறையே ஓதின், அடங்கன் முறை முழுவதையும் ஓதியதன் பலன் கிட்டும்' என்று அருளிச் செய்தார். அப்பதிகங்களே 'அகத்தியர் தேவாரத் திரட்டு'.

இந்நூலில், முதற்கண் சம்பந்தர் முதலானோர் வரலாறு, தேவாரச்சிறப்பு, தேவார நுதலிய பொருள், திருப்பதிகக் கருத்துரை ஆகியன உள்ளன.

சம்பந்தர் பாடிய 'தோடுடைய செவியன்' என்ற பதிகம் முதல், சுந்தரர் அருளிய 'திருத்தொண்டத்தொகை' ஈறாக 25 பதிகப் பாடல்கள், உரை விளக்கங்களுடன் தந்துள்ளார் உரையாசிரியர்.

முதற்பாடலுக்கு விளக்கம் கூறவந்த இவ் உரையாசிரியர், பின்வருமாறு நயம் காண்பர்:

"தமிழ்மறை அருளிச் செய்வான் றொடங்கிய நாயனார் (சம்பந்தர்) மறை மூலமாகிய பிரணவம் உரைத்தே வேதம் உரைத்தல் முறையாதலின், 'தோடு' என்னும் முதன்மொழியில் 'ஓகாரம்' புணர்த்தியுரைத்தார். அப்பிரணவ நாதமும் 'சடாகாசமாகிய பூதாகாசத்தினன்றிச் சிதாகாசமாகிய தகராகாசத்திற்றோன்றும் சுத்த நாதமாதலின், 'தகரம்' கூட்டியுரைக்கப்பட்ட தென்க. அன்றியும் இந்நாயனாரது முதற்றிருமுறையின் முதற்பதிகத்தின் முதலடியின் முதன்மொழியின் முதலெழுத்தாய இவ் 'ஓகாரம்', பன்னிரண்டாம் திருமுறையான திருத்தொண்டர் புராணத்தின் ஈற்றுச் சருக்கத்தின் ஈற்றுச் செய்யுளின் ஈற்றடியின் இறுதிச் சொல்லின் ஈற்றெழுத்தாகிய மகாரத்தோடு புணர்ந்து 'ஓம்' என முடிந்து, தமிழ் வேதமாகிய திருமுறைகள் யாவும் பிரணவ வித்தில் தோன்றி மடங்கி நிற்கும் தன்மையை விளக்குவதுங் காண்க! . . ."

– இவ்வாறே ஒவ்வொரு பாட்டிற்கும் அரிய விளக்கம் தருகின்றார் உரையாசிரியர்.

## (ஸ்ரீ) அகிலாண்ட நாயகி பதிகம்

மாதவச் சிவஞான சுவாமிகள்

'பதிகம்' என்பது 10 பாடல் கொண்டது.

திருநெல்வேலிக்கு அருகிலுள்ள செப்பறையுடன் இணைந்துள்ள இராசவல்லிபுரத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ அக்கினீசுரர் பாகமாகிய ஸ்ரீ அகிலாண்டநாயகி மீது பாடப்பட்டது. மூலமும் உரையுமாக உள்ளது.

"பண்டைவினை யாலும்வரு பழவினையி னாலும்முறு
பாழ்த்தகன் மத்தி னாலும்
பாழான மாயைப் புணர்ச்சியா லுந்தொலைவில்
பலபல தநுக்க டுக்கி . . ."

என்பது முதற்பாடல். இதற்கு ஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் சிறந்த உரைவகுத்துள்ளனர்.

"அநாதியாயுள்ள சஞ்சிதகருமத்தினாலும், சஞ்சித கருமத்தினின்றும் பக்குவமுற்று வருகின்ற பிராரத்த கருமத்தினாலும் பிராரத்த வினைப் பயனை அனுபவிக்குமுறையில் உறுகின்ற கெடுதி செய்யும் ஆகாமிய கருமத்தினாலும், நிலைபேறில்லாத பயனைத் தருவதாகிய மாயையினது சேர்க்கையாலும், ஒழிதல் இல்லாத எண்ணிறந்த பல உடல்களைச் சுமந்து கொண்டு, (இவ்வுலகிலும் மேலுலகிலும் கீழுலகிலும் கொள்ளி வட்டமும் காற்றாடியும் போலச்) சுழன்று திரிகின்ற, தீவினையேன் இயற்றுகின்ற தவறான செயல்களை எல்லாம், நல்ல செயல்கள் என்று திருவுளம் பற்றி (அருமையின்றி எளிதாகவே (பருவத்துக்கேற்ற) திருக்கோலங்களைக் காட்டி (ஒன்றும் போதாத) என்னையும் பிறவிக் கடலினின்றும் கருணைக் கையால் தூக்கி, இத்துணையும் ஆட்கொண்டருளிய அருட்குணங்களால் பெருமலை போல்பவளே! வியாபியாக, தேங்கி நிற்கும் இன்பப் பெருங்கடலை நுகர்ந்து பேரின்ப மெய்தவும், நிலை பெறுத்தியருளுவது எந்த நாளோ? அடியேன் அறியும் ஆற்றலிலேன்! . . .".

– இவ்வாறே உரைவிளக்கம் மிக நீண்டு கொண்டே செல்லும்.

மேலும், சொற்பொருள் விளக்கமும், பிறநூல் மேற்கோளும் இடம் பெற்றுள்ளன.

## அண்ணாமலை சதகம்

திருச்சிற்றம்பல நாவலர்

'சதகம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது.

இதில், 'காப்பு, நூற்பெயர்' – 2 பாடல்கள்; நூல் – 102 பாடல்கள்; இறுதியில் 'வாழி' – 1 பாடல் ஆக 105 பாடல்கள் உள்ளன. இந்நூலில், 'வேளாளர் பெருமை கூறியது' என்ற தலைப்பில் இடம் பெற்ற பாடல் :–

"தேவாலயந்தொறும் திருவிழாப்பூசையும் செப்பரிய பிரமாலயத்
தெய்வமறையோர் செய்யு நித்த நைமித்தமும் திரிசந்தியாகங்களும்
பூவாளு மன்னர் சதுரங்க பல முதலான பொக்கச மிகுஞ்செல்வமும்
பொன்வெள்ளி தனதானியம்பல சரக்கினாற் பொருளாக்கும் வணிகர் தொழிலும்
கோவாதி சோடச மகாதான தருமமும் குவலயத் தனைவர் சுகமும்
கோளாறு கொண்டுழும் வேளாள ருழுபடைக் கோலதன் பெருமையன்றோ
ஆவாற் கறந்தபா லபிடேகனேயனே அருள்பெறு வசந்த ராயர்
அண்ணாவினிற் றுதிசெய் உண்ணா முலைக்குரிய அண்ணாமலைத் தேவனே!"

– இவ்வாறே பிறவும். அனைத்தும் மூலபாடம்.

## அண்ணாமலை பஞ்சரத்தினம்

அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ.)

பஞ்சரத்தினம் – 5 இரத்தினங்கள்.

ஐந்து இரத்தினம் போல் 5 பாடல்கள். திருவண்ணாமலை ஈசர்மீது பாடப்பட்டவை. ஆசிரிய விருத்தப் பாக்கள்.

"சீர்கொண்ட செம்பொற் சிலம்பொலி யலம்பிடும்
செஞ்சரண கஞ்சங்களும்
சித்ரமிகு புலிவதளி னாடையும் நீற்றணி
சிறந்திலங் கிடுமேனியும் . . . !"

என்று தொடங்குவது முதற்பாடல். மூல மட்டுமே உள்ளது!

## அண்ணாமலை வெண்பா

சிதம்பரம் குருநமசிவாய சுவாமிகள்.

'வெண்பா' என்ற யாப்பினால் ஆனது. திருவெண்ணாமலை இறைவன் மீது பாடப்பட்டது.

முதலில் 'காப்பு'; அடுத்து 100 வெண்பா; இறுதியில் – 2 பாடல்கள் உள்ளன. மூலமட்டுமே உள்ளது.

"ஆதிநட மாடுமலையன், றிருவர் தேடுமலை
சோதிமதி யாடரவஞ் சூடுமலை – நீதி

தழைக்குமலை ஞானத் தபோதனரை வாவென்
றழைக்குமலை யண்ணா மலை!''

என்பது முதற்பாடல்.

## அண்ணாமலையார் வண்ணம்

கா. தியாகராஜப்பிள்ளை

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

திருவண்ணாமலை ஈசர் மீது பாடப்பட்டது.

இந்நூலில், 'எழுதரிதென்றல்' என்ற தலைப்பில் பின்வரும் 'சந்தக் குழிப்பு உள்ளது.

''தனத்தான தனனதன தனத்தான தனனதன
தனத்தான தனனதன தந்த தனனா
தனனதன தானதான தனனா!''

இச் சந்தத்தில் அமைந்த பாடல்:

''சிலைக்காம னுடனெரிய விழித்தாடல் புரிபரமர்
செருக்கோல நமனுயிரை யுண்ட சரணார்
மலர்ப்பாவை வருச்கல கலைப்பாவை தொழுபசிய
மலைப்பாவை கவுரியொரு பங்கி லுறைவார்
சினத்தாலு மிகவுமெதிர் விழித்தாலு முனிவினொடு
சிரித்தாலு மழல்வடிவு கொண்ட பரனார்
அரவு குடியேறு நீடுகுழையார் . . .''

– 24 அடி கொண்ட பாடல் இது.

## அண்ணாமலையார் வண்ணம்

பு. அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ)

'வண்ணம்', விளக்கம் முதல் தொகுதியில் உள்ளது.

'புன்னாக வராளி' இராகத்தில், 'ஆதி' தாளத்தில் பாடப்படும் பாடல் :–

''சிலைக்காம னுடலெரிய விழித்தாடல் புரிபரமர்
செருக்கோல நமதுயிரை யுண்ட சரணார் . . .''

இதற்கான சந்தம் :–

''தனத்தான தனனதன தனத்தான தனனதன
தனத்தான தனனதன தந்ததனனா
தனனதனதான தானதனனா''

## அபிராமி அந்தாதி (மூலமும் உரையும்)

*அபிராமி பட்டர்*

சு.அ. இராமசாமிப் புலவர் (உ.ஆ)

'அபிராமி அந்தாதி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் நூலாசிரியர், அபிராமி பட்டர் வரலாறு உள்ளது.

தொடக்கத்தில் 'காப்புச் செய்யுள்' – 1; நூல் – 100 பாடல்; நூற்பயன் – 1 பாட்டு என 102 பாடல்கள்.

பாடலையடுத்துப் 'பொருள்', அடுத்துக் 'குறிப்புரை' அமைந்துள்ளது.

*"உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலக முணர்வுடையோர்*
*மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை*
*துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன*
*விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழுத்துணையே!"*

இதற்கு உரையாசிரியர் தரும் பொருளும், குறிப்புரையும் : –

"தோன்றுகின்ற செவ்விய இளஞாயிறும், உயர்வாகிய மஞ்சாடி மலரும், ஆராய்ச்சியுணர்வுடையோர் நன்கு மதிக்கின்ற மாணிக்க மணியும்; மாதுள மலரும்; மின்னற் கொடியும்; மென்மையாகிய மணம் பொருந்திய குங்குமக் குழம்பும் போல, நூல்கள் விதிக்கின்ற சிவந்த திருமேனியையுடைய செந்தாமரை மலரில் எழுந்தருளியவளாகிய திருமகள் போற்றுகின்ற அபிராமிதேவி என் உயிர்த்துணையாம்!

(கு–ரை) திலகம் – ஆகுபெயர்; விழுத்துணை – சிறந்த துணை. தேவிக்குச் செந்நிறம் நூல்கள் விதிக்கின்றதை 'கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை, வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச் செம்பவளத் திருமேனிச் சிறுமியை, நம்பியென் னுள்ளே நயந்துரைத்தேனே! என்னும் திருமந்திரத்தானுமறிக!"

– இத்தகைய அரிய விளக்கம் தரும் நூல்!

## அபிராமி அந்தாதி (மூலமும் விருத்தியுரையும்)

*அபிராமி பட்டர்*

ஸ்ரீமத் இராமாநந்த யோகி (உ.ஆ)

'அந்தாதி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

முதலில் 'காப்பு' – 1; இறுதியில் 'நூற்பயன்' – 1 தவிர 100 பாடல்கள் உள்ளன.

ஒவ்வொரு பாடலுக்கும், 'பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விரிவுரை' என அமைந்துள்ளது.

*"மணியே மணியி னொளியே யொளிரு மணிபுனைந்த*
*அணியே யணியு மணிக்கழ கேயணு காதவர்க்குப்*
*பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெருவிருந்தே*
*பணியே னொருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே!"*

இதற்கு உரையாசிரியர், முதலில் 'பதவுரை' தந்து பின்பு, பின்வருமாறு 'பொழிப்புரை' தருகின்றார்:–

"அரதனமே! அம்மணியின் பிரகாசமே! பிரகாசிக்கும் (அம்) மணிகளா லலங்கரிக்கப் பெற்ற ஆபரணமே! தரிக்கும் ஆபரணங்களுக்கு அழகானவளே! பத்தி செய்து உன்னைச் சேராதவர்க்கு நோய் போல்பவளே! (பத்தி செய்வோர்) பிணிக்கு அமுதமே! தேவர்க்குப் பெரிய விருந்தானவளே! உனது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கின பின்பு வேறொரு தெய்வத்தை (நான்) வணங்கேன்!"

### கருத்துரை

உன் திருவடியைப் பணிந்தபின் வேறு தெய்வங்களைப் பணியேன் என்பதாம்.

### விளக்கவுரை

மணி முதலியன ஆகுபெயர்கள். அமரர் – இறவாதவர். இறக்கும் தேவர்களை அமரர் என்றது மங்கல வழக்கு. இவ்வாறே ஒவ்வொரு பாடலுக்கும் உள்ளது!

## அப்பர் குறுந்தொகை ஐம்பது (மூலமும் பொழிப்புரையும்)

*திருநாவுக்கரசர்*

ச. சாம்பசிவனார் (உ.ஆ)

அப்பர் தேவாரம் – நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல் தொடக்கத்தில், 'நூற்சிறப்பும் ஆசிரியர் குறிப்பும்' தரப்பட்டுள்ளன. அப்பர் பாடிய 4, 5, 6 திருமறைகளில், திருக்குறுந்தொகைப் பாடல்கள் 5ஆம் திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களின் மொத்த எண்ணிக்கை 1015. இவற்றில் கோயில் – 2 பதிகம்; திருநெல்வாயில் அரத்துறை – 1 பதிகம்; திருவண்ணாமலை – 2 பதிகம்; என 50 பாடல்களுக்குப் பொழிப்புரை, பதவுரைகள் தரப்பட்டுள்ளன

*"அரக்க னையல றவ்விர லூன்றிய*
*திருத்த னைத்திரு வண்ணா மலையனை*
*இரக்க மாயென் உடலுறு நோய்களைத்*
*துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனோ"*

என்னும் பாடலில் வரும், 'இரக்கமா யென் உடலுறு நோய்களைத் துரக்கனை'

என்பதற்கு, இவ் உரையாசிரியர், "இப்பாடலில் திருநாவுக்கரசரது வாழ்க்கைக் குறிப்புச் சுட்டப்பட்டுள்ளது. நாவரசர் புறச்சமயம் சேர்ந்தபோது, சூலை நோயினால் துன்பப்படத் தமக்கையார் திலகவதியாரால் மீளவுஞ் சைவசமயஞ் சார்ந்து, திருவதிகை வீரட்டானத்து இறைவனை வணங்கித் தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெற்றுக் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்னும் தேவாரத் திருப்பதிகம் பாட, முதல்வன் கருணைப் பெரு வெள்ளத்தால் ஆட்கொள்ளப் பெற்று, 'வட அனலும் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாம் கொடிய எலாம் ஒன்றாகும் எனக்குடரின் அகங்குடையப் படருழந்து நடுங்கிய' வருத்தமெல்லாம் நீங்கப் பெற்றார் என்பது வரலாறு. ஆதலின் ஈண்டு, 'இரக்கமாயென் உடலுறு நோய்களைத் துரக்கனை' என்றார்!" என விளக்குகின்றார்.

இவ்வாறே ஆங்காங்கே அரிய விளக்கங்கள் இந்நூலில் உள்ளன.

## அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்)

*மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை*

தி. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (உ.ஆ)

'பிள்ளைத்தமிழ்' – நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. அடுத்து நூல் – மூலம் : பாயிரம் நீங்கலாகக் 'காப்புப் பருவம்' முதல் 'சிறுதேர்ப் பருவம் வரை' 101 பாடல்கள். அடுத்துச் 'சிறப்புப் பாயிரம்' – 9 பாடல். இறுதியில் 'குறிப்புரை' முதலியன இடம்பெற்றுள்ளன.

*"எள்ளருங் கைலாய வரைவீற் றிருந்தநாள்*
*இங்ஙனம் பாராட்டுதற்*
*கேற்புடைய வடிவமன் றென்றுனை விடுத்தனம்*
*இருந்தவர்க ணால்வ ரேத்த . . . .*
*தள்ளருஞ் சுத்தமேற் சித்தாந்த சைவமணி*
*சப்பாணி கொட்டியருளே!*
*தண்டமிழ்த் துறைசையம் பலவாண தேசிகன்*
*சப்பாணி கொட்டியருளே!"*

என்பது, சப்பாணிப் பருவப் பாடல்.

இதற்கு உரைகாரர் பின்வருமாறு எழுதுவர்:

"என்ன அரும் – பழித்தலில்லாத; சிவபிரானைக் குழந்தைப் பருவத்தில் வைத்து யாவரும் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் செய்திலர், மரபுமன்று! இரும் தவர்கள் – பெரிய தவத்தை யுடையோர்; நால்வர் – சனகர், சனற்குமாரர், சனாதனர், சனந்தனர். விள்ளரும் – சொலற்கரிய; குந்தம் – குருந்தம் என்பதன்

மரூஉமொழி. ஓர்ந்து – ஆராய்ந்தறிந்து. சுத்தம் மேல் சித்தாந்த சைவம் – சுத்த சைவத்தின் மேம்பட்ட சித்தாந்த சைவம்.

சுத்த சைவமாவது, சித்தாந்த சைவத்தையொப்பப் பதி, பசு, பாசங்களின் இயல்புகளை உடம்பட்டு, முத்தியில் உயிரானது சிவபரம்பொருளினிடத்து ஐக்கியமுற்று, ஒரு பயனும் ஓர் ஆனந்தமுமன்றி நிற்கும் என்பது. இதற்கு அதிதமானது சித்தாந்த சைவம்!"

– இத்தகு விளக்கங்கள் உள்ள நூல்!

## அருணகிரியந்தாதி

*குகை நமசிவாய தேவர்*

'அந்தாதி' விளக்கம், முன்தொகுதியில் உள்ளது. 'அருணகிரி' என்பது திருவண்ணாமலை. ஆங்கு எழுந்தருளிய இறைவன் மீது பாடப்பட்டது.

இதன்கண் 'காப்பு' – 1 தவிர 100 பாடல்கள் அனைத்தும் அந்நாதித் தொடையில் அமைந்தவை. தொடக்கம் 'கார்' என்றும், 100வது பாடல் இறுதி 'கார்' என்றும் முடிவதால் 'மண்டலித்தல்' எனப்படும். மூலமட்டுமே உள்ளது.

*"காலைமலர் தூவக் கருத்தறியா நாயேற்கு*
*வேலைவிட முண்ட விமலனே – மேலாய*
*வாசிகனே கண்பலித்து வாழ்விக்குஞ் சோணகிரி*
*தேசிகனே நீகண்டாய் திக்கு"*

என்பது அவற்றில் ஒன்று. மூல மட்டுமே உள்ளது.

## அருணாசல அக்ஷரமாலை

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)*

'மாலை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. அக்ஷரம் – எழுத்து. அருணாசலம் – திருவண்ணாமலை. திருவண்ணாமலை இறைவன் மீது பாடப்பட்டது.

தொடக்கத்தில் விநாயக வணக்கம் – 1 வெண்பா. அடுத்து 'இணைக் குறட்டாழிசை' யாப்பில் பாடல்கள். 'அகர'த்தில் தொடங்கி, 'ஔகாரம்' வரை; 'ககரத்'தில் தொடங்கி 'வகாரம் வரை – பாடல்கள் அமைந்துள்ளன. இவ்வகையில் 114 பாடல்கள் உள்ளன.

'லாலி சந்தம்' அமைப்பில் உள்ள பாடல்:–

*"அக்கா மனைந்தியக் கும்ஆதிக்க*
*மிக்க வகரத்தினாதி*
*சொக்கசிவ சோதியறிவா யெங்குநிறை*
*சொக்கரொளி யருணாசலா!"*

என்பது 'அகரத்'தில் அமைந்த பாடல். இவ்வாறே பிறவும்! மூலமட்டுமே உள்ளது!

**அருணாசல சதகம்**

*காஞ்சீபுரம் சபாபதி முதலியார்*

'சதகம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'அருணாசலம்' என்பது 'திருவண்ணாமலை'. ஆங்கு எழுந்தருளியுள்ள ஈசன் மீது பாடப்பட்டது.

இதன்கண் 101 பாடல்கள் உள்ளன.

*"மட்டார்மலர் கொழுநின்னடி மலர்பூசனை செய்கின் றிலார்*
*மொட்டார்முலை யார்தம்மையே முயங்கித் திகைப் பாரையையோ*
*கெட்டாரவர் தமக்குன்னருள் கிடையாது முப்புர நீறெழ*
*அட்டாரணன் றொழநின்றரு ளருணாசலா அருணாசலா!"*

என்பது அவற்றில் ஒன்று அனைத்தும் மூலபாடம்!

**அருணாசலபுராணம்**

**அருணாசலத் தோத்திரத் திரட்டு**

*சைவ எல்லப்ப நாவலர்*

அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ.)

இந்நூலின் தொடக்கத்தில் 'எல்லப்ப நாவலர் சரித்திரம்' உள்ளது. மற்றும், 'சைவசமயம், சைவசமயி, அநாசாரம், திருக்கோயிற் குற்றங்கள், சிவாலய தரிசன விதி, கிரிப்பிரதக்ஷிண விதி' ஆகியன, உரைநடையில் உள்ளன. அடுத்துச் 'சம்பந்தர், அப்பர்' திருவண்ணாமலைப் பதிகங்கள்; திருவாசகம் – திருவெம்பாவை, திருவம்மானை, அருணகிரிநாதர் திருப்புகழ்' ஆகியன இடம்பெற்றுள்ளன.

பின்பு, 'குரு நமச்சிவாயர் சரித்திரம்' உள்ளது. குரு நமச்சிவாய சுவாமிகள் அருளிய 'அண்ணாமலை வெண்பா', 'அருணகிரி அந்தாதி' ஆகிய பாடல்கள்; திருவண்ணாமலைத் தீபதரிசனச் சரித்திரச் சுருக்கம் ஆகியன உள்ளன. அடுத்து 'அருணாசல புராணம் மூலமும் உரையும்' வெளியிடப்பட்டுள்ளது.

இதன்கண், பாயிரம் தவிர, 'திருநகரச் சருக்கம்' முதல் 'புளகாதிபன் சருக்கம்' வரை 14 சருக்கங்கள் – 649 திருவிருத்தங்கள் உள்ளன.

ஒவ்வொரு சருக்கத்தின் தொடக்கத்திலும் 'சருச்க வசனம்' கூறப்பட்டுள்ளது. அதன்பின், பாடலும் பொழிப்புரையுமாக அமைந்துள்ளன:–

*"நாயகன் மொழிந்திட நடந்தபடி யெல்லாம்*
*பாயிர மெனும்படி பகர்ந்தன னெவர்க்குந்*
*தாயிவை மொழிந்தன வினிற்சத மகற்கன்*

*றாயிரம் விழித்திர ளளித்தமுனி சொல்வான்!"*

என்பது "திருக்கண் புதைத்த சருக்கத்"தில் வருவது. இதற்குப் பின்வரும் உரை கொடுக்கப்பட்டுள்ளது:–

"பரமசிவன் சொன்னபடி பூமியில் வந்து, தான் நடந்த சமாச்சாரமெல்லாம், பாயிரத்தோடுங் கூடிய நூல் போல், முறையாக விரித்து, எவருக்குந் தாயாகிய பார்வதி சொன்னபோது, முற்காலத்தில் நூறு அஸ்வமேத யாகங்களைச் செய்த தேவேந்திரனுக்கு ஆயிரம் கண்ணுண்டாகச் செய்த கௌதமர் சொல்வார்!"

– இவ்வாறே ஒவ்வொரு பாடலுக்கும் பொழிப்புரை உள்ளது.

இத்தொகுப்பு நூலில், சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய 'திருவணை யந்தாதி' 'திருவருணைக் கலம்பகம்'; துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய, 'சோண சைல மாலை'; நமசிவாய சுவாமிகள் அருளிச் செய்த 'சாரப் பிரபந்தம்'; திருச்சிற்றம்பல நாவலர் அருளிச் செய்த 'அண்ணாமலைச் சதகம்', புராணிகர் சோணாசல முதலியார் இவற்றிய 'திருவண்ணாமலைக் கார்த்திகை தீப வெண்பா' – 'சோணாசல வெண்பா', 'சோணாசல சதகம்' 'திருவருணைக் கலி வெண்பா'; வள்ளலார் அருளிய 'திருவண்ணாமலை திருவருட் பதிகம்'.

'அருணாசலீசர் பதிகம்', 'திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் பதிகம்', 'உண்ணாமுலையம்மன் பதிகம்'; மகாவித்துவான் சின்னகவுண்டர் இயற்றிய 'உண்ணாமுலை யம்மன் சதகம்'; சபாபதி முதலியார் இவற்றிய 'ஸ்ரீ அருணாசலேஸ்வரர் பதிகம்'; திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசர் 'நவகாரிகை மாலை', 'உண்ணாமுலையம்மை வருகைப்பதிகம்'; காஞ்சிராம் சபாபதி முதலியார் இயற்றிய 'அருணாசல சதகம்'; 'அருணாசல அக்ஷரமாலை', யாழ்ப்பாணத்து நல்லூர் கா. தியாகராஜப்பிள்ளை இயற்றிய 'அண்ணாமலையார் வண்ணம்'; ஸ்ரீமத் ஞான சித்த சுவாமிகள் அருளிய 'திருவண்ணாமலைப் பதிகங்கள்'; 'அண்ணாமலை பஞ்சரத்தினம்' 'உருத்திர சங்கிதைத் தோத்திரம்', 'சீர்பாத வகுப்பு', 'கடைக்கணியல் வகுப்பு', 'வேல்வகுப்பு', 'மயில் வகுப்பு', 'வேல்வாங்கு வகுப்பு', 'அருணகிரிநாதர் அருளிய 'கந்தரநுபூதி', 'பஞ்சரத்நத் திருப்புகழ்', குகை நமச்சிவாய தேவர் அருளிய, 'திருவருணைத் தனி வெண்பா' ஆகியன இடம் பெற்றுள்ளன.

பின்னர்ப் 'பிரமனும் விஷ்ணுவும் முறையே அன்னமும் பன்றியுமாகச் சிவசோதியைத் தேடிய உண்மை – வேதப் பிரமாணம்' இடம் பெற்றுள்ளது. வடமொழி சுலோகமும் மொழிபெயர்ப்புமாக உள்ளது.

அடுத்துத் 'தீபமாட்சி' என்ற தலைப்பில், திருவாசகம் முதலான நூல்களிலிருந்து தொகுக்கப்பட்ட பாடல்கள் உள்ளன. பின்னர்க் 'கார்த்திகை விரதம்' கார்த்திகை தீபப் பெருமை, விபூதி, உருத்திராக்கம்' பற்றிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

திருவண்ணாமலையைப் பற்றிய பக்திச் சுரங்கம் இத்தொகுப்பு நூல் எனலாம்.

## (ஸ்ரீ) அருணாசல வெண்பா (உரை)

*ஸ்ரீ சாதுஓம்*

'வெண்பா', யாப்பில் ஒருவகை. 'அருணாசலம்' என்பது 'திருவண்ணாமலை'. முதலில் 'பாயிரம், காப்பு' – 2 தவிர, 100 வெண்பாக்கள் உள்ளன. மூலமும் உரையுமாக அமைந்தது.

*"யாப்பவனுங் காப்பவனும் யானென் றெழும்புமிறு*
*மாப்படையா துட்குவித்து வாழ்வளித்துக் – காப்போன்*
*பரமான்ம வக்கினியாப் பார்மீ தெழும்பூ*
*தரமாம் அருணா சலம்!"*

எனும் இப்பாடற் பொருள்.

"நானே பெரியவன் என்று எழுந்த படைக்கும் பிரம்மாவும், காக்கும் விஷ்ணுவும் தத்தம் இறுமாப்பு நீங்குமாறு அவர்களை அந்தர் முகப்படுத்திப் பணியவைத்து வாழ்வளித்துக் காப்பாற்றி இப்பூவுலகின்மேல் பரமாத்ம அக்னிமலையாக எழுந்த இவ்வருணாசலமே!"

நூலின் இறுதியில் 'அருணாசலப் பிரதட்சண மாண்பு' – 10 பாடல்கள்; 'அருணாசல மஹாத்மியம்' (கிரிவல முறை) – 8 பாடல்கள் உள்ளன.

## அருணாசலீசர் பதிகம்

*(?)*

அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)

பதிகம் = 10 பாடல். திருவண்ணாமலை ஈசர் மீது பாடப்பட்ட 10 பாடல் கொண்டது.

இதில், முதலில் 'காப்பு' – 1ம் 10 பாடல்களும் உள்ளன.

*"உரைதங்கி நின்ற உயிரெங்குமாதி உலகெங்கு மேகவடிவாய்*
*கரைகண்டதில்லை வெகுகோடி காலங் கலிகால மாய்கையதனால்*
*இரைதேடி யாசை பசியான் மெலிந்துயிர் கண்டியங்கி விழுமின்*
*வரைதங்கிநின்ற வருணாசலீசர் வரவேணு மென்ற னருகே!"*

என்பது இதன் இறுதிப்பாடல். அனைத்தும் மூலபாடம்!

## (ஸ்ரீ) அருணாசலேஸ்வரர் பதிகம்

*சபாபதி முதலியார்.*

பதிகம் – 10. திருவண்ணாமலையில் வீற்றிருந்தருளும் அருணாசல ஈசுவரர்

மீது பாடப்பட்டது. தொடக்கத்தில் 'காப்பு' வெண்பா – 1. அடுத்து 'ஆசிரிய விருத்தப் பாக்கள் – 10 உள்ளன.

*"எனதுதலை நினையே யிறைஞ்சநின் சரிதமே*
*யெனதுசெவி கேட்க நின்போர்*
*எழிலுருவ நோக்குநாதனைக் காண வென்கண்க*
*ளினியநின் புகழ்வாய் சொலத்*
*தனதுறக் கண்டுகும் பிடவெனது கறுதலம்*
*தழையுநின் திருவுருமாம்*
*சைலராஜனை எனது கால்கள் வலம்வரவைத்து*
*சலனப் பொறிக்குட்பட*
*மனது நினையேநன்குணர்ந்திட வெனத்தினமும்*
*வாஞ்சித்து நினையடைந்தேன்!*
*மகதேவ நீபுறம் போக்காம லிற்சிறிய*
*மைந்தனை யெடுத்தாளுவாய்!*
*அனவரத நடனபா தாம்புஜ கிருபாகர*
*வநந்த மங்கள சொரூபனே?*
*அருணீ டுலாசமுநி வரர்நாடு நேசதிரு*
*வருணா சலேச முதலே!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூலபாடம்.

## அர்ச்சனை மாலை

*சிவம் (ப.ஆ)*

இந்நூலின் தொடக்கத்தில் 'ஆலயமே இறைவனின் உருவம்', எனும் கட்டுரை உள்ளது; இது, கோயில் அமைப்பு, விளக்கப் படங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது. அடுத்து 'ஆலய தரிசனம்' என்ற கட்டுரையில், கோயிலில் எவ்வாறு வழிபடுவது எனும் விவரம் உள்ளது.

'வடமொழி சுலோகம்' முதல் 'சோதி வழிபாடு' வரை அனைத்தும் உள்ளன. 12 திருமுறைப் பாடல்கள், 'திருவருட்பா, திருப்புகழ், அபிராமி அந்தாதி, திருவிளக்கு வழிபாடு எனப் பலவும் இடம்பெற்றுள்ளன.

இறைவனை நாளும் வழிபடுவோர்க்குப் பெரிதும் பயன்படும் நூல் இது!

## அவிரோத உந்தியார்

*தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்*

தவத்திரு. சிதம்பர சுவாமிகள் (உ.ஆ.) 'உந்தியார்' விளக்கம், முதல்தொகுதியில் உள்ளது. அவிரோதம் – அ விரோதம் – விரோதமற்றது.

இந்நூலின் தொடக்கத்தில், 'அருண்மிகு சாந்தலிங்க அடிகள் வரலாறு' உள்ளது. தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 13 பாடல்களில் அமைந்துள்ளது.

இவ் 'அவிரோத உந்தியார்' 100 பாடல்களும் 536 உதாரணப் பாடல்களும் கொண்டது. நூலின் தொடக்கத்தில் கணபதி, முருகக் கடவுள் வைழக்கம், நூலாசிரியர் பெயர் குறித்த 3 பாடல்கள் உள்ளன.

"பாடல் – பொருள் – விளக்கம்" என அமைந்துள்ளது.

"வீடு ஞானத்தன்றி மேவொணா தாகையால்
கூடுவோன் அந்தவாழ்(வு) உந்தீபற
கோதின்மெய்ஞ் ஞானியென்(று) உந்தீபற!"

என்ற பாடலுக்குரிய பொழிப்புரை:–

"முத்தி சாதனமாகிய சரியாதி நான்கனுள் ஞானம் ஒன்றுமே முத்தி சாதனமாம். மற்றைய மூன்றும் ஞானத்திற்குச் சாதனமன்றி, முத்திக்குச் சாதனமாகையால், அந்த முத்தியாகிய பேரானந்த வாழ்வைக் கூடுமவன் குற்றமற்ற மெய்யுணர்வை உடையோனே! – மற்றையர் அல்லர்! குற்றமாவது, ஐயம் திரிபு எனக் கொள்க!"

இதற்கு விளக்கமாக உரையாசிரியர், சிவஞானசித்தியார், திருமந்திரம், பிரபுலிங்க லீலை முதலான நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுகின்றார். உரையாசிரியரின் பன்மாண் நுழைபுலத்திற்கு இந்நூல் சான்று!

## (ஸ்ரீ) அழகிய கூத்தர் தோத்திராட்டகம்

செப்பறை சுவாமிகள் (மொ)

'அட்டகம்' என்பது 'எட்டு'. இச்சிறுநூலில் 8 போற்றிப் பாடல்கள் உள்ளன.

செப்பறையில் எழுந்தருளியுள்ள அழகிய கூத்தப் பிரான் மீது பாடப்பட்டது. இஃது, அக்கினி தேவர் ஆதி செய்த சுலோகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பாகும். மூலமட்டுமே உள்ளது.

"நமச்சிவாய நன்மனுவை நயந்தொருகாற் சொல்வோர்க்குந்
தமசதிலா வின்பருள்வோய் சங்கேந்துஞ் சத்தியுளோ
யமைதருமுக் கண்ணுடையோ யன்றினயர் புரமழித்தோ
யமலவழ கியகூத்தோ யடிபோற்றி போற்றியவே!"

என்பது அவற்றில் ஒன்று!

## அறப்பளீசுர சதகம் (உரை)

அம்பலவாணக் கவிராயர்

புலவர் அரசு (உ.ஆ)

'சதகம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல், சதுரகிரி என்னும்

திருப்பதியில் உள்ள 'அறப்பள்ளி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமானை வாழ்த்தும் முறையில் உலகியல் பற்றிக் கூறுவது.

கொல்லிமலைச் சார்பில் உள்ள சதுரகிரியில் உள்ள திருக்கோயில், சதுரகிரிக்கே அறப்பள்ளி எனப் பெயருண்டு என்றும் கூறுவர்.

இந்நூலில், 'காப்பு' 1 தவிர 100 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்புக்கொடுக்கப்பட்டுள்ளது. 'இல்லாளின் சிறப்பு' என்ற தலைப்பில் பின்வரும் பாடல் உள்ளது:

"கணவனுக் கினியளாய், ம்ருதுபாஷி யாய்மிக்க
கமலை நிகர் ரூபவதியாய்க்
காய்சினம் இலாளுமாய் நோய்பழி யிலாததோர்
கால்வழியில் வந்த வளுமாய் . . .
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே!"

பாடலையடுத்துப் பொருளும், விளக்கவுரையும், கருத்துரையும் உள்ளன. இதற்கு உரையாசிரியர் தரும் விளக்கவுரை :-

"இரதியென லீலை புரிதலும், மகிழ்நன் சொல்வழி நிற்றலும் பிற்கூறப்பட்டனவாதலால் முதலில் கூறிய இனிமை அழகினால் இனிமையூட்டுதலை மட்டுங்குறிப்பதாகும். மற்றைய பண்புகள் பெண்களுக்குப் பொதுவானவை. நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன பெண்களின் இயல்புக்குக் காவலான படைகள் . . . இங்குக் கூறப்பட்டவை கற்புடைய பெண்களின் பண்புகள் . . .

– இவ்வாறு உரைவிளக்கம் உடைய நூல்.

## அற்புதத் திருப்பதிகங்கள்

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்

தா. குருசாமி தேசிகர் (ப.ஆ).

சுந்தரர் தேவாரம் – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் சுந்தரர் அருளிய தேவாரப் பதிகங்களில், 12 திருத்தலங்களில் பாடப்பட்டவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன. (மூலம் மட்டும்) நாளும் ஓதுவதற்கு உரியது.

## அற்புதத் திருவந்தாதி

காரைக்கால் அம்மையார்

கி. பழநியப்பனார் (ப.ஆ.)

'அற்புதத் திருவந்தாதி' நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'தவத்திரு பார்வதி அம்மையார் வாழ்க்கை வரலாறு'

உள்ளது. அடுத்துக் ‘காரைக்கால் அம்மையார் வரலாறு’ இடம்பெற்றுள்ளது. பின்னர் அற்புதத் திருவந்தாதி – 101 பாடல் மூலமட்டும் உள்ளது.

“அன்றுந் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் – என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிறான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்உருவம் ஏது!”

என்பது அவற்றில் ஒன்று!

# 'ஆ'

## ஆகமநெறி யகவல்

(?)

'அகவல்' என்பது யாப்பில் ஒருவகையான ஆசிரியப்பா. ஆகமநெறி பற்றி அகவற் பாவாலானது. 54 அடிகள் கொண்டது. மூலமட்டுமே உள்ளது.

"சத்தினி பாதம் தான்பிறந் திதயம்
சுத்தம தடைந்து தொல்லைமூ வுலகும்"

என்று தொடங்குவது.

"ஆணவ மாயை அவையினில் தோன்றும்
மறப்பு நினைப்பு மாற்றிடி லல்பகல்
அற்ற வீடென்றே அறைந்திடும் ஆகமம்"
என்பது இந்நூல் நுகலும் கருத்து.

## ஆனந்த அலை (சிவானந்த லஹரி)

ஆதிசங்கர பகவத் பாதர்

சு. உமைதாணுபிள்ளை (மொ)

சிவானந்த லஹரி = சிவானந்தப் பெருக்கு. ஆதிசங்கரர் பாடியது. இவ் ஆனந்த அலையை உணர்ந்து படிக்கப்படிக்க இவ்அலைகள் தம் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் மோதி, அங்குப் படியும் அழுக்கைப் போக்கும் ஆற்றல் பெற்றவை.

இந்நூலின் தொடக்கத்தில் 'சங்கரர் துதி' – 17 பாடல்கள்; அடுத்து 'விநாயகர் துதி' – 5 பாடல்; 'குருநாதரின் துதி'; – 1 பாடல். 'ஆத்மா அர்ப்பணம்' – 1 பாடல்; 'நம்பன் நாமங்கள்' – 1 பாடல் அடுத்து 'ஆனந்த அலை' – 100 பாடல்கள் : ஒவ்வொன்றுக்கும் உரிய தலைப்பு; பாடலையடுத்துச் சிறுகுறிப்பு என அமைந்துள்ளது. பின்னர் 'அனுபந்தம்' என்ற தலைப்பில் சில பாடல்கள்; 'நமசிவாய பஞ்சகம்' முதலான தலைப்புக்களில் சில பாடல்கள் உள்ளன.

"குன்றுங் குகையும் மலையுச்சி
கூரை வேய்ந்த சிறுகுடிலும்
நின்ற நெருப்பும் நீர்நிலையும்
நிதமும் வாழ்க்கை நிலையறிலென்?
ஒன்று முணர்வை உன்றன்பால்
ஒருநிலை கொள்ளும் அன்னவரே
வென்றி மிக்க யோகியராய்
வீட்டி னின்பம் நுகர்வாரே!"

என்ற பாடலுக்கு, "பக்தி செய்வதற்காக இடத்தைத் தேடவேண்டாம். இருந்த இடத்தில் இருதயத்தில் இறைவனைப் போற்றுவதே தவம் யோகமாகும்!" என்று குறிப்புரை தருகின்றார் ஆசிரியர்.



## இருபா இருபஃது (விரிவுக்கட்டுரை)

திருத்துறையூர் அருணந்தி தேவநாயனார்

தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் (உ.ஆ.)

'இருபா இருபஃது' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், முதற்கண் வெண்பாவும், அடுத்து 'நேரிசை ஆசிரியப்பா'வுமாக விரவி வந்துள்ளன. வெண்பா – 10; ஆசிரியப்பா – 10 என 20 பாடல்கள்.

இந்நூலின் உரையாசிரியர், ஒவ்வொரு செய்யுளுக்கும் ஏற்ற தலைப்புக் கொடுத்து, இன்றியமையா இடங்களில் செய்யுளின் வினாக்களையும் விடைகளையும் தொகுத்துக் கூறி விளக்குகின்றார். ஒவ்வொரு செய்யுளின் கருத்தையும் சுருக்கமாகக் கூறி, இடையிடையே இலக்கிய நயத்துடனும் தக்க மேற்கோள்களுடனும் சித்தாந்த சைவ அருங் கருத்துக்களை ஆங்காங்குப் புலப்படுத்துகின்றார்.

"கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் – வெஃண்ணெய் நல்லூர்
மெய்கண்டான் என்றொருகால் மேவுவராஃ வேறின்மை
கைகண்டார் உள்ளத்துக் கண்"

எனும் முதற்பாடலுக்கு இந்நூல் உரையாசிரியர் தரும் விளக்கம்:

"ஒரு மேஜையின்மேல் பல்வகைப் பல்வகைச் சித்திரங்களை உடைய விரிப்பு விரிக்கப்பட்டுள்ளது. அவ்விரிப்பின்மேல் ஒரு புத்தகம் வைக்கப் பட்டுள்ளது. 'புத்தகம் எங்குள்ளது?' என்று கேட்பானுக்குப் புத்தகம் மேஜைமேல் உள்ளது என்றுதான் கூறுவோம். விரிப்பின் மீதுள்ளதென்று கூறமாட்டோம். அல்லது சித்திரத்தின் மேலுள்ளதென்றும் செப்ப மாட்டோம். வெளிப்பார்வைக்குப் புத்தகம் விரிப்பின் சித்திரித்தின் மேலே தான் இருக்கிறதெனத் தெரிகின்றது. என்றாலும், புத்தகத்தைச் சித்திரமோ, விரிப்போ ஆதாரமாயிருந்து தாங்கவில்லை. அதனால்தான் ஆதாரமான மேஜையை நாம் கூறுகின்றோம். மேஜையின் வியாபகமே புத்தகத்துக்கு ஆதாரமாயுள்ளதென்று உண்மை நமக்கு இயற்கையிலேயே புத்திக்குப் படுகிறது. இவ்வாறே நாம் உலகில் உடம்புள்

இருப்பினும், சிவ வியாபகத்துள்ளேதான் இருக்கின்றோம் என்பதை உணர வேண்டும். மேஜை, சுட்டுப் பொருளாதலால் கண்ணுக்குத் தெரிகிறது. சிவம், சித்துப்பொருளாதலால் கண்ணால் அறிய முடிவதில்லை. அறிவு, கண்ணுக்குப் புலப்படும் உருவுடைத்தன்று. மேஜைக்கும் புத்தகத்துக்கு முள்ளது போன்ற 'வேறின்மைத் தன்மை' நமக்கும் சிவத்துக்கும் நீங்காமல் எப்போதும் உள்ளதென்ற உணர்வு நமக்கு வாய்க்க வேண்டும். இந்த உணர்ச்சியே, சித்தாந்த சைவத்தின் அடிப்படை!"

– இத்தகைய அரிய – எளிய விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## இருபா இருபஃது (தெளிவுரை)

அருணந்தி சிவாசாரியார்

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ)

'இருபா இருபஃது' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில், 'நூலின் அமைப்பும் அழகும், நுவலும் பொருள், முப்பொருள் உண்மை, குருவருள், திருமுறைக் கருத்துக்கள், முன்னோர் மொழி பொருள், ஆசிரியர்' என உட்தலைப்புக்கள் உள்ளன. 'இருபா இருபஃது' நூலின் பாடலைக் கூறி, அடுத்துத் 'தெளிவுரை' தருகின்றார் உரையாசிரியர்.

"அறிவு அறியாமை யிரண்டும் அடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே! – யறிவோ
அறியேனோ யாதென்று கூறுகேன் ஆய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு!"

என்னும் பாடலுக்குப் பின்வருமாறு தெளிவுரை தருகின்றார் உரையாசிரியர்:

"மெய்கண்ட தேவனே! அடியேன் ஒருகால் அறிந்தும், ஒருகால் அறியாமலும் ஆக இவ்விரு நிலைமையும் கூடி வருகின்றேன். இந்நிலையில் அடியேனை, அறிவுடைய பொருளெனக் கூறுவதா? அறிவற்ற பொருளென்று கூறுவதா? இதற்குரிய விடையை ஆய்ந்து, அடியேன் மாறுகூறாவண்ணம் அறிவித்தருள்வாயாக!"

இனி இதற்குரிய விளக்கமும் தருகின்றார்:–

"உயிர், அறிவுடையதோ அன்றோ என்பது கேட்கப்படும் வினாவாகும். உயிர், தானாக எதனையும் அறியும் திறத்ததன்று. உணர்த்த உணரும் திறத்தது என்பதும், தான் சார்ந்த பொருளின் திறத்ததாய் அதனறிவு விளங்கும் என்பதும் அதற்குரிய விடையாகும்!"

இப்பாடலில் அருஞ்சொற் பொருளும் தந்து, மேற்கோளும் தருகின்றார் உரையாசிரியர். இவ்வாறு அமைந்துள்ள நூல் இது!

## ‘ஈ’

**ஈங்கோய் மலை எழுபது**

இராசவல்லிபுரம் திருவள்ளுவர் மடம் (ப.ஆ)

இதில், அச்சில் வெளிவராத 48 முதல் 62 முடிய 15 பாடல்கள் உள்ளன.

“தேன் பலவின் வான்சுளைகள் செம்முகத்த பைங்குரங்கு
தான்கொணர்ந்து மக்கள்கை யிற்கொடுத்து – வான்குணங்கள்
பாராட்டி யூட்டுஞ்சீர் ஈங்கோயே பாங்கமரர்
சீராட்ட நின்றான் சிலம்பு!”

என்பது அவற்றில் ஒன்று!

# ‘உ’

## உண்ணாமுலையம்மன் சதகம்

*சின்னகவுண்டர்*

சதகம் – 100. ‘சதகம்’ விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலையம்மை மீது பாடப்பட்டது.

இந்நூலின் தொடக்கத்தில் ‘காப்பு’ – 1 வெண்பா; அடுத்து ‘அவையடக்கம்’ – 1 பாடல்; நூல் – 100 ஆசிரிய விருத்தப் பாக்கள்; இறுதியில் ‘வாழி’ – 1 ஆக 103 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் ‘தலைப்பு’க் கொடுக்கப்பட்டுள்ளது.

‘பழவினைப்பயன்’ என்ற தலைப்பில் உள்ள பாடல்:

*“பொன்னுலகை யாளிந்திர னகலியா லாயிரம்*
*பொருதுவிழி யுருவ தானான்;*
*புகழரிச் சந்திரன்விசு வாமித்திர முனியினால்*
*புலையனுக் கடிமை யானான்!*
*முன்னநள்னைச் சனிய னானவர் தொடுத்தவர்*
*முயன்றென்ன பாடுபட்டார்*
*முகுந்தர் ஜானகியுடன் பதினான்கு வருடமும்*
*மொய்வனந்தனி லுறைந்தார்;*
*பன்னரிய சேடனும் குன்மவலி யாலுடல்*
*பதைத்தக மெலிந் துழன்றான்;*
*பகருமுன் பெரியோர்கள் விதியா லலைந்திட்ட*
*பண்டுகதை கேட்டிருந்தும்*
*தன்னைமுன் வினைவிடா தென்றிராமல்*
*மனிதர்தான் விசனமடைவ தேதோ*
*தருமேவு மருணைகிரி யீசர்பா லுறையுலகு*
*தாயுணா முலையம்மையே!”*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூலபாடம்!

**உண்ணாமுலையம்மன் பதிகம்**

*(?)*

அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)

பதிகம் – 10 பாடல். திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலை அம்மன் மீது பாடப்பட்டது.

தொடக்கத்தில் 'காப்பு வெண்பா' – 1 பாடல்; அடுத்துச் 'சந்த விருத்தம்' பாக்கள் – 10 உள்ளன.

*"விலைமாதர் தங்கள் நிலையே மெய்யென்று விரிவான உலகந்தனில்*
*அலைவாய்த் துரும்புபோலே உழன்றவடி யேனை யாராளுவார்*
*கலைதேடிக் காணாதொளிரு மப்ரசித்திக் கனத்தோர்கள் புகழுமண்ணா*
*மலைமேவு உண்ணா முலைநாம தேவி வரவேணு மென்றனருகே!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூல பாடம்!

**உண்மை விளக்கத்தின் உதவிக் கட்டுரை**

*திருவதிகை ஸ்ரீ மனவாசகங் கடந்த நாயனார்*

தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் (உ.ஆ.)

'உண்மை விளக்கம்' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூலும் – நூலாசிரியரும்' எனும் கட்டுரை உள்ளது. அடுத்து 'உண்மை விளக்கம்' – பாடல், பொழிப்புரை, விளக்கவுரை என அமைந்துள்ளது. இவற்றுள் 'விளக்கவுரை' மிக நீண்டது; பயனுள்ளது.

'சுத்த வினா விண்ணப்பம்' என்ற தலைப்பில் வரும் பாடல்:–

*"பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந் தப்பொருணாம்*
*பெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் – பொய்காட்டா*
*மெய்யா! திருவெண்ணெய் வித்தகா! சுத்தவினா*
*ஐயா! நீ தான்கேட் டருள்!"*

இதற்கு உரையாசிரியர், பொழிப்புரை, விளக்கவுரை தருகின்றார். 'விளக்கவுரை'யில் வரும் ஒரு சிறுபகுதி :–

"ஒரு தொழிலாளியிடம் ஒரு பொருளும். அதனை வேண்டும் உருவாக்கிக் கொள்வதற்கு ஏற்ற கருவிகளும் தரப்பட்டால், அத்தொழிலாளி அறிவுடையவனாயின், அக்கருவிகளைத் தக்கவாறு பயன்படுத்தி, அம்மூலப் பொருளை அநுபவயோக்கியமான பொருளாக மாற்றிப் பின் அதனை விற்றுப் பொருளீட்டிப் போகம் துய்ப்பான். இங்ஙனம் செய்யாமல் கருவிகளின் அழகிலும் அமைப்பிலுமே ஈடுபட்டு அவற்றால் ஆக வேண்டிய தொழிலைச் செய்து கொள்ளாமல் மயங்கிக் கிடப்பானாயின், அவன் சாமானைச் செய்து,

அமைக்காமையினாலே அதனாலாகிய செல்வத்தைத் தேடி அடையாமல் பசித்துன்பத்தையே அநுபவித்து வருந்தித் தொலைவான். இவ்வாறே, நாம் நமது நன்மைக்கென இறைவனால் அருளப்பட்ட தத்துவமாதி கருவிகளைப் பயன்படுத்தி, ஆன்மலாபம் அடைந்து, சாயுச்சிய இன்புள் அழுந்த வேண்டும். இங்ஙனம் செய்யாது வாளா உலகின்பால் மயங்கிக் காலம் தள்ளுவோமாயின் இறைவன் ஆணைப்படி நாம் நடவாமையாலான துயரங்கட்கு உட்பட வேண்டியிருக்கும். . . இருளைப் போக்குவதற்கு வெளிச்சம் பயன்படுவது போலவே, நமது மலபரிபாகத்துக்குச் சிவஞானம் இன்றியமையாதது . . .''

இத்தகு அரிய விளக்கங்களைத் தன்பால் கொண்ட நூல் இது!

## உண்மை விளக்கம்

*திருவதிகை மனவாசகம் கடந்தார்*

ஆ. ஆனந்தராசன் (உ.ஆ).

'உண்மை விளக்கம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூல்முகம்' உள்ளது. இதில், 'ஆசிரியர், நூலின் அமைப்பு, நூல் கூறும் பொருள்கள்' ஆகியன சொல்லப்பட்டுள்ளன. இதில், 'காப்புச் செய்யுள்' 1 தவிர, 53 செய்யுட்கள் உள்ளன.

ஒவ்வொரு செய்யுட்கும் உட்தலைப்பு; செய்யுளையடுத்துப் 'பொருள்'; அடுத்து 'விளக்கம்' என அமைந்துள்ளது. "ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக'' என்று தொடங்கும் பாடலுக்கு, 'ஆணவமும் வினையும்' எனத் தலைப்பிட்டுப் பாடற் பொருள் தருகின்றார் உரையாசிரியர்.

'இதுவரை முப்பத்தாறு தத்துவங்களையும் முறையாகக் கூறி முடித்தோம். இனி, உயிரை விட்டு நீங்காதிருக்கும் ஆணவம், வினை என்னும் இரண்டு மலங்களின் இயல்பினை உனக்கு உரைப்போம். உனது அறிவை மறைத்து அறியாமையைத் தருவது ஆணவம். உனக்கு இன்ப துன்ப நுகர்ச்சிகளைத் தருவது நல்வினை தீவினை என இருவகைப்படும் வினையாகும் என்று அறிவாயாக!''

அடுத்துள்ள 'விளக்கம்' என்ற பகுதியில்,

"உயிர்களாகிய நாம் அறிவுப் பொருள். அறிவுப் பொருளாகிய நம்மிடத்தில் அறியாமையும் இருக்கிறது. எவ்வாறெனில், ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருகின்ற பிறப்பு இறப்புக்களில் அகப்பட்டுத் துன்புற்று வருகின்றோம். ஆயினும் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தோம் என்பதையோ, பிறவி நமக்குத் துன்பம் தருவது என்பதையோ உணராதிருக்கிறோம். நாம் செய்த வினைகாரணமாகவே பிறவியும் துன்பமும் வருகின்றன என்பதையும் நாம் உணர்வதில்லை! இப்பிறவியிருந்து நம்மை எடுத்துக் காத்துப் பேரின்பத்துள் வைக்கவல்ல இறைவனது திருவருளையும் நாம் அறியாமல் அதனைப்பற்றிச் சிறிதும் கவலை

கொள்ளாமல் வாழ்கின்றோம்!'' என இவ்விளக்கம் நீண்டு கொண்டே செல்கிறது.

– இத்தகைய விளக்கங்கள் கொண்ட நூல் இது!

## உண்மைவிளக்கம் (உரை)

*மனவாசகங் கடந்தார்*

சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் (உரை)

'உண்மை விளக்கம்' நூலைப் பற்றிய குறிப்பு, முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'நூன்முகம்' உள்ளது. சைவ சித்தாந்த சாத்திர நூல் பதினான்கில், ஆறாவதாக இடம் பெற்ற நூல் 'உண்மை விளக்கம்'. இதில், 'காப்பு, சிறப்புபாயிரம்' உட்பட 56 வெண்பாக்கள் உள்ளன.

பாடலின் தொடக்கத்தில் அதன் கருத்தைக் கூறிப், பின்பு அருஞ்சொற்பொருள், விரிவான விளக்கவுரை தருகின்றார் உரையாசிரியர்.

*''அக்கரங்கட்கு எல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்*
*மிக்க உயிர்க்குயிராய் மேவினோம் – எக்கண்ணும்*
*நில்லா இடத்துஉயிர்க்கு நில்லாது அறிவுஎன்று*
*நல்லா கமம்ஓதும் நாடு!''*

எனும் பாடலுக்கு முன்னுரையாக வருவது:–

''எழுத்துக்கள் எல்லாவற்றிலும் அகரவுயிர் நிற்கின்றது. அதுபோல, யாம் எல்லாவுயிர்க்கும் உயிராயிருக்கின்றோம். எவ்விடத்தும் யாம் நில்லாக்கால் உயிர்க்கு அறிவு நில்லாது. சிவாகமங்கள் (இதை) உணர்த்தி நின்றன. அவற்றை ஆராய்ந்து கொள். (இது குருமொழி)''

இதன்பின் 'குறிப்பா'கச் சொற்பொருள் அமைந்துள்ளது: ''அக்கரம் – அக்ஷரம், அழிவில்லாதது. க்ஷரம் – அழிவது. அகரவுயிர் – அகரமாகிய உயிரெழுத்து; மிக்க உயிர் – அநேகம் ஆகிய ஆன்மாக்கள். உயிர் – ஏகனான பரமாத்ம. 'மேவினேம்' என்பது இறந்தகாலத்ததாயினும் நிகழ்காலப் பொருளிற் கொள்ளற் பாலது. கண் – இடம்; எங்கண்ணும் – எங்கணும், எங்கும். நில்லா இடத்து – பொருந்தாக்கடல்; அவ்வியாபகமானால் என்றவாறு; நில்லாது – விளங்காது என்னும் பொருட்டு. நல்லாகமம் – சிவாகமம். நன்மை – சிவம்; ஓதும் – சொல்லும்; நாடு – ஆராய்ந்து கொள்''. இதனையடுத்துப் பல பக்கங்களில் விளக்கம் சொல்லப்பட்டுள்ளது. இவ்வாறே ஏனைய பாக்களுக்கும் அரிய விளக்கம் தரும் நூல்.

## உண்மை விளக்கம் (தெளிவுரை)

*திருவதிகை மனவாசகங் கடந்தார்*

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ)

'உண்மை விளக்கம்' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ஓர் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில், 'உண்மை விளக்கம், நூற்சிறப்பு, நுவலும் பொருள், தத்துவங்கள், இறை இயல்பு, திருக்கூத்தின் இயல்பு, திருவைந்தெழுத்தின் உண்மையும் பெருமையும், முத்தியின் இயல்பு, உயிரும் தளையும், வீடடைதற்குரிய வாயில், நன்றியறிதல், நூலாசிரியர் முதலான உட்தலைப்புக்கள் உள்ளன.

'முத்திக்கு வாயில்' எனும் தலைப்பில் வரும் பாட்டு:–

*"அப்பாஇம் முத்திக்(கு) அழியாத காரணந்தான்*
*செப்பாய் அருளாலே; செப்பக்கேள் – ஒப்பில்*
*குருலிங்க வேடம்எனக் கூறில் இவை கொண்டார்*
*கருவொன்றி நில்லார்கள் காண்!"*

இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரையும் விளக்கவுரையும் வருமாறு:–

"குருமூர்த்தியே! இம்முத்தியை அடைதற்கு நிலையான வாயிலை அருள்கூர்ந்து கூறியருள்வீராக என மாணாக்கர் வேண்ட ஆசிரியரும் கூறுகின்றார்: உன் வினாவிற்குரிய விடையை யாம் கூறக் கேட்பாயாக! ஒப்புயர்வற்ற 'குரு–லிங்க – சங்கம வழிபாடே, முத்தி அடைதற்குரிய வாயிலாம் எனச் சிவாகமங்களே கூறுமாயின், அவ்வழிபாட்டினைச் செய்துவரும் நல்லோர் மீண்டும் பிறவார் என்பதும் விளங்குமன்றோ? இவ்வுண்மையை நீ அறிவாயாக!

தான், ஏ – என்பன அசைநிலைகள். குரு, அறியாமையை நீக்குபவர். தன்னையும் தலைவனையும் முன்னை வினையின் முடிபையும் நன்கறிந்து, தன்பால் வந்தடைந்தோர்க்கு உண்மையை உணர்த்தி, வீடுபேறு அடைவிப்பவரே ஞானாசிரியர் அல்லது குரு எனப்படுவார். இலிங்கம் – இது, திருக்கோயிலின் உள்ளிருக்கும் திருமேனியாகும். 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாம் நீணாகம் அணிந்தார்க்கும் நிகழ்குறியாம் சிவலிங்கம்' என்பர் சேக்கிழார். திருக்கோயில்தனில் எழுந்தருளிவிக்கப் பெற்றிருக்கும் இத்திருமேனி, இறைவனுக்குரிய அடையாளம் ஆகும். இதனை இறைவனாகவே கண்டு வழிபடவேண்டும். சங்கமம் – அடியவர்".

– இத்தகைய விளக்கங் கொண்ட நூல் இது!

## உருத்திர சங்கிதைத் தோத்திரம்

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)*

தோத்திரம் – வழிபாடு. திருவண்ணாமலை ஈசர் மீது பாடப்பட்டது. இந்நூலில் 20 பாடல்கள் உள்ளன.

*"துங்கமான கயிலை மலையனே!*
*துலங்கு செஞ்சடைச் சூடுமலையனே!*

*மங்கை யாளுமை யாள்மண வாளனே!*
*மாலயன் சிரங் கொய்யந்த வாளனே!*
*வெங்கை யானை யுரித்த விடலையே*
*விரும்பி னார்தமை யாண்டு விடலையே!*
*எங்கள் பாச மறக்கர மாவையே*
*ஈடழித் துரித்தாய்கர மாவையே!"*

என்பது அவற்றில் ஒன்று. மூல பாடமே உள்ளது.

# 'எ'

## என்னிய என்னியாங்கு ஈயும் திருமுறைத்திரட்டு

*சிவஸ்ரீ தற்புருஷ தேசிகர் (தொ. ஆ).*

இந்நூலின் தொடக்கத்தில், 'வாழ்த்துரை' உள்ளது. குருவருளைக் கொடுப்பது, இம்மை நலங்களை வழங்குவது, வினைநீக்கம் செய்வது, இடர் களைவது' முதலான 90 நன்மைகள் குறிப்பிடப்பட்டு, அவற்றிற்குரிய தேவார திருவாசகப் பாடல்கள் தரப்பட்டுள்ளன.

'வருத்தங்களைத் தீர்ப்பது' எனும் தலைப்பில் பின்வரும் பாடல் தரப்பட்டுள்ளது.

*"என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே*
*யிருங்கடல் வையத்து*
*முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை*
*முழுமணித் தரளங்கள்*
*மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி*
*வாணனை வாயாரப்*
*பன்னி யாதரித் தேத்தியும் பாயும்*
*வழிபடு மதனாலே!"*

– இது, சம்பந்தர் அருளிய திருவலஞ்சுழிப் பதிகம். இவ்வாறே ஒவ்வொரு பயனுக்கும் ஒவ்வொரு பாடல்! மூலபாட மட்டுமே உள்ளது!

# ‘க’

## கன்னப்ப நாயனார் புராணம் (உரையுடன்)

*சேக்கிழார்*

*சி.கே. சுப்பிரமணிய முதலியார் (உ.ஆ)*

பெரியபுராணத்தின் ஒருபகுதி ‘கண்ணப்ப நாயனார் புராணம்’. பெரிய புராணம் – விளக்கவுரை முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், திருக்காளத்தித் தேவாரத் திருப்பதிகங்கள்’ உள்ளன. இதில், சம்பந்தர் – 22 பாடல்; அப்பர் திருத்தாண்டகம் – 11 பாடல்; சுந்தரர்– 10 பாடல்கள் அடங்கியுள்ளன. அடுத்துக் ‘காளத்தியையும் கண்ணப்பரையும் பற்றிய சைவத் தெய்வப் பன்னிருமுறைத் திரட்டு’ என்ற பகுதி உள்ளது. இதில் மூவர் பாடியன தவிர, பூந்துருத்தி நம்பிகாடநம்பி, திருமூலர், நக்கீரதேவ நாயனார், கல்லாட தேவ நாயனார், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் பாடல்களும் உள்ளன. சம்பந்தர், அப்பர், சுந்தரர், திருமூலர் ஆகியோர், திருக்காளத்தியை வணங்கியது குறித்துச் சேக்கிழார் பாடிய பாடல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

பெரியபுராணத்தில் கண்ணப்ப நாயனார் புராணத்தில் சொல்லப்பட்டுள்ள 181 பாடல்கள். அவற்றின் பொருள், விளக்கவுரை சொல்வளம் ஆகியன அருமையாகத் தரப்பட்டுள்ளன.

இப்புராணத்தில் 103 ஆவது பாடல்:–

*“நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்*
*பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானமேறி .*

– இதில் வரும், ‘பேணு . . . ஏறி’ என்பதற்கு, இவ் உரையாசிரியர் தரும் விளக்கம் வருமாறு:–

“இங்குத் தத்துவமென்றது, சுத்தம், அசுத்தம் என்ற இருவகை மாயையினின்றும் தோன்றிய ‘நிலமுதல் சிவம்’ ஈறாகவுள்ள முப்பத்தாறினையுமாம். இவைகளைத் ‘தத்துவம்’ என்றது, எல்லா உயிர்களுக்கும் போகத்தைக் கொடுப்பனவாய்ப் பிரளயம் வரை உள்ளன என்னும் பொருள் பற்றியாம். நிலம் முதலாக ஒவ்வொன்றினையும் ஏறி, அனைத்தையுங் கடந்து, பரம்பொருளை அணைதற்குப் படிகள் போல இவை அமைதலின் ‘தத்துவப்படி –

தத்துவ சோபானம்' என்பர். முதலாவதாகிய 'நிலம்' நூறுகோடி யோசனைப் பரப்புடையது. நிலத்துக்குப் பத்து மடங்கு விரிந்தது 'அப்பு' தத்துவம்; இவ்வாறே 'அப்பு' முதல் 'குணதத்துவம்' வரை ஒன்றுக்கொன்று பத்துமடங்கு விரிவுள்ளன. அதன்மேற் 'பிரகிருதி' முதல் 'அசுத்தமாயா தத்துவம்' வரை ஒன்றுக்கொன்று நூறு மடங்கு விரியும். 'சுத்த வித்தை' முதல் 'சதாசிவ தத்துவம்' வரை ஒன்றுக்கொன்று ஆயிர மடங்கு விரிவுமுடையன. அதன் மேற் 'சத்தி தத்துவம்' இலக்கம் மடங்கு விரிவுடையது.

அதன்மேற் 'சிவதத்துவம்' எல்லை கடந்தது. இவ்வாறு இவை ஒன்றினொன்று மேல் விரிந்து செல்லுதலின் 'பெருகு சோபானம்' என்றார்!"

– இவ்வாறு, சொல்லுக்குச் சொல், பொருளுக்குப் பொருள் விரிவாக எழுதப்பட்ட நூல் இது.

இவ் உரையாசிரியர், நாயன்மார் வாழ்ந்த இடங்களுக்கு நேரிலே சென்று, பார்த்துப் படங்களுடன் வெளியிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

பெரிய புராண நூலுக்கு ஆயிரக்கணக்கான பக்கங்களில் உரை எழுதப்பட்ட ஓர் அரிய நூல் இது!

## கந்தபுராணச் சுருக்கம் (வரலாறு மட்டும்)

கச்சியப்ப சிவாசாரியர்

தா. குருசாமி தேசிகர் (ப.ஆ)

'கந்த புராணம்' நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'மூவகை உதவி' முதலிய 19 பாடல்கள் உள்ளன. 'கந்தபுராண உட்கிடக்கை' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை. அடுத்துக் 'கந்த புராண வரலாறு' என்ற தலைப்பில், காண்டத்துக்கு 1 பாடல் வீதம் 7 பாடல்கள் இவற்றிற்கு விரிவான விளக்கங்கள்; 'வள்ளியம்மையார் திருமணத் தத்துவம்', 'தோத்திரப் பாடல்கள்' உள்ளன.

"மாயையின் வலியோ னாகி மான்முத லோரைச் செற்றே
ஆயிரத் தோரெட் டண்டம் அரசுசெய் துகநூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்றாள் சென்னி சேர்ப்பாம்"

என்பது, 'தட்சகாண்டத்'தில் வரும் பாடல்.

இக் காண்டத்தில் இடம்பெறும் கதை முழுதும் இப்பகுதியில் உள்ளது. கந்தபுராணத்தைப் பற்றிச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள இந்நூல் உதவும்.

## கந்தபுராண மூலமும் உரையும்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

ம. தி. பானுகவி (உ.ஆ.)

'கந்தபுராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 3ஆவது 'மகேந்திர காண்டம்' முதல் 'தட்ச காண்டம்' வரை – 4 காண்டங்கள் உள்ளன. மொத்தம் 6 காண்டங்கள் – 10, 346 திருவிருத்தங்கள்; இவற்றில் 4 காண்டங்கள் – 2067 திருவிருத்தப் பாக்கள் இந்நூலில் உள்ளன.

'பாடல் – பொருள் – குறிப்பு' எனும் முறையில் உள்ளது.

"வந்தான் முதலெடுத்த வள்ளிக் குழியில் வைகு
நந்தா விளக்கனைய நங்கை தனைநோக்கி
யிந்தா விஃதோ ரிளங்குழவி யென்றெடுத்துச்
சிந்தா குலந்தீரத் தேவிகையி லீந்தனனே!"

என்பது, 'வள்ளியம்மை திருமணப் படலப்' பாடல்.

இதற்கு உரையாசிரியர் தரும் பொருளும் குறிப்பும்:

"வந்தவன், கிழங்கெடுத்த வள்ளிக் குழியிற் கிடக்கின்ற கெடாத மாணிக்கத் தீபம் போன்ற சுந்தரியைப் பார்த்து, 'இந்தா, இவ்விடத்திலொரிளங் குழந்தை' யென்றெடுத்து, மனவருத்தம் ஒழியத் தனது மனைவியின் கையிற்கொடுத்தனன்!

'இந்தா' என்பது, 'இங்கு' என்னும் பொருளது. செந்தமிழ் நாட்டுத் தென்பாண்டி நாட்டில் வழங்கும், 'இந்தாயிருக்கு, இந்தாடா, இந்தாடி, இந்தாலே' என்பவைகளாலுணர்க! இந்தா – இவ்விடத்து"

– இத்தகைய எளிய பொழிப்புரையுடன் கூடிய நூல்.

## கந்தபுராணம் - வள்ளியம்மை திருமணப் படலம் (உரை)

கச்சியப்ப சிவாசாரியார்

ச. சாம்பசிவன் (உ.ஆ)

'கந்தபுராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 'கடவுள் வாழ்த்து' நீங்கலாக 267 செய்யுட்கள் உள்ளன.

ஒவ்வொரு பாடலுக்கும் 'பொழிப்புரை, குறிப்புரை' என அமைந்துள்ளது. மேலும் பாடலுக்கு ஏற்ற தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளது.

"கண்ணுதல் ஒருவன் தானுங் கவுரியுங் கண்ணாற் கண்டு
தண்ணளி புரிந்து நிற்பத் தண்டுழாய் முடியோன் ஆதிப்
பண்ணவர் உவகை நீடிப் பனிமலர் மாரி வீசி
அண்ணலை வழிபட் டேத்தி அஞ்சலி புரிந்திட் டார்த்தார்!"

எனும் பாடலுக்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை:–

"நெற்றிக் கண்ணையுடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானும்

உமாதேவியாரும் (இத்திருமணக் காட்சியைக்) கண்களாற் கண்டு, திருவருள் செய்து நிற்கக், குளிர்ந்த துளசிமாலையை அணிந்த திருமுடியினையுடைய திருமால் முதற்கொண்டு அமரர் அனைவரும் மகிழ்ச்சி மிகக் கொண்டு, குளிர்ந்த கற்பக மலர்களை மழைபோல வீசி, உயர்ந்தவனாகிய முருகப் பெருமானை வழிபட்டுப் போற்றி வணங்கி ஆரவாரம் செய்தனர்!"

குறிப்புரை : "கண்ணுதல் ஒருவன் – நெற்றியில் கண்ணையுடைய ஒப்பற்றவன், சிவபெருமான். கவுரி – உமாதேவி; தண்ணளி – அருள்; தண்துழாய் முடியோன் – குளிர்ந்த துளசிமாலையினை முடியில் கொண்ட திருமால். ஆதி – முதலாக; பண்ணவர் – தேவர்; பனிமலர் – குளிர்ந்த மலர்; கற்பக மலர். அண்ணலை – முருகனை!"

– இத்தகைய விளக்கம் இந்நூலில் உள்ளது.

## கந்தபுராணம் : வள்ளியம்மை திருமணப் படலம்

கச்சியப்ப சிவாசாரியார்

ச. வயித்திலிங்க பிள்ளை (உ.ஆ)

'கந்தபுராணம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் தொடக்கத்தில் 'நூலாசிரியர் சரித்திரக் குறிப்பு', "உரையாசிரியர் சரித்திரக் குறிப்பு' சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப்படலம் – 267 பாடல்கள். மூலமும், பொருளுரையும், விளக்கவுரையுமாக அமைந்துள்ளன.

"ஆகத்தை வருந்துகின்ற அரும்பசி அவித்தாய் தெண்ணீர்த்
தாகத்தை அவித்தாய் இன்னும் தவிர்ந்தில தளர்ச்சி மன்னோ
மேகத்தை அனைய கூந்தல் மெல்லியல் வினையேன் கொண்ட
மோகத்தைத் தணித்தியாயின் முடிந்ததுஎன் குறைய தென்றான்!"

எனும் பாடலுக்கு உரையாசிரியர் தரும் பொருள்:

"முகிலை நிகர்த்த அளகத்தையுடைய மெல்லியால்! (எனது) தேகத்தை வருத்திய (பொறுத்தற்கு) அரிய பசியைத் தணித்தாய்! தெளிந்த நீர் வேட்கையையும் தணித்தாய்! (நீ இங்ஙனம் செய்தும்) (எனது) வாட்டம் தணிந்திலது! வினையினேன் கொண்ட மோகத்தையும் தணிப்பாயாயின் (எனது) குறை நீங்கியது என்று திருவாய் மலர்ந்தருளினார் (அச் சுப்பிரமணியப் பெருமான்)

பசிபோல் மற்றொன்று வருத்துதலின்மையின் 'ஆகத்தை வருத்துகின்ற அரும்பசி' என்றார். பசியின் கொடுமையை,

"மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை . . .
பசி வந்திடப் பறந்து போம்!"

என்ற செய்யுளான் உணர்க. 'தவிர்ந்தில' என்றது 'இரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்' என்றது போலத் 'தவிர்ந்திலது' என ஒருமையாகற் பாலது பன்மையாக நின்றது. மன்னும் ஓவும் – அசை நிலைகள். 'வினையினீங்கிய விளங்கிய அறிவராகிய சுப்பிரமணியப் பெருமான், 'வினையேன்' என்று தாம் கொண்ட மானுட வடிவப் பொதுமை பற்றிக் கூறியருளினார் என்பது!"

– இத்தகு அரிய விளக்கமும் இலக்கணக் குறிப்பும் ஒவ்வொரு பாடலுக்கும் சொல்லப்பட்டுள்ளன.

## கந்தரநுபூதி (பதவுரை, விளக்கவுரை)

அருணகிரிநாத சுவாமிகள்

மா. வே. நெல்லையப்ப பிள்ளை (உ.ஆ.)

'கந்தரநுபூதி', விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'கந்தநுபூதி நூற்கருத்து', 'முன்னுரை' உள்ளன.

அடுத்துப் பாடல் – பதவுரை – விளக்கவுரை என்றுள்ளன.

"ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்!
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே!"

என்ற பாடலுக்கு உரையாசிரியர் தரும் பதவுரைத் தொகுப்பு :-

"(துன்புறுத்தும்படி தேவர்களை) தேடிச் செல்கின்ற கயமுகாசுரனை (அவனோடு போர் செய்து போக்களத்தில்) தாக்கி வென்ற, ஒப்பற்ற ஆனைமுகக் கடவுளின் தம்பியாகிய ஆறுமுகக் கடவுளே! (கார் கால மேகத்தைக் கண்டு களித்து) ஆடுகின்ற மயில் எனவும், வேல் எனவும், அழகிய சேவல் எனவும் (நான் எப்போதும் என் மனத்தில் உருகி நினைந்து அங்ஙனம் நினைந்ததன் பயனாக என் வாயினாலே எப்போதும் சொல்லிக் கொண்டு உனது புகழைப்) பாடும் செயல் ஒன்றனையே, உனக்கு நான் செய்யும் தொண்டாகச் செய்யும்படி அருள் செய்தல் வேண்டும். (நான் இங்ஙனம் தொண்டு செய்தால் உனது திருவடிப் பேறு அடைவேனென்பது குறிப்பெச்சம்!)"

இதனையடுத்து விரிவான விளக்கமும் தருகின்றார் உரையாசிரியர். பிறநூல் மேற்கோளும் இடம் பெற்றுள்ளது.

கந்தரநுபூதி நூலுக்குச் சிறந்த உரைநூல்!

## கந்தரலங்காரம் மூலமும் உரையும்

அருணகிரிநாதர்

அ. சா. குருசாமி (உ.ஆ)

'கந்தரலங்காரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'நுழைவாயில்' உள்ளது. இதில் 'கந்தரலங்காரம்' நூல் பற்றிய குறிப்புச் சொல்லப்பட்டுள்ளது. அடுத்து, 'அருணகிரிநாத சுவாமிகள் வாழ்க்கைக் குறிப்பு' உள்ளது. பின்னர்க் 'கந்தரலங்காரம்' – காப்புச்செய்யுள் நீங்கலாக 107 பாடல்கள் மூலம் – தெளிவுரை – கருத்து என அமைந்துள்ளது.

"முடியாப் பிறவிக் கடலிற்புகார் முழுதுங் கெடுக்கு
மிடியாற் படியில் விதனப்படார் வெற்றி வேற்பெருமான்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே!"

– இப்பாடலுக்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை, கருத்து வருமாறு:–

"வெற்றிதரும் வேற்படைக்குத் தலைவனான வேலவர் – தமது திருவடியைச் சரணடைந்த அடியவர்க்கு நன்மை தரும் இறைவன் – அசுரர்களின் கூட்டம் அடங்கும்படி தூள் செய்த வெற்றி வேலர் – அந்த முருகப் பெருமானின் திருநாமத்தைக் கூறுபவர்கள் யாரும் முடிவடையாத பிறவிக் கடலில் மூழ்க மாட்டார்கள். நலன்கள் யாவையும் அழிக்கின்ற வறுமைப் பிணி தாக்கி வேதனைப் படவும் மாட்டார்கள். கருத்து : பரமனின் திருநாமத்தை ஓதுகின்றவர்களுக்குப் பிறவித் துன்பமும் வறுமைத் துன்பமும் இல்லை!"

– இத்தகைய எளிய விளக்கம் தரும் நூல் இது!

**கந்தரலங்காரம் (மூலமும் தெளிபொருள் விளக்கவுரையும்)**

அருணகிரிநாத சுவாமிகள்

க. ரா. ஜமதக்னி சுவாமிகள் (உ.ஆ.)

இந்நூலின் தொடக்கத்தில், 'அருணகிரி நாத சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்' உள்ளது.

முதலில் 'காப்பு' – 1; இறுதியில் 'நூற்பயன்' – 1 தவிர 100 பாடல்கள். ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்பு; பாடற் பொருள்; விளக்கவுரை; கருத்துரை என அமைந்துள்ளது. 'குமரனே குவலயத் தெய்வம்' என்ற தலைப்பில் வருவது பின்வரும் பாடல்:–

"திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பா
லருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே!"

– இப்பாடலுக்குச் சொற்பொருள் கூறியபின், விளக்கவுரை தருகின்றார் உரையாசிரியர்:–

"உமாதேவியார் எல்லா அண்டங்களையும் பெற்றுக் காப்பவள் ஆதலின்

'திருந்தப் புவனங்கள் ஈன்ற பெற்பாவை' என்றார். பொற்பாவை, பொன்னாற் செய்த பாவை, என்ற உரை கூறுதல் வழுவாகும். தேவி கருப்பு வண்ண முடையவளாதலின், 'கருவி மாமழை கலைமகள் உருவென விளங்கி... பனிவரை யுயிர்த்த உருவ வோடரித் தடங்கணாள் உருக்கொடு மீண்ட" (நைடதம்). (மழை சரஸ்வதியின் வடிவம் போல் வெண்மையாக விளங்கிப் பார்வதியினது கரு நிறுத்தைப் பெற்றுத் திரும்பியது). இதனால் பார்வதி தேவியார் கருநிறமுடையவர் என்றுணர்க. ஆதலின் அழகிய பாவை எனப் பொருள் கொள்ளப்பட்டது பாவை போல்பவளைப் பாவை என்றது உவமவாகுபெயர். 'பொற்பாவை திருமுலைப்பால் அருந்தி' என்றதனைச் 'செப்பினை யொத்த திருத்தன நின்று பொம்மலுடன் சொரி பாலதருத்தி' என்ற கந்தபுராண மொழியுடன் ஒப்பிட்டு நோக்குக.

சரவணம் : சரம் வநம். வடமொழிப் புணர்ச்சியாகும். நாணற்காடு : இது ஆகுபெயராய்ச் சரவணப் பொய்கையை உணர்த்திற்று. பூந்தொட்டில் – அழகிய தொட்டில் எனினுமாம். அறுவர் – கிருத்திகை முதலிய ஆறு நட்சத்திர மங்கையர் தொகைக் குறிப்பு".

– இவ்வாறு விளக்கம் தந்தபின், 'சரவணப் பூந்தொட்டிலேறி அறுவர் கொங்கை விரும்பி, என்பதில் உள்ள வரலாற்றைத் தருகின்றார் உரையாசிரியர்.

நூலின் இறுதியில், 'சில பிரதிகளில் அதிகமாகக் காணப்படுவன என 6 பாடல்களும் உரைகளும் தருகின்றார் இவர்.

## கந்தர் கலிவெண்பா (மூலமும் உரையும்)

குமரகுருபரர்

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ)

'கந்தர் கலிவெண்பா' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில், 'பிரபந்தம் அருளிய பேரருளாளர், வரலாறு, நூல்கள், நூற்சிறப்பு, கந்தர்கலிவெண்பா, நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளல், அணிநலம் என்னும் உட்பிரிவுகள் உள்ளன.

122 கண்ணிகள் கொண்ட இப்பாடலைப் பொருளுக்கு ஏற்பப் பகுதி பகுதியாகப் பிரித்து உரைதருகின்றார் உரையாசிரியர். இவ்வுரை, 'பொழிப்புரை, விளக்கவுரை, சொற்பொருள்' என மூவகையில் அமைந்துள்ளது.

இப்பாடலின் இறுதிப்பகுதி 'வேண்டுகோள்' என்பது.

"................. ஓசை
எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்(து) – ஒழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி

மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் – தம்மை விடுத்து
ஆயும் பழைய அடியா ருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் – சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்(டு)!
அடியேற்கு முன்னின்(று) அருள்!"

– இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை :–

"ஒலியமைந்த எழுத்து முதலாகச் சொல்லப்படுகின்ற ஐந்து இலக்கணங்களையும் முழுமையாகக் கற்று முதிர்ந்த தமிழ்ப் புலமையும் நல்லொழுக்கத்தையும் தந்தருளி, இப்பிறப்பில் தோன்றும் அகப்பற்று, புறப்பற்று ஆகிய இருவகைப் பற்றுக்களையும் விலக்கி, ஆணவம், கன்மம், மாயை என்னும் முதிர்ந்த மும்மலங்களையும் நீக்கித், தன்முனைப்பைத் தவிர்த்து, திருவருள் உணர்வுடன் ஞானநூல்களை ஆராயும் பழைய அடியாருடன் (எளியேனையும்) சேர்ப்பித்து, அவ்வடியார் நுகரும் பேரின்பத்தை எளியேனும் நுகருமாறு செய்து, நெடுந்தூரத்தும் நறுமணம் கமழும் அழகிய தாமரையனைய திருவடிகளைக் கண்டு மகிழுமாறு செய்து, எளிய என்னை ஆளாகக் கொண்டருளி அடிமையாகிய எனக்கு முன்னின்று திருவருள் வழங்குவீராக!"

இதன்பின் விரிவான விளக்கவுரையும் தருகின்றார் உரையாசிரியர்.

## கந்தர் கலிவெண்பா (ஆங்கிலம், இந்தி மொழிபெயர்ப்பு)

குமரகுருபர சுவாமிகள்

மு. அருணாசலம் (ஆ. மொ);

B.D. Jain (இ. மொ)

இதில் 122 கண்ணிகள் உள்ளன. இவற்றிற்கு முதலில் ஆங்கில மொழிபெயர்ப்பும், அடுத்து இந்திமொழி பெயர்ப்பு உள்ளன.

## கந்தன் பாமாலை

அ. வே. சாந்திகுமார் (ப.ஆ)

இந்நூலில், முருகனைப் பற்றிப் பலரும் பாடிய பாடல்கள் அடங்கியுள்ளன. தொடக்கத்தில் 'அப்பர் தேவாரம்' முதலாயின உள்ளன. அடுத்துக் 'கந்தர் சஷ்டி கவசம்', 'பழனி வழிநடைப் பாடல்', 'படைவீட்டு வாரப் பாடல்', சிலர் பாடிய தனிப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"வெண்மலர் தூவிப் பண்மலர் இசைக்க
வேண்டும் வரம் தருவாய் – முருகா!
தண்கதிர் போலவன் மலர்விழி திறந்து
கருணைநீ அருள்வாய் முருகா!"

என்பது தனிப்பாடல்களில் ஒன்று!

## கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்

த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை (உ.ஆ.)

இப்'பிள்ளைத் தமிழ்' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. இதில், இந்நூலைப் பற்றியும், பிள்ளைத் தமிழ்ப் பருவங்கள் பற்றியும் விரிவாக விளக்கியுள்ளார் உரையாசிரியர்.

சிறப்புப்பாயிரம் – 2 பாடல்கள்; ஆசிரியர் கருத்து – 1 பாட்டு; நூல்: விநாயகர் வணக்கம் – 1 பாட்டு; 'காப்புப் பருவம்' முதல் 'சிறுதேர்ப்பருவம்' வரை – 52 பாடல்கள்.

அடுத்துக் 'குறிப்புரை' உள்ளது.

''பக்குவமு திர்ந்துசிவ புண்ணியந்நி ரம்பிமல
பாகம்பி றந்துசத்தி
பதிந்துவினை யொப்புப் பழுத்தவர்கள் பிந்தநோய்
பாற்றுமொரு கெங்கை மலரும் . . .''

என்ற சப்பாணிப் பருவப் பாடலுக்கு, உரையாசிரியர் தரும் விளக்கம் : –

''பக்குவம் என்பது மலபரிபாகத்தினை. இஃது இருவினையொப்பால் வருவது. மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் எனப் பக்குவம் நால்வகைப்படும். சிவலிங்கத்தினிடத்தும், மாகேசுரர்களிடத்தும் பக்தி யுண்டாக, அதனாலே பரமசிவன் சாதகாசாரியனை அதிட்டித்துச் சமயதீட்சை பண்ணி, அவன் மனமொழி மெய்களைச் சரியைத் தொழிலிலே புரிவிப்பது மந்ததரம் எனப்படும். சிவார்ச்சனையால் ஆதரவு உண்டாக்கிப் போதகாசாரியனை அதிட்டித்து விசேட தீட்சையைப் பண்ணிச் சிவார்ச்சனை கற்பித்து, அகப்பூசை புறப்பூசைகளில் அவன் மன மொழி மெய்களைப் புரிவிப்பது 'மந்தம்' எனப்படும். யோகத்தில் விருப்பமுண்டாய் அவ்வாசிரியனால் அட்டாங்க யோக உண்மையை அறிவித்துக், காமாதி அறுவிதமும் விடுத்து, சித்தத்தைத் தியானத்தினாலே நிறுத்திச் சமாதியிலே ஒடுக்குவது 'தீவிரம்' எனப்படும். 'தீவிரதாமா'வது, சிவஞானிகளிடத்திலே பத்தியும், முப்பொருளுண்மையை அறியவேண்டும் என்னும் அறிவும் தோன்றி, தேகாதிப் பிரபஞ்சங்களை நீக்க வேண்டும் என்னும் வைராக்கியமும், முத்தியில் ஆசையும், பிறவியிலே பயமும், இவ்வுலகம் மறுமை நீக்கிச் சிவரூபத்தைத் தரிசிப்பிக்கும் குரவன் யாவன் என்று ஞானாசிரியனைத் தேடி மிகவும் வருந்துகின்ற விருப்பமுண்டாவதாம். இதனையே இங்கே 'பக்குவம்' எனக் குறித்தருளினர்!''

– இது போன்ற அரிய விளக்கங்கள் உள்ளன!

## காஞ்சிப் புராணம் (குறிப்பு, உரைநடை)

*சிவஞான சுவாமிகள்*

*சி. அருணை வடிவேலு முதலியார் (உ.ஆ)*

'புராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை', 'சிவஞான சுவாமிகள் வரலாறு' முதலியன உள்ளன.

முதற்கண் 'பாயிரம்' – 27 திருவிருத்தங்கள்; அடுத்துத் 'திருநாட்டுப் படலம்' முதல் 'சிவபுண்ணியப் படலம்' வரை 2742 திருவிருத்தங்கள் உள்ளன.

ஒவ்வொரு பாடலுக்கும், அடிக்குறிப்பில் அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது. அவ்வாறே ஒவ்வொரு படலத்தின் இறுதியிலும் படலக் கருத்து, உரைநடையில் தரப்பட்டுள்ளது

*"பகர்பெரு வளஞ்சால் இந்த மன்றலைப் பண்பு கூர*
*அகனமர்ந் தேத்தி னோர்கள் கண்டவர் அறையக் கேட்டோர்*
*தகவுற நினைந்தோர் எல்லாந் தையலான் மன்றல் வாய்ந்து*
*புகலரும் பிரமா னந்தமன்றலும் பொருந்தி வாழ்வார்!"*

என்பது 'திருமணப் படலத்'தில் வரும் இறுதிப் பாடல்.

இப் பாடலை அடுத்துப் 'படல உண்மை' சொல்லப்பட்டுள்ளது.

"இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு 'உயிர்கள் போக நிலையை அடைதற்பொருட்டு இறைவனும் இறைவியும் திருமணம் நிகழ்த்திக் கொள்வர்' என்னும் உண்மையை விளக்கும், பிறவும் உளவேற் கொள்க!"

இத்தகைய புராணங்கட்கு உரை எழுதுதல் கடினம். ஆயினும் இதன் உரையாசிரியர், படலக் கருத்தைப் பலரும் அறிய உரைநடையில் தந்துள்ளார்!

## காரைக்காலம்மையார் திருமுறை (உரையுடன்)

*மு. கதிரேசன் (உ.ஆ)*

'காரைக்காலம்மையார் திருமுறை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'நூன்முகம், காரைக்கால் அம்மையார் வரலாற்றுச் சுருக்கம்' உள்ளன.

இந்நூலில், (1) திருஆலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் – 22 பாடல்; (2) திரு இரட்டை மணிமாலை – 20 பாடல்; (3) அற்புதத் திருவந்தாதி – 101 பாடல் – இவற்றிற்கு 'உரை' உள்ளது.

*"ஈச னவனல்லா தில்லை யென நினைந்து*
*கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து – பேசி*

*மறவாது வாழ்வோரை மண்ணுலகத் தென்றும்*
*பிறவாமைக் காக்கும் பிரான்!"*

எனும் 'திரு இரட்டைமணி மாலை'ப் பாடலுக்குரிய உரை:-

"சிவபெருமான் (தன்னை) ஈசனாவான் அச்சிவபெருமானன்றி வேறு இல்லை என நினைத்து, (முன்பு அங்ஙனம் நினையாதிருந்தமைக்கு மனம்) கூசி, (பின்பு) தங்கள் மனத்தகத்தே எப்போதும் அகலாமற் பதித்து, தன் புகழையே துதித்து, எஞ்ஞான்றும் மறவாது தொண்டு செய்து வாழும் அடியார்களை, இப்பூமியில், ஒருபோதும் பிறவாது காத்தருளும்!

வாழ்வாவது, பிரானது உண்மைத் தொண்டேயாகலின், உள்ளத்தால் நினைந்து, வாயாற்புகழ்ந்து, மெய்யால் தொண்டு செய்வாரைப் பிரான் காக்கும் என்பது கருத்து!

– இத்தகைய உரை இந்நூலில் காணலாம்!

## (ஸ்ரீ) குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு

*உ.வே. சாமிநாத ஐயர் (உ.ஆ)*

இந்நூலில் 'கந்தர் கலி வெண்பா' முதல் 'தில்லை சிவகாமியம்மை இரட்டை மணிமாலை' வரை 14 நூல்கள் அடங்கியுள்ளன.

இந்நூல் விளக்கங்கள், முதல் தொகுதியில் உள்ளன. இத்தொகுப்பு நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. அடுத்துக் 'குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்' 'ஆராய்ச்சி' அமைந்துள்ளன. இவ் ஆராய்ச்சி, மிக விரிவாக உள்ளது; மிகவும் பயனுள்ளது.

பின்னர் 14 நூல் – மூலம் – அடிக்குறிப்பு என அமைந்துள்ளது.

*"தழைத்திடுங் கூடலார்*
*குழைத்துடன் கூடலார்*
*பிழைத்திடுங் கூடலே*
*இழைத்திடுங் கூடலே!"*

என்பது, மதுரைக் காப்பகத்தில் உள்ளது.

இதற்கு உரையாசிரியர் தரும் குறிப்புரை:-

"தலைவி கூற்று. கூடலிழைத்தல் என்னும் துறை. கூடலார் – கூடற்பதியையுடையவர்; கூடல்– மதுரை; குழைத்து உடன் கூடலார் – மனத்தை வருந்தி என்னோடு சேரார். இழைத்திடும் கூடல் – மணலில் இழைத்திடும் கூடற்சுழி. எழுவாய். கூடற்பிழைத்திடும் – கூடுதல் பிழைத்திடும். கூடல் – ஒரு தலைப்பு, மற்றொரு தலைப்புடன் கூடுதல்.

தலைவரைப் பிரிந்த மகளிர் அவர் வரவை எதிர்நோக்கிப் பார்க்கும்

நிமித்தங்களுள் கூடற்சுழி ஒன்று. மணலிற் சுழியைச் சுழித்துப் பார்க்கையில் அது முதலும் கடையும் கூடுமாயின் வருவரென்றும், கூடாதாயின் வாராரென்றும் கொள்ளுதல் மரபு. "நீடு நெஞ்சு ணினைந்துக ணீர்மல்கும் ஓடு மாலினொ டொண்டொடி மாதராள், மாட நீண்மரு கற்பெருமான் வரிற் கூடுநீயென்று கூடலிழைக்குமே!" (தே. திருநா)

– இத்தகைய அரிய விளக்கம் கொண்ட நூல் இது!

## கொடிக்கவியும் வினாவெண்பாவும் (தெளிவுரை)

*உமாபதி சிவாசாரியார்*

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ.)

'கொடிக்கவி' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'வினாவெண்பா' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில் 'கொடிக்கவி' – நுவலும் பொருள் – பாடல் அமைப்பு; 'வினா வெண்பா' – நுவலும் பொருள், நூற்பயன், ஆசிரியர், காலம், முதலாயின உள்ளன.

அடுத்துக் 'கொடிக்கவி' – 4 பாடல் : தெளிவுரை, பதவுரை, விளக்கம் என அமைந்துள்ளது. இவ்வாறே 'வினாவெண்பா' – 13 பாடல்; தெளிவுரை, பதவுரை, விளக்கம் என அமைந்துள்ளது.

*"அருளால் உணர்வார்க்கு அகலாத செம்மைப்*
*பொருளாகி நிற்கும் பொருந்தித் – தெருளா*
*வினாவெண்பா உண்மை வினாவாரேல் ஊமன்*
*கனாவின்பால் எய்துவிக்கும் காண்!"*

என்பது வினாவெண்பா இறுதிப் பாடல். இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை:–

"தெளிய வேண்டிய இவ் வினாவெண்பாவின் உண்மைப் பொருளைத் தக்க ஞானாசிரியன் அருளால் உணர்பவர்க்கு, என்றும் விட்டு நீங்காத செம்பொருளாகி நிற்கும் 'சிவம்' விளங்கித் தோன்றும். இந்நூலின் உண்மையை அறியார்க்கு, ஊமையன் கண்ட கனவின் தன்மையை அடைவிக்கும். இதனை நன்கு அறிவாயாக!"

இதனையடுத்து 'விளக்கம்' அமைந்துள்ளது.

## 'ச'

### சகல காரிய சித்தியும் சைவத்திருமுறைகளும்

*சோமசுந்தரம் செட்டியார்; சு. வேங்கடேச சர்மா (உ.ஆ)*

'திருமுறைகள்' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'தொல் வினைகள் தொலைந்து போக'; 'இடர்கள் நீங்கி இன்பம் பெற' முதலான 24 காரிய சித்திகளுக்குப் பன்னிரு திருமுறைகளிலிருந்து பொருத்தமான பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவற்றிற்கு உரையும் தரப்பட்டுள்ளது.

இந்நூலில் இடம்பெற்ற பதிகங்கள் எந்தெந்தத் தலத்திற்கு உரியனவோ, அந்தந்தத் தலப்பெயர்களை அறியும்படி வரைபடமும் தரப்பட்டுள்ளது. 'திருப்பிரமபுரம்' முதல் 'திருக்கடிக்குளம்' வரை, 42 தலங்கள் காட்டப்பட்டுள்ளன.

'கன்னிப் பெண்களுக்குக் கடிமணம் நிகழ'ச் சம்பந்தர் அருளிய,

*"சடையா யெனுமால் சரண்நீ எனுமால்*<br>
*விடையா யெனுமால் வெருவா விழுமால்*<br>
*மடையார் குவளை மலரும் மருகல்*<br>
*உடையாய் தகுமோ இவளுண் மெலிவே!"*

எனும் 'திருமருகல்' பதிகப் பாடல்கள் தரப்பட்டுள்ளன.

இத்தலத்தின் இறைவன் பெயர் 'மாணிக்க வண்ணர்'; இறைவி பெயர் 'வண்டுவார் குழலியம்மை' என்ற குறிப்பும்; 'பண் – இந்தளம்; திருமுறை 2 ஆவது' என்ற குறிப்பும் தரப்பட்டுள்ளது. மேலும் 'பதிக வரலாறு' தந்து, பதிகப் பொழிப்புரையும் கொடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறே பிறவும். இவற்றைச் சம்பந்தப்பட்டவர்கள் பாராயணம் செய்தால் உரிய பலன் கிட்டும் என்பது உறுதி.

### சங்கற்ப நிராகரணம் (தெளிவுரை)

*உமாபதி சிவாசாரியார்*

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ)

'சங்கற்ப நிராகரணம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில்,

'மாயாவாதம், ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சிவசங்கிராந்த வாதி, ஈசுர அவிகார வாதி, நிமித்த காரண பரிணாம வாதி, சைவ வாதி'; ஆகியோரின் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன.

'அணிகள்' என்ற தலைப்பில், இந்நூலில் வந்துள்ள அணிகளின் பட்டியல் தரப்பட்டுள்ளது. அடுத்துத் 'திருமுறைக் கருத்துக்கள்' என்ற தலைப்பில், இந்நூலில் திருமுறைப் பாடல்கள் 14 எடுத்தாளப்பட்டுள்ளன என்று உரையாசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

அடுத்து இந்நூலில் இடம்பெற்ற ஒவ்வொரு பாடலையும் அதற்குரிய பொருளையும் காட்டிச் செல்கின்றார் உரையாசிரியர். இந்நூலின் இறுதிப் பாடல், 'சைவவாதி மறுப்பு' ஆகும்.

'இது கதியாக முதல் அறி வுயிரேல்' என்று தொடங்குவது. நீண்ட இப்பாடலின் கடைசிப் பகுதி:-

*"நதிக்கரை ஆன்எனக் கொதித்துஅல மந்து*
*வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண் டவன்அருள்*
*உள்நிலை உடையோன் ஒருவன் உரைத்த*
*தவப்பிர காசத் தன்மையில் விரித்த*
*சிவப்பிர காசச் செழுந்தமிழ் உண்மையை*
*அருளுடன் ஆய்ந்து கொள்ளத்*
*திருவருள் வினவல் திருந்திடும் அன்றே!"*

இதற்கு உரையாசிரியர் தரும் பொருளுரையாவது:-

"ஆற்றங்கரைக்கண் உளதாய பசு, உண்பதற்கு உரிய இடம் அங்காகுமோ இங்காகுமோ எனப் பதறித் திரிவதைப் போலத் திரிவதை விடுத்துத் திருவெண்ணெய் நல்லூரின்கண் தோன்றியருளிய மெய்கண்டாருடைய திருவருட் பெருக்கால் உண்மை உணர்ந்த மறைஞான சம்பந்தர் எனக்கு அருளியவாறு முற்பிறவியிற் செய்த தவப்பயனால் யான் செய்த சிவப்பிரகாசம் என்ற செழுந்தமிழ்ப் பனுவலைக் குருவருள் கொண்டு ஆராயின் அனைத்தும் நினக்கு ஐயமற விளங்கும்!"

இவ்வாறே ஏனைய பாடல்களுக்கும் விளக்கவுரை அமைந்துள்ள நூல் இது!

## சாரப் பிரபந்தம்

*நமசிவாய சுவாமிகள்*

திருவண்ணாமலை அருணாசலர் மீது பாடப்பட்டது. 'காப்பு' – 1 தவிர, ஆசிரிய விருத்தத்தாலான 10 பாடல்கள் உள்ளன.

*"இப்போது வெந்தமக் கடிமையாகிய புலவனெழி னமசிவாய னென்போன்*

*எனதடி வணங்கிநற் றமிழ்மாலை பாடிவந்தே தியாகங் கேட்டதால்*
*அப்போது உங்களுக் காசீர்வதித்து நாமன்பு திருமுகம் எழுதினோம்*
*ஆதலால் ஆங்கவன் மகிழவே நீங்கடாம் ஆடையா பரண நிதிகள்*
*எப்போதும் வாழ்த்தவே ஈந்திடுங் கீர்த்திபெற் றெண்ணில்கா லங்களடியார்க்(கு)*
*இனிதாக வந்தனை வழிபாடு செய்வதால் எமதுபதம் அடைகுவீரால்*
*தப்பாது இகபர சவுக்கிய மனைத்தையும் அடைந்து சாயுச்சியத்தில்*
*தருக்கியின்பச்சா கரத்தினில் அழுந்தியே சார்வதாய் வாழ்குவீரே!*

என்பது இதன் கடைசிப் பாடல். மூலமட்டுமே உள்ளது.

## சிதம்பர விநாயகர் மாலை

*அரசஞ் சண்முகனார்*

'மாலை' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. சோழவந்தானில் எழுந்தருளியுள்ள சிதம்பர விநாயகர் மீது பாடப்பட்டது. 30 பாடல்கள் கொண்டது. முதலில் 'காப்புச் செய்யுள்' உள்ளது.

பாடல் தோறும் 'சிதம்பர விநாயகனே' என்று முடிவது.

*"வகையிலா வாழ்வும் வழங்கும் பெருவளனும்*
*அசையா வறிவு மரோகதிட காத்திரமும்*
*இசையுந் தமிழுமரு ளெந்தாய் சனகையினிற்*
*றிசையெலாம் போற்றுஞ் சிதம்பரவி நாயகனே!"*

என்பது இவற்றில் ஒன்று.

## சிதம்பரத்துச் சிற்றம்பலவாணர் வண்ணம்

*பு.அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ)*

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

*"வண்ணக் குள்விழி வைத்த குறப்பெண் போல்வரு*
*தெய்வத் துரைய ளித்த துரைப்பெண் காதலர்*
*செப்பும்ப்ரண வத்தின்பொரு*
*ளைக் கண்டுசி ரக்கம்பமொ*
*டர்த்தஞ்சொல்மு கச்சந்த்ரனை*
*முத்தங்கொளும் வாயர் . . . . . ."*

எனத் தொடங்கும் இப்பாடலின் இராகம் – புன்னாக வராளி; தாளம்; ஆதி. இதற்குப் பின்வரும் சந்தம் போடப்பட்டுள்ளது.

*"தய்யத் தனன தத்த தனத்தந் தானன*
*தய்யத் தனன தத்த தனத்தந் தானன*
*தத்தந்தன தத்தந்தன*
*தத்தந்தன தத்தந்தன*
*தத்தந்தன தத்தந்தன*
*தத்தந்தனதான – தனதான*
*தந்ததத்தந் தானனா"*

– மூலமட்டுமே உள்ளது!

**சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்**

*மெய்கண்டார் முதலானோர்*

சைவசித்தாந்தப் பெருமன்றம் (ப.ஆ)

இந்நூலின் தொடக்கத்தில், 'பதினான்கு சாத்திரங்களும் ஆசிரியர்களும் காலமும்' என்ற பட்டியல் தரப்பட்டுள்ளது. பதினான்கு சாத்திரங்களாவன:– திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம்.

இந்நூல் ஒவ்வொன்றைப் பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது.

இந்நூலில் முதற்கண் உள்ளது: சிவஞானபோதம் மூலமும், வார்த்திகமும், உதாரணங்களும், சிவஞானசுவாமிகள் அருளிச் செய்த சிற்றுரையும், அச்சுவாமிகள் 'வெளிப்படை என விடுத்தவற்றிற்குச் சுப்பிரமணிய தேசிகர் இயற்றிய உரையும்' ஆகும்.

முதல் சூத்திரத்தில், 'அதிகரணம்' என்பதற்குத் தரப்பட்ட விளக்கம் வருமாறு:–

"இச்சூத்திரத்தில் 'அவனவளதுவென மலை மூவினைமையின்' என்பது ஓர் அதிகரணம். 'தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம்' என்பது, மூன்று அதிகரணத்தை உள்ளடக்கி நிற்பதோர் அதிகரணம்; 'அந்தம் ஆதி என்மனார் புலவர்' என்பது ஓரதிகரணம். ஆக முக்கூற்றது இச் சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒரு பொருள்மேல் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார். தன்னாற் கூறப்படும் பொருளும் அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துறைக்குந் சித்தாந்தத் துணிவும், இயைபு மென்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டு 'அதிகரணம்' எனப்படும்!"

– இத்தகைய அரிய உரைவிளக்கம் உள்ள ஒப்பற்ற நூல் இது!

## சித்தாந்த நிச்சயம்

*திருநாவுக்கரசு தேசிகர்*

இராம. கோவிந்தசாமி பிள்ளை (ப.ஆ)

'சித்தாந்த நிச்சயம்' என்பது, சைவ ஆகமங்களின் பொருள் நிச்சயத்தை உணர்த்துவதால் பெற்ற பெயர்.

இந்நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. இதில் 'சரியா பாதம், கிரியா பாதம்' முதலானவற்றின் விளக்கம்; 'சுத்தாத்துவித சைவசித்தாந்தப் பரஞானத்தைப் பற்றிய விளக்கம்' ஆகியன உரைக்கப்பட்டுள்ளன. அடுத்துத் 'தருமபுர ஆதீன குருபரம்பரை வரலாறு'' சொல்லப்பட்டுள்ளது; பின்னர்ச் 'சைவ சித்தாந்த சாத்திர நூல்கள்' 'சித்தாந்த நிச்சயவுரைக் குறிப்பு' இடம் பெற்றுள்ளன.

இந்நூல், 'காப்பு' – 1 ஐச் சேர்த்து 130 கட்டளைக் கலித்துறைப் பாக்களையுடையது. முதலில் 130 பாடல் மூலம்; பின்பு அனைத்திற்கும் 'உரை' தரப்பட்டுள்ளது.

*"நல்லார்கள் போற்றிய மெய்கண்ட*
*நாத னயந்தளித்த*
*சொல்லா கமப்பொரு டன்னைவிட்*
*டன்னியஞ் சொல்லுமிந்தக்*
*கல்லார் மருட்சொற் கழித்துச்சித்*
*தாந்தக் கருத்திதெனப்*
*பொல்லாத பிள்ளை யிணையடி*
*போற்றிப் புகலுதுமே!"*

என்பது முதற்பாடல். இதற்கு உரையாசிரியர் பின்வருமாறு அருஞ்சொற்பொருள் தருகின்றார். "நல்லார்கள் – சிவஞானமுற்றவர்கள். பொதுவும் சிறப்பும் ஆகிய இவத ஆகமங்களை நல்லாசிரியர்பால் முறையுறக் கற்ற நெறியினர். மெய்கண்டநாதன் – புறச் சந்தான குரவருள் முதலாமவர். திருவெண்காட் டீசரருளால் திரு அவதாரம் ஆனவர். சத்திய ஞான தரிசனிகள் என்பதன் பொருளே மெய்கண்ட நாதன் என்பதாகும்!" இதுதவிர 'சித்தாந்த நிச்சயவுரை' என்ற தலைப்பில் பல்வேறு நூல்களிலிருந்து பாடல்கள் தரப்பட்டுள்ளன.

## சித்தாந்த நூல் திரட்டு

*சொ. சிங்காரவேலன் (ப.ஆ)*

இந்நூலில் தேவாரம், திருவாசகம், சித்தாந்த சாத்திரம், பண்டார சாத்திரம், கந்தர் கலிவெண்பா, தாயுமானவர் பாடல் ஆகியவற்றிலிருந்து சைவ சித்தாந்தம் பயிலும் மாணவர்கட்காகச் சிற்சில பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

முதலில் மூலபாடம்; அடுத்துக் 'குறிப்புரை' அமைந்துள்ளது.

"ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பிலுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வரது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ணணுகும்வகை கருணைமிக நயக்குந்தானே!"

என்பது 'சிவப்பிரகாசம்'.

இதற்குப் பதிப்பாசிரியர் தரும் குறிப்புரை:–

"ஏகமாய் – பொருளால் ஒன்றாய், மீளும் – நீங்குகின்ற; மோகம் – அறியாமை; நித்தம் – என்றும் உள்ளது. மூலமலம் – முதல் மாசு, ஆணவம்; 'ஆய்அறிவு' எனப் பிரிக்க. நித்த, மூலமலம்' என்பதனை முதலிற் கொள்க.

'திரோதாயி சத்தி (மலங்களுடன்) நின்று (ஆணவம்) பாசமாம் வகை பண்ணுதலால்' என இயைக்க. (திரோதான – மறைப்பது) 'அதுவே பின்னர்ச் சிவபிரான் திருவடியை அடைவிக்கும் அருட்சத்தியாய் நிற்கும் என்க!"

– இத்தகைய சிறுகுறிப்புடன் கூடிய நூல்!

### சித்தாந்தப் பிரகாசிகை (வடமொழி)

சர்வாத்ம சம்பு சிவாசாரியார்

சிவஞானசுவாமிகள் (மொ.பெ)

வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை (ப.ஆ.)

சைவசித்தாந்தம் கற்கப் புகுவார், முதலிலே அறிய வேண்டிய தத்துவங்கள், அவற்றின் தோற்றம், அத்துவாக்களின் விவரம், தீக்ஷையின் பேதம், சாத்திரங்களின் வகைகள், அவைகளில் சொல்லப்படும் செய்திகள், சிவாகமங்களின் விசேடம் முதலிய பலவும் விளக்கப்படுகின்றன.

"வணங்கி வாழ்த்தி மதிப்பரும் பொருளை
வணங்கி வாழ்த்தி மதித்துமன் பெரிதே!"

என்பது, முதல் நூலில் வருவதன் மொழிபெயர்ப்பு.

இந்நூலில், 'தேகப் பிரகரணம், தத்துவப் பிரகரணம், அத்துவாப் பிரகரணம், ஆத்மப் பிரகரணம், பந்தப் பிரகரணம், சாஸ்திரப் பிரகரணம், தீக்ஷாப் பிரகரணம் முதலான ஏழு பிரகரணம் பற்றிய விளக்கம் சொல்லப்பட்டுள்ளது.

நூல் சிறிதே எனினும் அரிய பொருளைத் தன்பாற் கொண்டது!

### சித்திரத் திருவெம்பாவை

மாணிக்கவாசகர்

பி. ஸ்ரீ. ஆச்சாரியா., (உ.ஆ.)

திருவாசகத்தின் ஒரு பகுதி திருவெம்பாவை. இது குறித்த விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. பொய்கையும் நீராடலும், நோன்பு நோற்கும் கன்னிப் பெண்களும் மணிவாசகப் பகுதியிலே, இனிமையும் அழகும் பக்திச் சுவையும் சொட்டச் சொட்டக் கவிச் சித்திரங்களாகக் காட்சியளிக்கின்றன. திருவாசகத்தில் உள்ள 'திருவெம்பாவை' – 20 பாடல்கள்; திருப்பள்ளியெழுச்சி – 10 பாடல்கள். ஆக 30 பாடல்கள் (மூலம்) முதலில் தரப்பட்டுள்ளன.

அடுத்து ஒவ்வொரு பாடலையும் கொடுத்துப் பதவுரை, தெளிவுரை தந்துள்ளார் உரையாசிரியர். திருவெம்பாவை 20 பாடல்களுக்கும் 20 அழகான சித்திரங்கள் வரையப்பட்டுள்ளன.

'ஏலக்குழலி' என்ற தொடருக்குப் பின்வருமாறு உரைவிளக்கம் தருகின்றார்:

"ஏலம் : கூந்தலுக்கு இடும் வாசனைச் சாந்து இது. மயிர்ச்சாந்து பூசி, அழகு செய்து கொண்டிருக்கிறாள் என்று கூறியிருப்பதிலிருந்து, இத்தோழி தன்னை அலங்கரித்துக் கொண்டு அப்படியே உறங்கப் போய்விட்டாள் என்று ஊகிக்கலாம். இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தை அலங்கரித்துக் கண்குளிர, அகங்குளிரக் கண்டு இன்புறாமல், இந்த உடம்பை அலங்கரித்து இன்புறும் தோழியின் நிலை இரங்கத்தக்கது என்ற குறிப்பையும் 'ஏலக்குழலி' என்ற சொற்றொடரில் காணலாம்!"

– இவை போன்ற உரைநயங்களை இந்நூலில் காணலாம்.

## சிரவை வெண்பாமாலை

இல. பழநிச்சாமி

'மாலை' பற்றிய நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

சிரவணபுரம் சிரவை ஆதீனமடத்தில், 108 யானை வழிபாட்டு வேள்வி நடந்ததை முன்னிட்டு 108 வெண்பாக்களை யாத்துள்ளார் இந்நூலாசிரியர்.

தொடக்கத்தில் '108 கஜபூசை வேள்விச் சிறப்பு'க் குறித்து – 6 பாடல்கள்; அடுத்து, விநாயகர் காப்பு, முருகன் துதி, அவையடக்கம் உள்ளன. 108 நேரிசை வெண்பாக்கள். முதல் 18, 'முருகனே விநாயகர்' என்னும் சிலேடையணி அமையப் பாடப்பட்டவை; அடுத்த 18, 'முருகனே சிவபெருமான்' என்று கூறும் சிலேடையணி அமைந்தது. அடுத்த 18, 'முருகனே சத்தி மயம்' என்ற பொருளில் சிலேடை; அடுத்த 18 'முருகனே திருமால்' என்ற பொருளில் சிலேடை; அடுத்த 18, 'முருகனே சூரியன் என்ற பொருளில் சிலேடை; இறுதி 18 – முருகனே பரம்பொருள் என்ற பொருளில் சிலேடை எனப் பாடப்பட்டுள்ளன.

"சங்கப் புலவர்கட்குத் தாம்தலைமை யாற்குகனாம்
செங்கைநா ளீசன் சிரவையே – தங்குகயம்
ஆறுபதி னெட்டின் அருட்பூசை வேள்விதரும்
வீறுசந்நி தானமென விள்ளு!"

என்பது முருகனுக்கும் சிவபெருமானுக்கும் சிலேடையாக அமைந்தது. இவ்வாறே பிறவும்!

### சிவஞான சித்தியார் - சுபக்கம்; (மூலமும் உரையும்)

அருணந்தி சிவாசாரியார்

த. கைலாசபிள்ளை (உ.ஆ.)

'சிவஞான சித்தியார்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இதில், 12 சூத்திரங்கள்; 228 திருவிருத்தப்பாக்கள் – இவற்றிற்கு உரை தரப்பட்டுள்ளது. மேலும் ஆங்காங்கே இலக்கணக் குறிப்புக்களும் இடம் பெற்றுள்ளன.

"மன்னவன் றன்மகன் வேடரிடத் தேதங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்ப . . ."

என்னும் 8ஆம் சூத்திரத்திற்கு, இவ்வுரையாசிரியர் தரும் உரை:–

"உயிர், தன்னிலையிற் பிறழ்ந்து, ஐம்பொறிகளும் பட்டறிவிழந்து வருந்துமாற்றை, நித்தமுத்த சுத்த சித்தெனப்படும் அவ் ஈசன், குருவடிவங்கொண்டு எழுந்தருளிவந்து, தவமுதிர்ச்சி நோக்கி, உணர்த்தி, மீட்டுத் தொன்னிலையிற் பிறழாது வைத்து வாழ்விப்பனென்பதாம்!"

– இவ்வாறு உரைகூறியபின் இதற்குப் பின்வருமாறு விளக்கமும் தருகின்றார்:–

"இங்ஙனம் வாழ்வித்தல் ஈசனுக்குக் கடப்பாடாதலின் இனிது விளக்குவார், பிள்ளையைப் பருவத்து, மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனாய்த் தன் சாதிக்குரிய பெருந்தகைமை இழந்து, இழிதொழில் பயிற்றிவருந்தும் மன்னவ குமாரனாவான் ஒருவனுக்கு, அவன் தந்தை செய்யும் உதவியை எடுத்துக் காட்டிக் கூறினார். மும்மலச் சுழலில் பட்டு வருந்துதல், காட்சிப் புலனாதல் செல்லாமையின், அதனை ஒழித்துக் காட்சிப் புலனாய் எளிதின் அறியப் படுவதாய் ஐம்பொறிச் சூழலில் படுதலே ஈண்டு எடுத்துக் கூறினார். தூலவருந்ததி நயம் பற்றிச் சோபான முறையின் வைத்து உணர்த்துதல் மரபாகலின் துணைவனையும் என்னும் 'உம்மை' தன்னை அறியாமையேயன்றியென இறந்தது தழீஇயது; சிறப்புமாம் . . . . ."

– இத்தகைய அரிய விளக்கங்களைத் தன்பால் கொண்ட நூல் இது!

### சிவஞான சித்தியார் - சுபக்கம் (தெளிவுரை)

அருள்நந்திசிவாசாரியார்.

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ)

'சிவஞானசுத்தியார்' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' என்றபகுதி விரிவாக உள்ளது. அடுத்துப் 'பாடலும்

தெளிவுரையும்' என அமைந்துள்ளது. ஆங்காங்கே அருஞ்சொற்பொருளும் தரப்பட்டுள்ளது. பாடலுக்கு ஏற்பத் தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளது.

"இம்மையே ஈரெட்டு ஆண்டு எய்தி எழில் ஆரும்
ஏந்திழைஆர் முத்தி என்றும் . . ."

என்ற பாடலுக்கு உரையாசிரியர், தெளிவுரை தந்து பின்வருமாறு விளக்கமும் தருகின்றார்:

"மகளிர் இன்பமே வீடுபேறு என்பர் உலகாயதர்; துறக்கமடைதல் வீடுபேறென்பர் மீமாஞ்சகர்; உருவம், ஞானம், வேதனை, குறி, வாசனை எனும் ஐங்கந்தங்களும் 'அறஒழிவது வீடுபேறென்பர் சௌத்திராந்திகர். வரம்பிலா அறிவு, வரம்பில்லாக் காட்சி, வரம்பில்லா வீரம், வரம்பில்லா இன்பம், வயதின்மை, அழியாத்தன்மை, பெயரின்மை, கோத்திரமின்மை ஆகிய எண்குணங்களையும் அடைதலே வீடுபேறென்பர் நிகண்ட வாதிகள். கல்லெனக் கிடத்தலே வீடுபேறென்பர் சாங்கியர். சிவவடிவு பெறுதலே வீடுபேறென்னபர் சிவசமவாதிகள்!"

– இத்தகைய விளக்கங்கள் இந்நூலின்கண் சொல்லப்பட்டுள்ளன.

**சிவஞானசித்தியார் - சுபக்கம் (புத்துரை)**

அருணந்தி சிவாசாரியார்.

மு. திருவிளங்கம் (உ.ஆ.)

'சிவஞான சித்தியார்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'சிவஞான சித்தியார்' அருளிய அருணந்தி சிவாசாரியர் வரலாறு உள்ளது.

சிவஞான சித்தியார் – சுபக்கம் – 'பாயிரம்' முதல் 328 செய்யுட்கள் – மூலபாடம் தந்து, அடுத்துப் 'பொருள்', 'குறிப்பு', 'பொழிப்பு' என மூவகையில் விளக்கம் தருகின்றார் உரையாசிரியர்.

பாடலுக்கு ஏற்ற தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளது.

"செயல்களே பலத்தைச் செய்யுந் தெய்வம்வேண் டாவிங் கென்னின்
முயலுமிச் செயல்க ளிங்கே முழுவது மழியு மெங்கே
பயனளிப் பனவழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்ட
வயலிடுந் தழையுந் தின்னு மருந்தும்பின் பலிக்கு மாபோல்!"

என்னும் பாடலுக்கு, "வினையே பயன்தரும் என்பதை மறுத்தல்" எனத் தலைப்புக் கொடுத்துப் பின்வருமாறு பொருள் தருகின்றார் உரைகாரர்!–

"இதமகிதங்களாகிய வினைகளே தத்தம் பயனைத் தரும், இப்பயனைத் தருதற்கு முதல்வன் வேண்டுவதில்லை என்னின், செய்த இவ்வினைகள் செய்த பொழுதே இவ்விடத்து முழுதுங் கெட்டொழிவன வாகலின், எவ்விடத்து நின்று

அவை பயனைத் தரும்? வயலில் இட்ட தழைகளும் உண்ணப்பட்ட மருந்தும் கெட்டுப் பின் பயன்தருமாறு போல, இவ்வினைகளும் கெட்டே பின் பயன் தருவனவாம்!'' இதனையடுத்துப் 'பொழிப்புரை'யும் தருகின்றார்.

இவ்வாறே மேலும் பல அரிய விளக்கங்களைத் தன்னகத்தே கொண்ட ஓர் அரிய உரைநூல் இதுவாம்!

## சிவஞான சித்தியார் சுபக்கம் (பதவுரை, பொழிப்புரை முதலியன)

அருணந்தி சிவாசாரியார்

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை (ப.ஆ).

'சிவஞான சித்தியார்' நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், பதிப்பாசிரியரின் 'முகவுரை' உள்ளது. இதில் ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் பதவுரை, ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் பொழிப்புரை உள்ளன.

'முகவுரை'யில் இந்நூலுக்கு எவரெவர் உரைகண்டுள்ளனர் என்ற விவரம் தரப்பட்டுள்ளது.

சித்தியாரின் நூலாசிரியர் அருணந்தி சிவாசாரியார் சரித்திரச் சுருக்கம், உரையாசிரியர் மாதவச் சிவஞான யோகிகள் வரலாறு, மேலகரம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சரித்திரச் சுருக்கம், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய, 'சிவஞான சித்தியார் பதவுரைச் சிறப்புப்பாயிரம்' (5 பாடல்) ஆகியன கொடுக்கப்பட்டுள்ளன.

சித்தியாரில் உள்ள 12 சூத்திரங்களுக்கும்; சூத்திர வாரியாக 'விஷய அட்டவணை' முதற்கண் உள்ளது.

'சித்தியார்' ஒவ்வொரு பாடலுக்கும், சுப்பிரமணிய தேசிகரின் பதவுரையும், சிவஞானமுனிவரின் பொழிப்புரையும் தரப்பட்டுள்ளது.

''செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்க ளறுத்தீச னேசரொட்டுஞ் செறிந்திட்டு . . .''

என்ற 12ஆம் சூத்திரத்திற்குச் சிவஞான முனிவர் தரும் பொழிப்புரை:–

பற்றறக் கழிந்த மும்மலங்கள், விளக்கற்றம் பளிக்கும் இருள் போல, அறிவற்றம் பார்த்து நிற்பனவாகலான், அவற்றை அஞ்சிப் பரிகரித்தலும், பரிகரித்தற்குத் துணையாகிய மெய்யன்பரொடு பயிறலும் பயிற்சி நிலைபெறும்படி அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் அரனெனக் கண்டு வழிபடுதலுமுடையராய், இப்பேறு பெறமாட்டாரது சிறுமையும், பெற்றாரது பெருமையும் நோக்கிக் களித்து வாழ்தல், சீவன் முத்தர்க்குரிய வியல்பென்பதாம்

– இத்தகைய விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## சிவஞான சித்தியார் பரபக்கமும் சுபக்கமும்

அருணந்தி சிவாசாரியார்

சி. சு. மணி (உ.ஆ)

சிவஞான சித்தியார் – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. சிவஞான சித்தியார் இரு பகுதிகள் கொண்டது: (1) பரபக்கம்; (2) சுபக்கம்.

இவற்றில் 'பரபக்கம்' 301 செய்யுட்கள் கொண்டது. இதில், மறுக்கப்படுகின்ற சமயங்கள்:– உலகாயதன் மதம்; பௌத்தரில் சௌத்திராந்திகன் மதம், யோகாசாரன் மதம்; மாத்தியகன் மதம்; வைபாடிகன் மதம்; சமணரில் நிகண்டவாதி மதம்; ஆசீவகன் மதம்; பட்டாசாரியன் மதம்; பிரபாகரன் மதம், சத்தப் பிரமவாதி மதம்; மாயாவாதி மதம்; பாற்கரியன் மதம்; நிரீச்சுர சாங்கியன் மதம்; பாஞ்சராத்திரி மதம் என்ற பதினான்கு புறச் சமயங்கள். இவை ஒவ்வொன்றையும் அடுத்து, அந்தந்த மதத்தின் மறுப்பும் இடம் பெற்றுள்ளது.

'சித்தியார் சுபக்கத்'தில் 328 செய்யுட்கள் உள்ளன.

இச் 'சுபக்கத்'தில்

''சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து ஒன்றாம் என்னின்
சிவன் அருள்சித்து இவன் அருளைச் சேரும் சித்து . . .''

என்ற பாடலுக்கு உரையாசிரியர் பின்வருமாறு விளக்கம் தருகின்றார்:–

''சிவனும் அறிவுடைப் பொருள்; சீவன் எனப்படும் உயிரும் அறிவுடைப் பொருள். ஆகவே முத்திநிலையில் இரண்டும் ஒன்றாகவே நிற்கும். அதை விடுத்து, உயிர் சிவானுபவம் ஒன்றற்கே உரித்து என்று வேற்றுமைப்படுத்திக் கூறுதல் கொள்ளுதல் பொருந்தாதன்றோ?'' என்று சிலர் வினவுவர். இரண்டும் சித்துப் பொருளே ஆயினும் அவற்றிடையே வேற்றுமை பெரிது. சிவன் அருளே வடிவாய் அமைந்தவன்; உயிரோ, சிவனருளைச் சேரும் அறிவினை மட்டுமே உடையவன். சிவபெருமான் உயிர்களுக்குப் பிறப்பினை ஒழித்து, அறிவினை ஊட்டி, வீடுபேற்றை அளிக்க வல்லவன். உயிர், பிறப்பு முதலிய யாவற்றிலும் அழுந்துகிற இயல்புடையது. முற்றறிவுடையவன் ஆகையினால் இறைவன் தானே அறியும் இயல்புடையவன். உயிர் அறிவித்தால் மட்டுமே அறியும் இயல்பு உடையது. இக் காரணங்களினால் சிவத்தோடு கூடினாலும் உயிரும் சிவமும் ஒன்றாகா! தம்முள் வேற்றுமையின்றி நிற்கும். புத்தி தத்துவம் அறிவு என்று சிலநேரங்களில் கூறப்படும். ஆனால் உண்மையில் அறிவது உயிரே அன்றி, புத்தி தத்துவமாகாது! உயிரோடு ஒப்பிடும் போது புத்திதத்துவம் அசித்தாவது போல, சிவனோடு ஒப்பிடும் போது உயிரும் அசித்தேயாம்!''

– இவை போன்ற விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

**சிவஞான சித்தியார் - பரபக்கம்; இருபா இருபஃது (உரை)**

அருணந்தி சிவாசாரியார்

கு. வைத்தியநாதன் (உ.ஆ.)

(1) 'சிவஞான சித்தியார்' (2) இருபா இருபஃது நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இவற்றில் 'சிவஞான சித்தியார் – பரபக்கம்' – 301 பாடல். சைவ சித்தாந்தத்திற்குப் பொருந்தாத பல்வேறு கருத்துக்களை உடைய புறச் சமயக் கொள்கைகளைக் கூறி, அவற்றிற்கு மறுதலைகளையும் இந்நூல் அளவிட்டுரைக்கிறது.

'இருபா இருபஃது' என்பது 20 பாடல் கொண்டது. சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தருக்க நெறி வழுவாமலும், பகுத்தறிவுக்கு ஏற்ற முறையிலும் ஆய்ந்து அறிய வேண்டும் என்ற நோக்கில் உருவானது. இந்நூலில் – பாடல்; அடுத்துத் 'தெளிவுரை, விளக்கம்' என அமைந்துள்ளது.

"மான்அமரும் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன!
போனவினை தானே பொருந்துமோ? – யானதனில்
ஆவனோ? ஆக்காய் அமலனாம் நின்அருள்தான்
தேவனே யாதுக்கோ தேர்!"

என்பது 'இருபா இருபஃது' நூலில் வரும் ஒரு பாட்டு.

இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை:

"மான் ஏந்திய சிவந்த திருக்கரத்தை உடையவனே! மதில் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் வாழும் தலைவனே! முற்பிறவியில் நான் செய்த வினையின் பயன், தானேவந்து என்னைக் கூடுமோ? அல்லது அந்த வினைப் பயனை நான் சென்று கூடுவனோ? நீ நின்மலன்! எனவே அவ்வினைப் பயன் என்னைவந்து கூடுமாறு செய்யாய்! அவ்வாறாயின் உன் அருள் என்பதுதான் எதன் பொருட்டு இழுக்கிறது என்பதை எனக்கு ஆராய்ந்து அருளிச் செய்ய வேண்டுகிறேன்!

இதற்கு இவர்தரும் விளக்கம் வருமாறு–

"வினைகள் சடம்; வினைப்பயன்களும் சடம்; எனவே அவை உயிர்களை வந்து அடையமாட்டா! உயிர்கள், தமக்குஎன சுவதந்திரம் இல்லாதன. எனவே உயிர்களும் வினைப்பயன்களைச் சென்று அடையமாட்டா! ஒவ்வோர் உயிரும் செய்த வினைப்பயனை அந்தந்த உயிரே அனுபவிக்கும்படி, இறைவனின் திருவருள் வினைப்பயனை உயிர்க்கு ஊட்டுகிறது. சொரூப நிலையில் நின்மலனாய் நிற்கும் இறைவன், உயிர்கள் முன்னேறும் பொருட்டுத் தன்

திரோதான சக்தியைக் கொண்டு, உயிர்களின் இயல்புகளுக்கு ஏற்ப மும்மலங்களையும் இயக்குகிறான். இஃது எதுபோல எனின், காந்தம் இரும்பை இயக்கித் தொழிற்படுமாறு செய்வதைப் போன்றது ஆகும். இவ்வுண்மையைக்

"காந்த பசாசம்போல், அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரான்!"

எனும் சிவஞானபோத வெண்பாக் கருத்தைக் கொண்டு அறியலாம்!

– இத்தகு விளக்கம் கொண்ட நூல்!

### சிவஞான தீபம் (குறிப்புரையுடன்)

இரேவண சித்தர்

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (உ.ஆ.)

'சிவஞான தீபம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'இரேவண சித்தர் வரலாறு' உள்ளது. அடுத்து, 174 திருவிருத்தப் பாக்கள் மூலம். பின்னர் 'குறிப்புரை' உள்ளது.

"நாதத்தில் சிகார வெழுத் திசைந்து தோன்றும்
நண்ணரிய விந்துவினில் வகாரந் தோன்றும் . . ."

என்ற செய்யுளுக்கு, உரைகாரர் கூறும் விளக்கம் :–

"திருவைந்தெழுத்தில் தோன்றும் நெறி : நாதத்தில் சிகாரமும்; விந்துவில் வகாரமும்; மகாரத்தில் யகாரமும்; உகாரத்தில் நகாரமும்; அகாரத்தில் மகாரமும் தோன்றுவதாம் என்க. சிவம் முன்னாக உச்சரிக்கும் பாக்கியம் ஏற்றவரே முத்திநெறி கண்டவராவார் என்கின்றது இச்செய்யுள். கோது – குற்றம்; நம்போதம் – ஆன்மபோதம்!"

– இத்தகு குறிப்புரைகளும் விளக்கங்களும் உள்ளன.

### சிவஞானபோத மாபாடியம் பொருள்நிலை விளக்கம்

மெய்கண்டார்

சிவஞான முனிவர் (உ.ஆ)

சி. அருணை வடிவேலு முதலியார் (வி.உ)

'சிவஞானபோதம்' – நூல் விளக்கவுரை, முதல் தொகுதியில் உள்ளது. சிவஞான போதத்திற்கு மாதவச் சிவஞான முனிவர், சிற்றுரை, பேருரைகள் எழுதியுள்ளார். இவற்றுள் 'பேருரை'யே, 'மாபாடியம்' எனப்படுகிறது.

இந்நூலின் தொடக்கத்தில், 'சிவஞான யோகிகள் வரலாற்றுச் சுருக்கம்' அமைந்துள்ளது. 'சிறப்புப் பாயிரம்' தொடங்கி, நூல் இறுதிவரை பாடியத்திற்கான விரிவான – தெளிவான விளக்கம் தரப்பட்டுள்ளது.

*"உள்ளதே தோற்ற உயிரனையும் இவ்வுடலின்*
*உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே – வள்ளலவன்*
*செய்பவர் செய்திப் பயன்விளைவிக்கும் செய்யேபோல்*
*செய்வன், செயலணையா சென்று!"*

என்னும் எடுத்துக்காட்டு வெண்பாவுக்கு, இவ்வுரையாசிரியர் தரும் விளக்கம்:–

"காரணம் இன்றிக் காரியம் நிகழாது என்பது முன்சூத்திரத்தில் சற்காரிய வாத முறைமையான் விளக்கப்பட்டது. அம்முறைப்படி நோக்கும் பொழுது, உயிர்களுக்கு விளையும் இன்பதுன்பங்களுக்கு உரிய காரணங்கள் இருத்தல் இன்றியமையாதது. அதனால் இன்பத்திற்குக் காரணமும், துன்பத்திற்குக் காரணமும் முறையே அவ்வுயிர்கள் முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளே என்பது உணரத்தக்கது என்றற்கு 'உள்ளதே தோற்ற' என்றார். 'இல்லது தோன்றாது' ஆகையினால், உள்ளதாகிய சஞ்சித வினையே உயிர்களுக்கு இன்ப துன்பங்களைத் தோற்றுவிக்கும் என்பது இதன் பொருள். இதனால், உலகாயதர் முதலியோரை மறுத்து, 'வினை உண்டு' என்பது நிறுவப்பட்டது!".

– இவ்விளக்கம் இன்னும் விரிந்து கொண்டே செல்கிறது.

நூல்முழுமையும் அரிய விளக்கங்களைக் காணலாம். சைவசித்தாந்திகளுக்கு இந்நூல் ஒரு கருவூலம் எனல் தகும்!

## சிவஞானபோதமும் சிவஞான பாடியமும்

*மெய்கண்டார்*

*மாதவச் சிவஞான சுவாமிகள் (உ.ஆ)*

*கழகம் (ப.ஆ.)*

'சிவஞான போதம்' நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், மெய்கண்ட தேவர் வரலாறு, சிவஞான யோகிகள் வரலாறு, அடுத்துச் சிவஞான போதச் சூத்திரமும் அதிகரணமும் திருவெண்பாத் தொகை, சூத்திரத் தொகை முதலியன உணர்த்தும் செய்யுட்கள், சூர்ணிக் கொத்து ஆகியன இடம் பெற்றுள்ளன.

அடுத்துச் 'சிவஞானபாடியம்'; சிறப்புப் பாயிரம், மங்கல வாழ்த்து, அவையடக்கம், பொதுவதிகாரம், உண்மையதிகாரம், வெண்பா முதற்குறிப்பகராதி, மேற்கோள் நூலகராதி, பொருளகராதி, அருஞ்சொல் சொற்றொடரகராதி முதலியன உள்ளன.

இவற்றில் 'மேற்கோள் நூலகராதி, பொருளகராதி, அருஞ்சொல் சொற்றொடகராதி பெரிதும் பயன்படும்.

**சிவஞான போதமும் வார்த்திகப் பொழிப்பும்**

*மெய்கண்டார்*

க. வச்சிரவேல் முதலியார்; ச. கங்காதரன் (ப.ஆ)

இந்நூலில், 'சிவ்ஞான போதம்' 12 சூத்திரம்; அடுத்துக் 'கருத்துரை', 'வார்த்திகம்' என அமைந்துள்ளது. 'சிவஞான பாடியத்'தைப் படிக்கப் புகுவோர், மூலபாடங்களை வரையறை செய்து, மனத்திற் கொள்வதற்குத் துணையாக இச்சிறுநூல் வெளியிடப்பட்டுள்ளது.

**சிவஞான போதமும் வார்த்திகப் பொழிப்புரையும் சிவஞான பாடியமும்**

*மெய்கண்டதேவர்*

கழகம் (ப.ஆ)

'சிவஞான போதம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'மெய்கண்ட தேவர் வரலாறு' 'சிவஞான யோகிகள் வரலாறு', 'சிவஞான போதச் சூத்திரமும் அதிகரணமும்' 'சூத்திரத் தொகை உணர்த்தும் செய்யுட்கள்', 'சூர்ணிக் கொத்து' முதலியன உள்ளன.

அடுத்துச் 'சிறப்புப்பாயிரம்', 'அவையடக்கம்' இவற்றிற்கு முனிவர் எழுதிய விரிவுரை. அதன்பின் சிவஞானபோதம் 12 சூத்திரத்திற்கு 'மாபாடியம்'

*"மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்*
*பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதை . . ."*

என்பது 'சிறப்புப் பாயிரம்'. முனிவர் பலபக்கங்களில் விரிவுரை தருகின்றார். அதில் ஒரு பகுதி –

"நிலவுலகம் முழுதும் பரந்த விருளென அதன் பெருமை கூறுவார் மலர்தலை யுலகின் மாயிருள்' என்றார். மா – பெருமை. ஆகாரமுன்னும் யகர உடம்படுமெய் சிறுபான்மை அருகி வருதலை 'மாயிருஞாலம்' (திருநாவுக்கரசர் தேவாரம்) என்றாற் போலக் கொள்க. மாயாத விருளினீக்குதற்கு மாயிருளென்றாரென வினைத்தொகை யாக்கலுமொன்று. இவ்விருளென்னும் பொருளதியல்பும் இதன் தோற்றமும் கண்ணிந்திரியத்தினியல்புரைப்புழிக் (2ஆம் சூத். 2ஆம் அதிகரணம்) காட்டுதும். ஒன்றோடொன்றொவ்வாத எல்லாச் சமயத்தாரானும் புகழப்படுதலிற் 'பலர்புகழ் ஞாயிறு' என்றார். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது . . . !"

– இத்தகைய, ஒப்பிலா உரை அமைந்த நூல்!

**சிவஞான போத மூலமும், சிவாகமத் தேர்ச்சியுள்ள சைவர் ஒருவரால் செய்யப்பட்ட உரையும்**

*மெய்கண்டார்*

திருமயிலை. முருகேச முதலியார் (ப.ஆ)

நூலின் தொடக்கத்தில், 'சிவஞான சித்தியாரி'ல் சொல்லப்பட்ட 'அளவை'களின் இலக்கணம் இடம்பெற்றுள்ளது. அதன்பின், 'சிவஞான போதம்' மூலமும் பொருளும் சொல்லப்பட்டுள்ளது.

*"காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்*
*காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா வன்பி னரன்கழல் செலுமே"*

என்பது 11ஆம் சூத்திரம். இதற்கு முன்னுரையாக, "இச்சூத்திரம் என்னுதலிற்றோ எனின், பரமேச்சுரனது சீபாதத்தை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று" என்று கூறி, சூத்திரத்திற்குச் சொற்பொருள் தருகின்றார் உரையாசிரியர்.

## சிவஞானபோத மூலமும் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் சிற்றுரையும்

*(ஸ்ரீ) மெய்கண்ட தேவநாயனார்*

*த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை (ப.ஆ)*

'சிவஞான போதம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில், 12 சூத்திரங்களுக்கும் உரிய 'சூர்ணிக் கொத்து' உள்ளது.

12 சூத்திரங்களுக்கும் விவரமான 'பொருளடக்கம்' தரப்பட்டுள்ளது. சூத்திரம் – 12; அதிகரணம் – 39; திருவெண்பா – 81. அடுத்துச் 'சிவஞான போதம் – சூத்திரக் கருத்து' – 2 பாடல்; அதிகரண வெண்பாத் தொகை – 1 பாடல்; சூரணி முதலியவற்றின் தொகை – 1 பாடல்; சூர்ணித் தொகை – 1 பாடல் கொடுக்கப்பட்டுள்ளன.

*"கல்லா னிழன்மலை*
*வில்லா ரருளிய*
*பொல்லா ரிணைமலர்*
*நல்லார் புனைவரே!"*

என்பது 'மங்கல வாழ்த்து'. இதற்குப் பொருள் உரைத்த சிவஞான முனிவர், பின்வருமாறு விளக்கமும் இலக்கணக் குறிப்பும் தருகின்றார்:

"நல்லார் புனைவ ரெனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்றவாறாயிற்று. மூவகை வாழ்த்துள், இது, பொருளியல்புரைத்ததெனக் கொள்க. 'அருளிய' வென்பது 'செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அது, 'புனைவர்' என்னும் பிறவினை முதல்வினை கொண்டது. 'இல்லார்' இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப் பெயர்.

'அருளிய பொல்லார்' எனப் பெயரெச்ச முடிபாக வைத்துரைப்பினுமமையும்!

இந்நூலின்கண் முனிவர் உரை அப்படியே தரப்பட்டுள்ளது. கற்றுவல்லார்க்கே இதன் அருமை புரியும்.

## சிவஞான போதம் விளக்கம்

*மெய்கண்டார்*

அழகரடிகள் (உ.ஆ)

சிவஞான போதம் – நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், ந. ரா. ஆடலரசு எழுதிய 'என்னுரை' உள்ளது. அடுத்து, வ. ஆ. தேவசேனாபதியின் 'அணிந்துரை' இடம் பெற்றுள்ளது. அதனையடுத்து உரையாசிரியர் 'அழகரடிகள் வாழ்க்கைக் குறிப்புகள்' அமைந்துள்ளன.

சிவஞான போதம் முதல் நூற்பா.

*"அவன் அவள் அதுஎனும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்!"*

இதில் வரும் 'மலம்' பற்றி உரையாசிரியர் தரும் விளக்கம்:

"உலகங்களும் அண்டங்களும் எல்லாம் ஒடுங்கும் போது, நுட்பமாக மாறி, மாயையில் ஒடுங்குகின்றன. மாயை, மலத்தின் ஒருபிரிவு ஆகும். இம் மலம், ஆண்டவனை போலவே சத்தி வாய்ந்ததாகும். இதுவும் அநாதியாய் இருந்து வருகிறது. இம்மலத்துக்கும் ஆண்டவனுக்கும், எப்போதும் ஒரு போர் நடந்து கொண்டே இருக்கிறது. உலகில் நாம் காணும் எல்லாச் சண்டைகளும், பூசல்களும், இவ்விருவர் சண்டையில் அடங்குவனவேயாம். மலம், ஒருவர் வடியில் சண்டையைக் கிளறிக் கொண்டே இருக்கும். அதை உணர்ந்து, நாம் எப்போதும் அதை எதிர்த்துக் கொண்டே இருக்க வேண்டும். இந்த எதிர்ப்பு, ஆளுக்கு ஆளும், நாட்டுக்கு நாடும், கொள்கைக்குக் கொள்கையும் ஆக எல்லா நிலைகளிலும் உண்டு. ஒருபுறம் விலங்குத் தன்மையை வெளியிட்டுக் கொண்டு மலமும்; மறுபுறம் தெய்வத் தன்மையை வெளியிட்டுக் கொண்டு இறைவனும், நின்று போர் புரிவதை எங்கும் காணலாம்! . . . இறுதியில் ஆண்டவன், மலத்தை வென்று விடுகிறான்! இவை போன்ற விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## சிவஞான போதம் (தெளிவுரை)

*மெய்கண்டார்*

கு. வைத்தியநாதன் (உ.ஆ)

'சிவஞான போதம்' நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 'சிறப்புப் பாயிரம்' முதல் 12 ஆவது சூத்திரம் வரை, அனைத்திற்கும் தெளிவுரை அமைந்துள்ளது. முதலில் 'சூத்திரம்'; அடுத்துப் 'பொருள்'; அடுத்துத்

'தெளிவுரை' என உள்ளது.

*"அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்!*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்!"*

என்பது சிவஞானபோதத்து முதல் சூத்திரம். இதற்குச் சொற்பொருள் கூறியபின், 'தெளிவுரை' எழுதுகின்றார் உரையாசிரியர்.

" 'அவை' என்னும் சொல், 'அவன் அவள் அது' என்னும் மூன்றையும் சுட்டி நிற்கவில்லை. அம்மூன்றையும் சேர்த்துக் கூட்டி நிற்கும் தொகுதியைக் குறிக்கும். எனவே, 'அவை' என்பது 'உலகத் தொகுதி' எனப்பட்டது.

'மூவினைமை' என்பதில் உள்ள, 'வினைமை' என்பது 'வினை உடைமை' என்னும் பொருளைக் குறிக்கும். அஃதாவது முத்தொழில் செய்யும் தன்மை உடையதாகும்.

'தோற்றிய' என்னும் சொல், பிறவினை வாய்பாட்டால் கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. 'தன்வினை' என்பது தானே தொழிற்படுதல்; 'பிறவினை' என்பது பிறரால் தொழிற்படுவது. எனவே இப்பிரபஞ்சம், கருத்தா ஒருவனால் முத்தொழிற்படும் தன்மையை உடையது என்பது பெறப்படும் . . . !"

– இத்தகைய எளிய உரைவிளக்கம் கொண்டது இந்நூல்!

## சிவஞான போதம் வழித்துணை விளக்கம்

*மெய்கண்டார்*

ஆ. ஆனந்தராசன் (வி.உ)

சிவஞானபோதம் – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'நூல் முகம்' உள்ளது. இதில், 'சிவஞானபோத நூலின் சீர்மை, நூலின் ஆசிரியர், நூலின் பெயர், பெயர்க்காரணம், நூல் அமைந்துள்ள முறை, சைவ சித்தாந்தப் பொருள் நிலை' ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

அடுத்துக் 'கடவுள் வாழ்த்து' முதல் 12ஆம் சூத்திரம் வரை ஒவ்வொன்றாக மூலம், அதனையடுத்துப் 'பொருள்', 'விளக்கம் எனும் முறையில் உரையாசிரியர் விளக்குகின்றார்.

*"அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாம்சென்றங்கு*
*அவ்வினையைக் காந்த பசாசம்போல் – அவ்வினையைப்*
*பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்*
*ஆர்தாம் அறிந்து அணைப்பார் ஆங்கு"*

இப்பாடலுக்குரிய பொருளைத் தந்து விட்டுப் பின்வருமாறு விளக்குகின்றார் இவ் உரையாசிரியர்:–

"ஒரு வீட்டில் கணவன், மனைவி, மகன் என்ற மூவரே உள்ளனர் எனக் கொள்வோம். அவ்வீட்டினுள்ளே தொலைக்காட்சிப் படம் ஓடிக் கொண்டிருப்பது தெரிகிறது. கணவன் அலுவலகத்திற்குச் சென்று விட்டான் என்பதும்; அவன் மனைவி காய்கறி வாங்கச் சென்றவள் திரும்பவில்லை என்பதும் உறுதியாகத் தெரிந்தால், மூவரில் இருவர் போக, எஞ்சியுள்ளவனாகிய மகனே படம் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று துணியலாம் அல்லவா? இவ்வாறு துணியும் முறையைப் 'பாரிசேடம்' என்பார். தமிழில் 'ஒழிபு' எனப்படும்.

வினை, உயிர், இறைவன் என்ற மூன்றில், வினை சடம் ஆதலின் அது தானே தன்னைச் செய்தானைச் சென்றடையாது என்பது தெரிகிறது. உயிர் அறிவுடையதாயினும், அதன் அறிவு, அறியாமையால் மூடப்பெற்று, விளங்காது கிடத்தலின், அதுவும் தான் செய்த வினையின் பயனை அறிந்து எடுத்துக் கொள்ள மாட்டாது என்பதும் தெளிவாகிறது. எனவே எஞ்சியுள்ளவனாகிய இறைவனே வினைகளின் பயனைக் கூட்டுவிப்பான் என்பது 'பாரிசேடத்'தால் துணியப்படும்.

– இத்தகைய எளிய விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## சிவஞான போதார்த்த வெகுவசனம்

*மெய்கண்டார்*

ராம. சொக்கலிங்கன் (உ.ஆ)

மெய்கண்டார் அருளிய 'சிவஞான போதத்'திற்கு விரிவான விளக்கம் தரும் நூல் இது. சிவஞான போதம் 8ஆம் சூத்திரத்தின் முதல் அதிகரணம்

"ஈண்டு, இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞான நிகழுமென்றது!"

இதற்கு விரிவான விளக்கம் தரும் உரையாசிரியர், பின்வருமாறு ஞானசம்பந்தரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்:–

"சூரியநார் கோயில் ஆதீனம் ஸ்ரீ சிவாக்கர யோகீந்திர ஞான சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த 'சிவநெறிப் பிரகாசத்'தில், "துருவாச ரகத்தியர்நற் கவுதமர் . . . . சிவனருள் சேர் – மதலையாய்த் திருவவதாரஞ் செய்த, கரவாத திருஞான சம்பந்தர் . . . ." என்ற திருப்பாசுரம் சிவகுமாரராய்த் திருவவதரித் தருளிக் கரவாமல் விளங்கி யருளுந் திருஞானசம்பந்தர் என்று விளக்குகின்றது. . . . இனி, சுப்பிரமணியர் மகிமைகளையே விளக்கி, அவரது பரத்துவ நிரூபணமே செய்து, அதற்கு எவ்வித ஊனமுமின்றென்பதை விளக்கியருளுகின்ற அநுபூதிச் செல்வராகிய அருணகிரிநாதரும், திருவருளால் வெளியிட்டருளிய 'திருப்புகழ்' முதலிய திருப்பாடல்களில் ஏகதேசத்தில் அமையாமல் அனேக இடங்களில் சுப்பிரமணியரே ஞானசம்பந்தராக வந்தருளினாரென்று கூறி, அது அவரது மகிமைகளில் அதிவிசேஷ மகிமையென்பது காட்டியருளினார். சுப்பிரமணியரே

ஞானசம்பந்தரென்பது அவரது பரத்துவத்துக்குப் பழுதாமென்று சிலர் கொள்வது போல, அருணகிரியார் கருத்து இருக்குமானால், பரத்துவமே விளக்குகின்ற அவர் அவ்வாறு கூறாரென்க!"

– இத்தகு புதிய விளக்கங்கள் இந்நூலில் உள்ளன.

## சிவஞான மாபாடியம் (விளக்கம்)

*மாதவச் சிவஞான முனிவர்*

சி. சு. மணி (உ.ஆ.)

சிவஞான போதத்திற்குரிய உரை நூலே 'மாபாடியம்'. சிவஞான போதம் நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் 'அணிந்துரை, மெய்கண்டார் வரலாறு, சிவஞான முனிவர் வாழ்வும் பணியும்' முதலியன உள்ளன.

*"உள்ளதே தோற்ற உயிர்அணையும் அவ்வுடலின்*
*உள்ளதாம் முதற்செய்வினை உள்அடைவே – வள்ளலவன்*
*செய்பவர் செய்திப் பயன்விளைவிக்கும் செய்யேபோல்*
*செய்வன், செயல் அணையா சென்று!"*

என்பது இந்நூலில் வரும் எடுத்துக்காட்டு வெண்பா. இதற்கு இந்நூல் உரையாசிரியர் தரும் விளக்கம்:

"இந்த எடுத்துக்காட்டு வெண்பாவுக்கு யாப்பு அமைதி கூறுகிறார் முனிவர். 'முற் செய்வினை' என்பதனைத் தனித்தனியாக எடுத்து அலகிட்டால், 'நேர் நேர் நிரை' எனவரும். அவ்வாறு வந்தால் வெண்பாவுக்குரிய தளை கெடும். ஆயினும் 'செய்' என்பதில் உள்ள பகர ஒற்று, ஓசை பெறாது ஆகையால் செப்பல் ஓசைக்குச் சிதைவில்லை என்கிறார் முனிவர். ஏனெனில் எழுத்துக்கு மாத்திரை கொள்ளுதல் இசை பற்றியே என்பதனால் இதனை 'நேர் நிரை நேர்' என்று கொண்டு, வெண் சீர் சிதையாமல் காண வேண்டும் என்கிறார். காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியில் 46, 64 ஆகிய பாடல்களில் இவ்வாறு அலகிட வேண்டிய இடங்கள் வருகின்றன . . . !"

– இத்தகைய அரிய விளக்கங்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

## (ஸ்ரீமத்) சிவஞான யோகிகள் புகழ் மாலை

*மு. ஆறுமுக தேசிகர் (ப.ஆ)*

திருவாவடுதுறை ஆதினந்து முனிவர்களும், புலவர்களும், மாதவச் சிவஞான யோகிகள் மீது பாடிய புகழ்ப் பாமாலையின் தொகுப்பு இந்நூல்.

இதில், 'மதுரகவி சுப்பிரமணிய முனிவர்' முதல் 'ஸ்ரீ கச்சியப்ப முனிவர்' வரை 25 அருளாளர்கள் பாடிய பாடல்கள் உள்ளன.

*"ஓராழி உண்டமுனி உட்கவட சொற்கடலும்*
*சீரார் தமிழ்க்கடலும் சேரவுண்டு – பாருலகில்*
*தீங்கவியா மாவுறையால் செய்யசிவ ஞானமுகில்*
*ஈங்கவியா நீக்கும் இடர்!"*

என்பது சிவஞான யோகிமீது வள்ளல் பாண்டித்துரைத் தேவர் பாடிய பாடல்.

### சிவதரிசன அகவல்

*(?)*

'அகவல்' என்பது யாப்பில் ஒருவகையான ஆசிரியப்பா. இதில் 119 அடிகள் உள்ளன. மூலமட்டுமே உள்ளது.

*'உரோமசமுநிக ளுண்மகிழ்ச்சியுடன்*
*பணிந்திடு கின்ற பழங்கிரி மேய*
*விருத்தவம் பிகையே விண்ணப்பமொன் றுண்*
*டுரைக்கேன் யானும் உன்செவி சாத்தி*
*அருள்செய வேண்டும் . . . . !'*

எனத் தொடங்குவது.

*'உயிரும் அருளும், விளங்கிடும் சிவமாய் விளங்கிடும் போதில்*
*உயிரும் அருளும் ஒருசிவமே யாம்!"*

என்று குறிக்கின்றது.

### சிவபுராணம் என்னும் முதற்பா

*மாணிக்க வாசகர்*

திருவாசகத்துள் முதற்கண் அமைந்திருப்பது 'சிவபுராணம்'. திருவாசகத்தைப் பற்றிய விளக்கம் முதல் தொகுதியில் உள்ளது.

உரையாசிரியர், 'நமச்சிவாய வாஅழ்க!' எனும் சிவபுராணப் பாடலுக்கு விரிவான உரைவிளக்கம் தருகின்றார். ஆனால், 'பாடபேதங்கள், திருத்தங்கள்' நிறையவுள்ளன. அவற்றிற்கான காரணங்களையும் கூறுகின்றார்.

*"ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க!"*

என்பது சிவபுராணத்தில் வரும் 5ஆவது அடி. இவ்உரையாசிரியர், "இறைவன்தன் தாள் வாழ்க!" என்று மாற்றிப் பொருள் காண்கின்றார்.

நூலின் இறுதியில், 'திருக்குறளின் ஆசிரியர்தம் மதம் சமணமே' எனும் கட்டுரையும் இடம் பெற்றுள்ளது.

### சிவபெருமான் – உமாதேவியார் தமிழ்ப்போற்றிகள் – 1008

*ச. சாம்பசிவனார் (தொ. ஆ)*

நாயன்மார்களும் ஆழ்வார்களும் அருளிச் செய்த அனைத்துமே 'மந்திரங்கள்'. எலும்பைப் பெண்ணுருவாக்கியது, அரவு தீண்டியவனை உயிர்ப்பித்தது, கடலிலே கல்லை மிதக்கச் செய்தது எனப் பல்வேறு அதிசயங்களை நிகழ்த்திய சத்தி, 'சம்பந்தர்' முதலான நால்வர் பாடிய பதிகங்கட்கு உண்டு.

திருக்கோயில்களில் 'அர்ச்சனை' செய்ய விரும்புவார்க்கெனத் தேவாரம் திருவாசகங்களிலிருந்து தொகுக்கப் பெற்றவை இப்போற்றிகள். இவை 'அகர' வரிசையில் உள்ளன. வீட்டில் வழிபாடு செய்வோர்க்கும் இது பயன்படும்.

"ஓம் அகர முதலின் எழுத்தாகி நின்றவா போற்றி!
ஓம் அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாயண்ணலே போற்றி!"

என்று தொடங்குவது!

## சிவப்பிரகாசம் (தெளிவுரை)

உமாபதிசிவம்

சி.சு. மணி (உ.ஆ)

'சிவப்பிரகாசம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'சிவப்பிரகாசம்' நூல் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்து.

'காப்பு'ச் செய்யுள் உட்பட 101 பாடல்கள் மூலமும் தெளிவுரையுமாக அமைந்துள்ளன.

"கண்ணொளி விளக்கு அளித்தும் காட்டிடும் என்னில் முன்னம்
கண்ணொளி ஒன்றும் இன்றாம் விளக்கொளி கலந்து அவற்றைக்
கண்ணொளி அகலநின்றே கண்டிடும் வேறுகாணா
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்துஒன்று அன்றே!"

இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரையில்,

"கண், ஒளியைச் சார்ந்தும் இருளைச் சார்ந்தும் முறையே பார்வை பெற்றும்; பார்வையற்றும் நிற்பது என்பதனால், உயிர் இறைவனைச் சார்ந்து பேரின்பத்தையும், மலத்தைச் சார்ந்து அறியாமையையும் பெறுதற்கு உரியது என்பது விளக்கப்பட்டது. விளக்கொளியின் உதவியின்றிக் கண், காண இயலாதது போலத் திருவருளின் உதவியின்றி உயிரும் அறிய இயலாதது என்பது உணர்த்தப்பட்டது!" என்கின்றார்.

– இத்தகைய விளக்கம் தரும் நூல் இது!

## சிவானந்த போதம்

(?)

'போதம்', விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது; இந்நூலின் தொடக்கத்தில்

'துதிப்பாடல்கள்' 10 உள்ளன. அடுத்து 100 பாடல்கள் உள்ளன. முதலில் 'வசனம்'; அதனையடுத்துப் 'பாடல்' என உள்ளது.

"அறிவு, மனதை நோக்கி மனமே! என்ன? கணமுநில்லாது இந்திரிய வாயிலில் அலைப்புற்று, முன்னைய ஊழ்யாதெனக் கருதாது அவத்துற்றனை, அந்தோ! நீ உய்யுமா றிசைக்குதுங் கேட்டி!"

இதனையடுத்துவரும் பாடல் :-

"ஆன நெஞ்சமே யிமைப் பொழு தாகிலும் மலைவறுத் திருந்தாயோ
போன நாளிலே நடந்தது மிருந்ததும் புதுமைக ளறியாயோ?
ஈனமாகிய கவலையை நீக்கியைம் பொறியினி லிணங்காமல்
தான மொத்துநான் சொன்மொழி கேட்டுநீ சரியென மகிழ்வாயே!"

– இவ்வாறு அமைந்துள்ளது இந்நூல்!

## சீர்பாத வகுப்பு

அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)

'சீர் பாத வகுப்பு' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. திருவண்ணாமலை ஈசர் மீது பாடப்பட்டது. இதில் பின்வரும் 'சந்தக்குழிப்பு' உள்ளது.

"தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான தானதன!"

இச்சந்தக் குழிப்பு அமைப்பில் பாடப்படும் பாடல்:

"உததியிடை கடவுமர கதவருண குலதுரக
வுபலளித கனகரத சதகோடி சூரியர்கள் . . . !"

– இது 32 அடிகள் கொண்ட ஒரே பாடல்! மூலமட்டுமே உள்ளது.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத் திருப்பதிகங்கள் - ஏழாம் திருமுறை (பொழிப்புரை, குறிப்புரை)

சி. அருணைவடிவேல் முதலியார் (உ.ஆ)

'தேவாரம்' – நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை, 7ஆம் திருமுறையில் உள்ள தலங்களின் வரலாற்றுக் குறிப்புக்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு (அகச் சான்றுகளுடன்), சுந்தரர் தேவாரப் பொருளாராய்ச்சி, நாயன்மார் வரலாற்றுக் குறிப்புக்கள், அரும் பொருளகராதி, மேற்கோள் அகராதி, தலப்பதிக அட்டவணை, பண்களின் அட்டவணை' ஆகியன விரிந்த முறையில் சொல்லப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பதிகத் தொடக்கத்திலும், அப்பதிக வரலாறு உள்ளது. பாடல், பொழிப்புரை, குறிப்புரை, சொற்பொருள், பிறநூல் மேற்கோள் என்னும் முறையில் அமைந்துள்ளது.

"நாயேன்பல நாளும் நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாஉனக் காளாய்இனி அல்லேன் எனலாமே!"

எனும் பாடலின் குறிப்புரையில், இந்நூல் உரையாசிரியர் தருவது :-

" 'கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்' (தொல். பொருள். 280) என்றவாறு, இழிவு மிகுதிக்கு உவமை கூறுங்கால் நாயைக் கூறுதல் வழக்காதல் பற்றி, 'நாயேன்' என்று அருளினார். 'மனத்து' என வேண்டா கூறியது, 'உன்னை நினையாத மனம், கோளில் பொறி போலக் குணம் இலதாமன்றே' என அதன் பயனையும், அது பெறாமையையும் நினைந்து. 'பேயாய்' என்பதில் உள்ள ஆக்கச் சொல் உவமை குறித்து நின்றது. 'ஆள்வா ரிலிமா டாவேனோ' (திருவாச. 21.7) என்பதிற்போல. பேய், பயனின்றி விரையத் திரிதலின், அச்செயற்கு அஃது உவமையாயிற்று. அலமரலை மிக உடைமை பற்றியே பேய்க்கு, 'அலகை' என்னும் பெயர் உளதாயிற்று. திரிந்தமை இன்பத்தைப் பெறுதற் பொருட்டும், எய்த்தமை அது பெறாமையானும் என்க. ஆயன் – உயிர்களாகிய ஆயத்தை (பசுக் கூட்டத்தை) உடையவன்!"

– இத்தகைய அரிய விளக்கங்களைத் தருவது இந்நூல்!

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் (தலமுறை)

கி. வா. ஜகந்நாதன் (கு.உ)

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில், 'பண்கள் அட்டவணை' உள்ளது. இதில் 'இந்தளம்' முதல் 'பஞ்சமம்' வரை – 17 பண்கள், அப்பண்கள் அமைந்த பாடல் எண்கள் தரப்பட்டுள்ளன. அடுத்துச் 'சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு' உள்ளது. பின்பு, தலமுறை வாரியாகத் தேவாரப் பாடல்கள். ஒவ்வொரு பாடலிலும் அடிக்குறிப்பாகச் சொற்பொருள் உள்ளது.

"படங்கொள் நாகம் சென்னி சேர்த்திப்
பாய்புலித்தோல் அரையில் வீக்கி
அடங்கலார் ஊர் எரியச் சீறா
அன்று மூவர்க் கருள்புரிந்தீர்!
மடங்கலானைச் செற்றுகந்தீர்!
மனைகள்தோறும் தலைகை ஏந்தி
விடங்கராகித் திரிவ தென்னே
வேலைசூழ் வெண் காடனீரே!"

– 'திருவெண்காடு' திருத்தலப் பதிகம். பண் : இந்தளம். இதன் அடிக்குறிப்பு

வருமாறு :-

"வீக்கி – இறுக்கிக் கட்டி; அடங்கலார் – பகைவர்; மூவர்க்கு – திரிபுரத்தின் தலைவர்களாகிய அசுரர்கள் மூவருக்கு; அருள் புரிதலாவது, திரிபுரங்களை மாத்திரம் அழித்து, அங்கிருந்த மூவரையும் வாயில் காவலராகவும், முழவு வாசிப்பவனாகவும் அமைத்தருளியது. விடங்கர் – பேரழகை உடையவர். வெண்காடனார் என்பதன் விளி, வெண்காடனீரே என்பது"

– இவ்வாறே ஏனைய பாடல்களுக்கும் உள்ளது!

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப் பதிகங்கள்

கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் (ப.ஆ)

'தேவாரம் விளக்கம்' முதல் தொகுதியில் உள்ளது. சுந்தரர் பாடியவை: 100 பதிகம்.

தலப்பெயர் – பண் – மூலபாடம் – பாடலின் முடிவில் எந்தநாட்டிலுள்ள தலம். இறைவன் – இறைவி திருப்பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

"ஊனங் கைத்துயிர்ப் பாயுல கெல்லா
மோங்கா ரத்துரு வாகிநின் றானை. . . !"

என்று தொடங்கும் பாடல், 'திருவலிவலம்' என்ற தலத்தில் பாடப்பட்டது. பண் : தக்கேசி. சோழ நாட்டில் உள்ளது. இறைவன்: மனத்துணைநாதன்; இறைவி : மாழையங்கண்ணியம்மை.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் (7ஆம் திருமுறை) உரையுடன்

எம். நாராயண வேலுப்பிள்ளை (உ.ஆ)

'சுந்தரர் தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'சுந்தரர் தேவாரம் – திருத்தலங்கள்' என்ற பட்டியல் உள்ளது. இதில் 100 திருத்தலங்கள் குறிக்கப்பட்டுள்ளன. அடுத்துப் 'பண்களின் அட்டவணை' உள்ளது. இதில் 17 பண்கள் – அவை இடம் பெற்ற பதிகங்கள் தரப்பட்டுள்ளன.

அடுத்துச் 'சுந்தரர் வாழ்க்கை வரலாறு' விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. பின்னர் 'வாழ்வும் இலக்கியமும் – ஆராய்ச்சிப் பகுதி' உள்ளது. இதில், ஒன்பான் சுவைகள் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

'மூலமும் பொழிப்புரையும்' ஆக அமைந்துள்ளது. ஒவ்வொரு 'தலத்தின் பெயர், இறைவன் – இறைவி திருப்பெயர்கள் – பதிக வரலாறு' முதலியன பாடலுக்குமுன் குறிக்கப்பட்டுள்ளன.

"தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்

பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்!
இம்மையே தரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே!"

என்பது, திருப்புகலூர்த் திருப்பதிக முதற்பாடல். இதற்கு முன்னுரையாக உரையாசிரியர் தரும் குறிப்பு!

"பண் : கொல்லி; நாடு : சோழநாடு; சுவாமி : அக்கினீசுவரர்;

அம்பிகை : கருந்தார்க்குழலம்மை

வரலாறு : பங்குனி உத்திரத் திருநாளில் பரவை நாச்சியார் செய்யும் தான தருமங்களுக்குப் பொருள் வேண்டியிருந்தமையால், ஆளுடைய நம்பிகள் திருப்புகலூருக்குச் சென்று இறைவரைத் தரிசித்து, கோயிலின் முற்றத்தில் அங்கிருந்த செங்கற்களையே தலையணையாக வைத்துத் துயின்றார். துயில் எழுந்து பார்க்க, தலைக்கு உயரமாக இருந்த செங்கற்கள் பொன்னாகியிருக்கக் கண்டு, இறைவர் திருவருளை நினைந்து வியந்து இப்பதிகத்தைப் பாடியருளினார்!"

இதன்பின், பாடலுக்குப் பின்வருமாறு பொழிப்புரை தருகின்றார்:-

"தம்மையே புகழ்ந்து இச்சகமாகப் பேசினாலும், தம்மை அடுத்திருந்தாலும் தொண்டருக்குச் சிறிதும் தரமாட்டாத பொய்ம்மையுடைய மானுடரைப் பாடாமல் என் அப்பன் எழுந்தருளிய திருப்புகலூரைப் பணிந்து பாடுங்கள் புலவர்களே! அவ்வாறு பாடினால் இம்மையில் வேண்டுவனவாகிய நல்ல உணவும் சிறந்த உடையும் அவன் தருவான்! இவ்வகையால் இறைவனைத் துதித்தலும் ஆகும். அதனால் துன்பங்களையெல்லாம் போக்கிக் கொள்ளலும் ஆகும். மறுமையில் சிவலோகத்தை நம்முடையதாக ஆளுவதற்கும் ஐயமில்லை!"

– இத்தகைய விளக்கத்தையுடைய நூல்.

## (ஸ்ரீ) சுப்ரமண்யர் கீர்த்தனங்கள்

பு.அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ.)

இறைவன் மீது இராகத்தோடு பாடப்படுவன கீர்த்தனங்கள். இந்நூலில், முருகன் மீது பாடப்பட்ட 12 கீர்த்தனங்கள் உள்ளன.

இராகம் – பைரவி. தாளம் – ஆதி.

பல்லவி

"தஞ்சம் நீயே யென்னைத்
தவற விடாதே!

அநுபல்லவி

கொஞ்சி மருவுந் தெய்வ
குஞ்சரி லோலனே – தஞ்சம் நீயே!

சரணங்கள்

அன்னை தந்த குருவும்
அனைவரும் நீதா னன்றோ!
பின்னையா ரையடைவேன்
ப்ரணவஸ்வரூபனே – தஞ்சம் நீயே . . . !"

என்பன போன்ற கீர்த்தனங்கள் உள்ளன.

## சேக்கிழார் பிள்ளைத்தமிழ் (குறிப்புரை)

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் (உ.ஆ)

'பிள்ளைத்தமிழ்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'மீனாட்சி சுந்தரம் பிள்ளை வரலாற்றுச் சுருக்கம்', 'சேக்கிழார் நாயனார் புராணம்', 'சிற்புப் பாயிரம்' (10 பாடல்கள்) உள்ளன.

ஒவ்வொரு பருவத்தைப் பற்றிய 'சிறுவிளக்கம் – பாடல் – குறிப்புரை' எனும் முறையில் அமைந்துள்ளது.

"வம்பிட் டொளிர்முலை மாதுமை காண
மணிப்பொது நடனஞ்செய்
வார்முன மனநைந் துருகிட நிற்றன்
மதித்தவர் முதனல்க . . .
கொற்றச் சேவையர் காவல நாவல!
கொட்டுக சப்பாணி!"

என்பது 'சப்பாணிப் பருவப் பாடல்.

இதற்கு உரையாசிரியர் தரும் குறிப்புரை:–

"வம்பு – கச்சு; உமையம்மையார் காணுவது – மருந்தின் வேகம் பொறாப் பசுங்குடருடைக் குழவியினது நோயுண் மருந்தைத் தாயுண்டாங்கு, நடங்கண்டு பயனெய்த மாட்டாத ஆன்மாக்கள் பொருட்டுத் தாங்கண்டு அதனை அவர்க்கு உதவுமாறு என்று உண்மைநூல் கூறும். முனம் – சந்நிதியில்; மதித்தவர் – மதித்து அவர்; நறுவிரை நல்கி அலங்கல் புனைந்து நகும் பரிவட்டஞ் சாத்தியது

– நடேசப் பிரானுக் கணிந்த திருநீறும் திருமாலையும் திருப்பரிவட்டமும் அளித்தது. இதனை, 'வள்ளலார் புரநீறெழக் கணையொன்று தொட்டுயர்மன்றில் வாழ், வள்ளலார் திருமாலையுந் திரு நீறுமெய்ப்பரிவட்டமும், எள்ளலாரல ரென்று சேவையர் காவலர்க் கிவையினிதனித் 'தள்ளலார் வயனீடுதில்லையி லனைவரும் களி கொண்டபின்' என்ற அவர் புராணக் கவிகாண்க! . . .'

– இத்தகைய அரிய விளக்கம் தரும் நூல்.

## சேக்கிழார் பிள்ளைத்தமிழ் (உரையும் வினாவும்)

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை

மு. கோவிந்தராசன் (உ.ஆ)

'பிள்ளைத்தமிழ்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. இதில், இப்பிள்ளைத்தமிழின் சிறப்புக்கள் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

அடுத்துச் 'சேக்கிழார் வரலாறும், திருத்தொண்டர் புராண வரலாறும்', 'மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வரலாற்றுச் சுருக்கம்', 'உமாபதி சிவாசாரியார் வரலாறும், பெற்றான் சாம்பான் வரலாறும்', 'பிள்ளைத் தமிழின் இலக்கணம்', 'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ப் பருவ விளக்கம்' ஆகியன இடம்பெற்றுள்ளன.

"பாடல் – பொழிப்புரை – தொகுப்புரை – உரைக்கருத்து – குறிப்புரை" எனும் அமைப்புடையது.

பிள்ளைத்தமிழில் 7ஆவது 'அம்புலிப் பருவம்'. இவ்உரையாசிரியர் 'வெண்மதிப்பருவம்' எனப் பெயர் கொடுத்துள்ளார். அதில் வரும் ஒருபாட்டு.

"எம்மை இனிது ஆள்பவன் செம்மைமதி யவன் நீ
இயற்கையே வெண்மை மதியோன்
எற்றைக்கும் மிகுதண்மை உடையவரோடு உறவு கொளும்
இயல்பினால் எங்கள் ஐயன் . . . !"

என்னும் பாடல், 'வெண்மதிப் பருவத்'தில் வருவது.

இதற்குப் 'பொழிப்புரை' எழுதியபின், 'தொகுப்புரை'யாக இவர் எழுதுவது:–

"மதியே! நீ இயற்கை வெண் மதியோன்; எம்மை ஆள்பவன் செம்மை மதியவன்; நீ, வெம்மையுடையவர்களோடு உறவு கொள்ளுவாய்! எங்கள் ஐயன், தண்மையுடையவர்களோடு உறவு கொள்ளுவோன்; கிருபாமூர்த்தி; என்றும் ஒரே தன்மையன்; நீ வளருவாய், தேய்குவாய், இரண்டும் இல்லாதிருப்பாய்; இவை தெரிந்தும் ஐயன் விளையாட அழைத்தது முழுக்கருணை என்று அறிந்து விளையாடவருக!"

இதனையடுத்துக் 'குறிப்புரை'யும் உள்ளது.

இவ்வகையில் இந்நூற் பொருளை அறியப் பெரிதும் துணைபுரியும்!

### (ஸ்ரீ) சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

சி. ஜெகந்நாதாச்ாரியர். (உ.ஆ)

'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரலாற்றுச் சுருக்கம்' உள்ளது. நூலின் தொடக்கத்தில், 'பாயிரம் – 2 பாடல்கள், அடுத்துக் 'காப்புப் பருவம்' முதல் 'சிறுதேர்ப் பருவம்' வரை 101 பாடல்கள்.

ஒவ்வொரு பாடலுக்கும் 'குறிப்புரை' தரப்பட்டுள்ளது. இதில், அருஞ்சொற்பொருள், இலக்கணக்குறிப்பு, பிறநூல் மேற்கோள் முதலியன சொல்லப்பட்டுள்ளன.

"மாயா மலங்கரும மலமிவைச் கேதுவா" என்று தொடங்கும் 'வாரானைப் பருவப்' பாடலுக்கு இவ் உரையாசிரியர், தமது குறிப்புரையில்,

"மாயாமலம் – மும்மலத்துளொன்றான மாயை யாகிய மலம். இதன் இலக்கணத்தை 'நித்தமாய் அருவாய் . . . . செய்யுமன்றே' என்றது சித்தியார். கருமமலம் – இதுவும் மும்மலத்துனொன்றான கன்மமாகிய மலம். 'இருவினை இன்பதுன்பத் திவ்வுயிர் . . . வினைப் பலன்கள் (சிவஞான சித்தி) என்றதற்கேற்ப, கன்மமாகிய இதுவே உயிர்கள்பாற் காணப்படும் பல்வேறு இன்ப துன்பங்கட்கும் பிறவி மாறுதலுக்கும் காரணமாமென்பது தெளிவு . . ."

என்று கூறுவது சான்று. இவ்வாறே, பல்வேறு விளக்கங்களும் மேற்கோள்களும் உள்ளன.

### (1) சேக்கிழார் புராணம்; (2) திருமுறை கண்ட புராணம்

உமாபதி சிவாசாரியார்

சபாபதி முதலியார் (ப.ஆ)

இவ்விரு நூல்கள் பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'சேக்கிழார் புராணம்' – பாயிரம் – 10 பாடல்; பாடல்கள் – 94. ஆகத் திருவிருத்தம் – 104. 'திருமுறை கண்ட புராணம்' – காப்பு 1 பாடல் தவிர 45 பாடல்கள். மூலம் மட்டுமே உள்ளது.

### சைவ சமய போதினி (அ-1)

(ஆறுமுக நாவலர்)

இம்முதல் தொகுதியில் 'அகத்தியரும் பிள்ளையாரும்' முதலான சைவ சமயக் கதைகள் இடம் பெற்றுள்ளன. இறுதியில், மூவர் தேவாரம், திருவாசகம், புராணம் ஆகியவற்றில் ஒரு சில பாடல்களும் உள்ளன. சிறுவர்களுக்கு ஏற்ற நூல்.

### சைவசமய போதினி (அ-2)

*(ஆறுமுக நாவலர்)*

இவ் இரண்டாம் தொகுதியில், பெரிய புராணத்தில் இடம்பெற்ற சில நாயன்மார் வரலாறுகள் இடம் பெற்றுள்ளன. மற்றும் 'சிபிச் சக்கரவர்த்தி' முதலான கதைகளும் உள்ளன. நூலின் இறுதியில் தேவாரப் பாக்களில் சில, புராணப் பாடல்கள், திருப்புகழ் முதலாயின உண்டு. சிறுவர்களுக்கு ஏற்ற நூல்.

### சைவ சமய போதினி (அ-3)

*(ஆறுமுக நாவலர்)*

இந்நூலில், திருவிளையாடற் புராணக் கதைகள், சுந்தரர் வரலாறு, பட்டினத்தார், கௌசிகர் எனப் பலவகைக் கதைகள் இடம்பெற்றுள்ளன.

இறுதியில், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருப்புகழ் ஒரு சில பாடல்கள் உள்ளன. சிறுவர்களுக்கு ஏற்ற நூல்.

### சைவ சமய போதினி (அ-4)

*(ஆறுமுக நாவலர்)*

இந்நூலில் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலானவற்றிலிருந்து சில கதைகள் உள்ளன. நூலின் இறுதியில் தேவாரம், திருவாசகம், கந்தபுராணம், திருப்புகழ்ப் பாக்கள் சில இடம்பெற்றுள்ளன. சிறுவர்களுக்கு ஏற்ற நூல்.

### சைவ சமய போதினி (அ-5)

*(ஆறுமுக நாவலர்)*

இந்நூலில் பெரிய புராணத்திலிருந்து சில வரலாறுகள், மார்க்கண்டேயர், கோயில் கிரியைகள் ஆகியன படங்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் தேவாரம், திருவாசகம், கந்தபுராணம், திருப்புகழ் முதலானவற்றிலிருந்து சில பாடல்கள் தரப்பட்டுள்ளன. சிறுவர்களுக்கு ஏற்ற நூல்.

### சைவ சித்தாந்த சாரம் (சித்தாந்த நிச்சயம்)

*சிவாநந்த தேசிகர்*

இதில் 51 பாடல்கள் உள்ளன. மூலம் மட்டுமே உள்ளது.

*"மரிக்கும் பிறக்கு மவத்தையுறும் வான்போம் நிரையம் புகும்புலன்க*
*டெரிக்கும் பொறியிற் றனித்தனியே சேரு மனத்தி னொடுங்கணத்திற்*
*றரிப்பில் கறங்கின் சுழலுமெனத் தக்கோ ருலகிற் பற்பலவாய்*

*விரித்திங் குரைத்த திறமுயிர்க டனையே யல்லால் வேறுண்டோ?*

என்பது இவற்றில் ஒன்று!

**சைவ நெறித் தேன் அமுது**

*பெ. வேலு (ப.ஆ)*

இந்நூலில், திருவாசகம் – திருப்பள்ளியெழுச்சி, திருவெம்பாவை, சிவபுராணம், 'அடியவர்கள் அருளியவை' என்ற தலைப்பில் பல்வேறு பாக்களும் உள்ளன.

நாளும் பாராயணம் செய்வதற்கு ஏற்ற சிறுநூல்!

**சொக்கநாத வெண்பா (மூலமும் உரையும்)**

*ஸ்ரீ குருஞான சம்பந்தர்*

சி. அருணைவடிவேல் (உ.ஆ)

'சொக்கநாத வெண்பா' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு' தொடக்கத்தில் சொல்லப்பட்டுள்ளது. அடுத்துச் 'சொக்கநாத வெண்பா' மூலம், அதையடுத்து 'உரையும் குறிப்பும்' உள்ளன.

*"என்போல் மலகடினர் எவ்விடத்தும் கண்டதுண்டோ?*
*இன்பே மதுரைக் கிறைவனே! – அன்பேதும்*
*இல்லா தெனையாண்ட எண்ணத்தால் தேவரீர்*
*எல்லாமும் வல்லசித்த ரே!"*

எனும் பாடலுக்கு உரையாசிரியர் தரும் 'உரையும் குறிப்பும்':–

"இன்ப வடிவானவனே! மதுரை நகருக்கு அரசனே! சொக்கநாதப் பெருமானே! என்னைப் போல ஆணவமலம் மிக வன்மையாகப் பொருந்தப் பெற்றவரை எந்த இடத்திலாயினும் நீ கண்டது உண்டோ? அத்துணை மல வன்மையால், உன்னிடத்தில் அன்பு சிறிதும் இல்லாத என்னை, உனக்கு அன்பனாக்கி ஆட்கொண்ட கருணையால், 'நீ எல்லாம் வல்ல சித்தனே' என்பது தெளிவாகி விட்டது!

**குறிப்பு**

'கடினரை' என்னும் இரண்டனுருபும், 'இல்லாத என்பதன் ஈற்று 'அகரமும்' தொகுத்தல் பெற்றன. 'தேவரீர்' என்பது விளிப் பெயர். 'அப்பா, ஐயா' போன்ற விளிப்பெயர்கள் முதல் வேற்றுமையாய் நிற்றல் பிற்கால வழக்கு, உயர்த்தற்கண், ஒருமை பன்மை மயங்கின. தகுதி பற்றியே இறைவன் ஆட்கொண்ட போதிலும், அவனது கருணையன்றித் தம் தகுதி, பெரியோர் உள்ளத்துத் தோன்றாமை இயல்பாதலை,

'கல்நார் உரித்த கனியே போற்றி' (திருவாசகம் – போற்றி – 97)

*"இல்லைநின் கழற் கன்ப தென்கணே*
*ஏலம் ஏலும்நற் குழலி பங்கனே*
*கல்லை மென்கனி ஆக்கும் விச்சைகாண்*
*டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்!"* *(திருச்சதகம் : 94)*

என்றாற் போலும் திருமொழிகள் பற்றியும் உணர்க!

– இத்தகைய அரிய விளக்கங்கள் கொண்ட நூல்.

## (ஸ்ரீ) சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்;

## (ஸ்ரீ) மீனாட்சியம்மையார் தோத்திரப் பாமாலை

மகா. சோமசுந்தர சுவாமி.

'சதகம்', 'மாலை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'சாத்துக்கவிகள், குருபரம்பரை வணக்கம்' உள்ளன. 5 + 21 = 26 பாடல்கள்.

அடுத்துத் 'தோத்திரச் சதகம்' காப்பு, அவையடக்கம் : 5 பாடல்கள்; நூல் – 100 பாடல்கள்; இறுதியில் 'வாழ்த்து' – 1 பாட்டு. மூல மட்டுமே உள்ளது. சிலவற்றில் அடிக்குறிப்பாகச் சில சொற்களுக்குப் பொருள் தரப்பட்டுள்ளது.

*"புரிகின்ற பூசையொரு கோடிக்கு நிகரதாம்*
*புகழ்பாடி யேதுதித்தல்*
*புகலுமத் துதிகளுக் கொருகோடி நிகரதாம்*
*புனிதமந்த் ரஞ்செபித்தல் . . .*
*துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்*
*சொக்கலிங் கக்கடவுளே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## சோண சைல மாலை

*துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்*

'மாலை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'சோண சைலம்' என்பது திருவண்ணாமலை. ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது நூலின் தொடக்கத்தில் 'காப்பு'–1ம், அடுத்து 100ம் இறுதியில் 'சிறப்புப் பாயிரம் – 1ம் ஆக 102 பாடல்கள், பாடல்கள் எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தத்தால் ஆனவை.

*"சீரணி புகழுங் கல்வியுஞ் சிறந்த செல்வமு மில்லில்வாழ் பவர்க்குப்*
*பேரணி கலமென் புதல்வருங்கதியும் பெறத்துதிப் பவர்க்கருள் பவனி,*
*நேரணி கதியை மறந்தவர் கண்டு நினைந்துற மிக்கபே ரருளாற்*

*றாரணி முழுதுந் தோன்றிடுஞ் சோண சைவனே கைலைநா யகனே!"*

என்பது இறுதிப் பாடல். முழுதும் மூல பாடங்கள்!

**சோணாசல சதகம்**

*புராணிகர் சோணாசல முதலியார்*

சதகம் – 100: 'சதகம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. சோணாசலம் – திருவண்ணாமலை. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது.

இந்நூலில் 10 வெண்பாக்கள் மட்டுமே உள்ளன.

*"சோதிவடி வாயிருவர் தேடத் துலங்கு முக்க*
*ணாதிவடி வார்சடையி னார்கங்கை – பாதிச்*
*சசியணிந்தார் சோணா சலமதனைச் சற்றா*
*லசியமின்றிச் சேர்வா மிது!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூலபாடம்.

**சோணாசல வெண்பா**

*புராணிகர் சோணாசல முதலியார்*

'வெண்பா' யாப்பினால் பாடப்பட்டது. 'சோணாசலம்' எனப்படும் திருவண்ணாமலை ஈசன் மீது பாடப்பட்டது. இதில், 'காப்பு' – 1 தவிர 100 வெண்பாக்கள் உள்ளன.

*"கங்கைச் சடையுங் கருணைத் திருமுகமு*
*மங்கை மழுமானு மரைக்கசைத்த – பொங்கரவுஞ்*
*செந்தாளு மெந்நாளுஞ் சேவிக்க மேன்மேலும்*
*தத்தாளுஞ் சோணா சலா!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூலபாடம்.

**ஜோதி வழியில் வள்ளலார்**

*கோ. வன்மீக நாதன் (ஆங்கிலம்)*

பகீரதன்; மு. இராமலிங்கம் (த. மொ)

'கடவுளைக் காண வள்ளலார் நடந்த வழி' என்ற ஆங்கில நூலின் தமிழ்மொழிபெயர்ப்பு இந்நூல்.

இதில், 'குழந்தை சிரிக்கிறது' முதல் 'இன்புறு நிலை நெறியின் இரண்டாவது படி' வரை 11 தலைப்புக்கள் உள்ளன. இராமலிங்க சுவாமிகள் பாடிய திருவருட்பாவிலிருந்து 300 பாடல்களின் விளக்கம் உள்ளது.

*"கருணையே வடிவாய்ப் பிறர்களுக்கு அடுத்த*
*கடுந்துயர் அச்சமா திகளைத்*
*தருணநின் அருளால் தவிர்த்தவர்க்கு இன்பம்*
*தரவும்வன் புலைகொலை இரண்டும்*
*ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க*
*உஞற்றவும் அம்பலந் தனிலே*
*மருவிய புகழை வழுத்தவும் நின்னை*
*வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்!"*

என்பது 'பிள்ளைச் சிறு விண்ணப்பத்'தில் வருவது.

'இதோ ஒரு மனிதன்' என்ற தலைப்பில் இடம் பெற்ற பாடல்.

"உண்மையில் தமிழர்களாகிய நாம் எப்படி யிருக்கிறோம்? கண் இருந்தும் குருடர்களாக இருக்கிறோம்; காது இருந்தும் செவிடர்களாக இருக்கிறோம். இதய மிருந்தும் இரக்கமற்ற அரக்கர்களாக இருக்கிறோம். இப்போதாவது வள்ளலாரின் வழியைப் பின்பற்றி வாழ முயல்வோம் ...!"

என்பன போன்ற வாழ்க்கைத் தத்துவக் கருத்துக்களைக் கூறும் நூல்.

## சோழவந்தான் - பேட்டை ஸ்ரீ மந்தார விநாயகர் பதிகம்

*ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்.*

இந்நூல், சோழவந்தானில் எழுந்தருளியுள்ள மந்தார விநாயகர் மீது பாடப்பட்டது எழுசீர் ஆசிரிய விருத்தப் பாக்கள் 11 உள்ளன. மூலம் மட்டுமே உள்ளது.

*"அகத்தினும் புறத்து மெவற்றினு நிறைந்த*
*வானந்தப் பிழம்பெனு நின்னை*
*யிகத்தினி லடியே னெடுத்துரை துதியு*
*மெழுங்குழ மழலையாக் கொள்வாய்*
*மகத்தினு மகத்தே யணுவினு மணுவே*
*மன்னிய நுண்மைச்செம் பொருளே!*
*தொகத்தரு மலர்மந் தாரநன் னிழல்வாழ்*
*சுகாதிபா மகாகண பதியே!"*

என்பது அவற்றில் ஒன்று!

**சௌந்தரியலகரி**

*ஆதிசங்கரர்*

வீரை கவிராச பண்டிதர் (மொழிபெயர்ப்பு)

'லகரி' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'விநாயகர் வணக்கம்' முதலான 6 பாடல்கள் உள்ளன. நூலின் கடைசியில் 'நூற்பயன்' – 1 பாடல். இவை தவிர 103 பாடல்கள் உள்ளன.

மூலமும் பொழிப்புரையும் விளக்கவுரையுமாக அமைந்தது.

'தேவி விரைந்து வரங் கொடுத்தல்' என்ற தலைப்பில் வரும் பாடல் :–

*"பேர்உறும் கயிலாசன் மகன்பெறு பேரன்*
*அன்புறு பேரன் எனும் சொலால்*
*வாரம் அன்பொடு பார்வை வழங்கென*
*வாய்திறந்திட ஓடி வழங்கினாய்!*
*வேரி முண்டகன் மால்மகு டங்களின்*
*வீசரும் ப்ரபை தீபம் உவந்ததால்*
*சேரு நன்பெரு வாழ்வும் வழங்குவை*
*தேடரும் சிவமாய மதங்கியே!"*

எனும் பாடலுக்குப் பின்வரும் உரை தரப்பட்டுள்ளது!:

"பெருமை பொருந்திய கயிலாயத்தில் வீற்றுள்ள உனது தலைவனது பெயரைப் 'பெருங்கயிலாசன்' என்றும், ஒருவனுடைய மகன் பெற்ற பேரனானவன் அன்புறுகின்ற பேரன் இவன் என்று என்னை யாவருஞ் சொல்லும் சொல்லினால், நமக்கும் அடியான் என்ற உரிமை பற்றிட அன்போடு பார்வை வழங்கு என்று, யான் சொல்லக் கருதி வாய்திறந்திடுமளவில், அதுகண்டு ஓடிவந்து வழங்கினாய்! அஃதன்றி அச்சொல் முழுதுஞ் சொன்னால் தேன் பொருந்தியிருக்கும் தாமரையையுடைய நான்முகனும், திருமாலும் விளங்குகின்ற மகுடங்களிலே நின்று வீசப்பட்ட ஒளிக்கற்றைகளாகிய தீப ஆலாத்தியை உவந்த

உன்னுடைய தாளிலே சேர்கிற சாயுச்சியமாகிய பெருவாழ்வையும் கொடுப்பாய்! தேடுதற்கரிதாகிய சிவனுடைய மாய மதங்கியே!

'அடியார்க்கு அடியான்' என்ற உரிமை பற்றித் தம்முடைய பாட்டனுடைய பாட்டன் கைலாசன் எனப்பட்டது . . .!"

– இவ்வாறு உரைவிளக்கம் உடைய நூல்!

# 'த'

## தசகாரியம்

*ஆ. ஆனந்தராசன் (உ.ஆ)*

சைவ சித்தாந்த சாத்திரநூல்களில் சொல்லப்படும் 'தசகாரியம்' பற்றிய முழுமையான விளக்க நூல் இது. தசம் – பத்து. காரியம் – படிநிலை. 'தசகாரியம்' என்பது, உயிர், பாசத்தின் உண்மை வடிவைக் கண்டு, அதனை நீங்கித் தனது உண்மை வடிவைக் கண்டு, இறைவன் திருவருளில் தோய்ந்து, இறையின்பத்தை நுகரும் திறத்தைப் பத்தும் படிநிலைகளாக வைத்துக்கூறும் முறையாகும்.

பாசத்தின் நீங்கி முதல்வனை அடைதலாகிய ஞானச் செய்தியைப் பத்துப் படிநிலைகளாக வைத்து உணர்த்துவர். அப்பத்துமே 'தசகாரியம்' எனப்படும். அவை :– தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி; ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி; சிவரூபம்; சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன. இப்பத்து நிலைகளும், உயிர் மெய்யுணர்வை எய்தும் முறையையும் அதன் அறிவில் நிகழும் மாற்றங்களையும் தெரிவிப்பனவாகும்.

இந்நூலில், 'தசகாரியம்' பற்றிய விளக்கம், தசகாரிய நூல்கள், உண்மை நெறிவிளக்கம், பிறநூல்களில் தசகாரியம் எனப்பலவும் இடம்பெற்றுள்ளன.

'திருத்தணிகைப் புராணத்' தில் வரும் 'சிவபோகம்' பற்றிய பாடல் :–

*"ஒன்றுறும் அதனால் ஒருபொருள் ஆகாது,*
*இரண்டினால் வேறும் ஆகாது*
*தொன்றுறு நிலையே நிலையதாய்த் சேர்ந்து*
*துன்னலும் துன்னுறா மையும் அற்று,*
*அன்றும்ஆ ணவத்தின் அழுந்தியாங்கு அறிவாய்*
*அறிவினுள் அழுந்தி அங்கு அறிவு*
*பொன்றியும் பொன்றாது அவசமாய் இன்பப்*
*புணரிவாய் மடுப்பது போகம்!"*

இப்பாடலுக்கு உரையாசிரியர் பின்வருமாறு பொருள் உரைக்கின்றார்:

"ஆன்மா, சிவத்தோடு கூடுங்காலை நீரும் நீரும் கலந்தாற் போல ஒரு

பொருளாகி விடாது. ஆன்மா, பொருட்டன்மையால் சிவத்தின் வேறாயிருப்பினும், இருளும் ஒளியும் போல வேறாகியும் நில்லாது, அநாதி அத்துவித நிலையே நிலையாகப் பெற்றதனால், சிவத்தோடு வந்து சேர்தலும் இல்லை; வந்து சேராமையும் இல்லை. கேவல நிலையில் ஆணவமலத்தில் அழுந்தி, அறியாமையே வடிவாய் நின்றாற்போல, இம் முத்திக் காலத்தில், ஞானமே வடிவாய்ச் சிவஞானத்துள் அழுந்தி, உயிரறிவாகிய சுட்டுணர்வு நீங்கப் பெற்று, சிவஞானத்தால் சிவத்தை உணரும் உண்மையுணர்வு நிலைபெற்று, அவ்வுணர்வும் தன் வசமிழந்து சிவத்தின் வசமேயாகி ஆனந்தக் கடலமுதை வாரி விழுங்கித் திளைப்பது 'சிவபோகம்' ஆகும்.

– இத்தகைய விளக்கங்கள் உள்ள நூல் இது!

## தத்துவ சித்திக் கலிப்பா

தத்துவராய சுவாமிகள்

'கலிப்பா' என்பது யாப்பில் ஒருவகை.

இந்நூலின் தொடக்கத்தில் 'நேரிசை வெண்பா' – 1 உள்ளது. இதில் பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா – 1; மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா – 3; தனிச்சொல்; ஆசிரியச் சுரிதகம் – 1; கட்டளைக் கலித்துறை – 1 ஆகியன அமைந்துள்ளன.

"திருவாரு மருண்மேகஞ் செழுங்கருணை முகந்தெழுந்தோ
குருவாயென் சென்னியெனு மொருமலைமா முகடேறி . . ."

என்று தொடங்குவது.

"தெரிப்பதற்கரிய சிவப்பிரகாசன் திருவருளால் . . ." என்று வருவதால், இப்பாடல் சிவப்பிரகாசரைப் பற்றியது எனத் தெரிகிறது.

## தமிழ்முறை தினசரி தியானம்

ப.சு. மணியன்

'தியானம்' என்பது, ஒன்றையே இடைவிடாமல் எண்ணியிருப்பது; ஒன்றிலேயே ஒன்றி நின்றுவிட்ட உள்ளம், வேறொன்றிலும் சென்று பற்றாது, பற்றற்றான் பற்றினையே பற்றி நிற்குமாயின் அதுவே 'தியானம்'.

இந்நூலில் 'தேவாரம், திருவாசகம், தாயுமானவர் பாடல், அருட்பா' எனப் பலவும் உள்ளன. பாடலுக்குமுன் அப்பாடற் கருத்துத் தரப்பட்டுள்ளது.

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணில் நல்லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!"

எனும் சம்பந்தர் தேவாரப் பாடலுக்குப் பின்வருமாறு கருத்துரை தரப்பட்டுள்ளது.

"இறைவா! கருணையே வடிவான நீயும் உமையம்மையும் சேர்ந்திருக்கும் திருக்கோலத்தை என் மனத்தில் நிறுத்தி உங்கள் இருவரையும் போற்றிப் புகழ்கிறேன். இந்த மண்ணில் நல்ல வண்ணம் எவ்விதக் குறைகளும் இல்லாமல் வாழ்ந்து நற்கதியைப் பெற அருள் புரிவீர்களாக! சீர்காழிப் பதியில் வீற்றிருக்கும் உங்கள் இத்திருக்கோலத்தை மனதிலே இருத்தி, இருத்தி உங்களை அன்பினால் வாழ்த்தி, தியானித்துக் கொண்டிருப்பேன்!"

– இவ்வாறே பிறபாடல்களுக்கும் கருத்துரை தரப்பட்டுள்ளது.

### தாயுமான சுவாமிகள் வண்ணம்

பு.அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ)

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. தாயுமானவர் பாடிய 'வண்ணம்' ஒருபாடல்:

"அருவென் பனவுமின்றி உருவென் பனவுமன்றி
அகமும் புறமு மன்றி முறைபிற ழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலம தாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று ளறிவினர் காண
ஞானவெளியிடை மேவுமுயிராய். . . !"

என்று தொடங்குவது! மூலமட்டுமே உண்டு!

### தாயுமானவடிகள் திருப்பாடல்கள் (சித்தாந்தச் சிறப்புரை)

ப. இராமநாதபிள்ளை (உ.ஆ)

'தாயுமானவர் பாடல்கள்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. இதன்கண் ஒவ்வொரு தலைப்புக்கும் உள்ள பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது. அடுத்துத் 'தாயுமானவடிகள் வரலாற்றுச் சுருக்கம்' உள்ளது.

இதில், 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் முதல் 'வண்ணம்' வரையிலான பாடல்களும் விளக்கங்களும் சொல்லப்பட்டுள்ளன. இறுதியில், அருளையர் பாடிய 'அருள் வாக்கிய அகவல்' உள்ளது.

'தேசோமயானந்தம்' பகுதியில் வரும் பாடல்:–

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாம்

கட்செவி எடுத்தாட்டலாம் . . .''

என்னும் பாடலுக்கு உரையாசிரியர் தரும் பொருள் :–

''கட்டுத்தறியை முறித்துத் தள்ளும்படியான மதமிக்க யானையையும் நம் வயப்படும்படி நடத்துதல் கூடும்; கொல்லும் கொடுமை வாய்ந்த கரடியையும், கொடிய புலியையும் வாய்திறக்கவொட்டாது, கட்டி விடலாம்; ஒப்பில்லாத சிங்கத்தின் முதுகின்மேல் ஏறி அமர்ந்திருத்தலும் ஊர்ந்து செல்லுதலும் கூடும். கட்செவி எனப்படும் நச்சுப் பாம்பினைப் புற்றினின்றும் எடுத்து ஆட்டுதலும் செய்யலாம் . . . . !''

– இவ்வாறு எழுதியதன்றிச் சொற்பொருளும் தந்து, சிவஞான சித்தியார் முதலான மேற்கோளும் காட்டுகின்றார் உரையாசிரியர்.

தாயுமானவர் பாடலுக்கு மிகத் தெளிவான உரைநூல் இது!

## தாயுமானவரின் திருப்பாடல்கள் (மூலமும் உரையும்) முதல் தொகுதி

அ. மாணிக்கனார் (உ.ஆ)

'தாயுமானவர் பாடல்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'தாயுமானவரின் வரலாறு' உள்ளது. 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்' முதல், 'பாயப்புலி' வரை 27 பாடல்கள் உள்ளன.

''ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல் லாம்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெல வே நினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும் . . . . பரிபூரணானந்தமே!''

என்ற பாடலுக்கு உரைகாரர் தரும் விளக்கம் :–

''பார்க்கும் இடம் எங்கும் நீக்கம் இல்லாது நிறைந்து விளங்கும் முழுநிறைவான பேரின்பமே! அவாவிற்கு ஓர் எல்லை இல்லை! உலகங்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஒருகுடையின் கீழ் ஆட்சி செய்யினும் அங்ஙனம் ஆளும் மன்னர், 'கடலின் மீதும் தன் ஆணை செல்ல வேண்டும்' என்று எண்ணுவர் . . . . . இவை எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்க்கும் போது, வயிற்றுப் பசி நீங்கச் சோறு என்ற மருந்து உண்ணுதலும், காமநோய் தீரச் சிற்றின்பம் அனுபவித்தலும், உடல் இளைப்பு நீங்க அயர்ந்து உறங்குதலும் என்ற இவ்வளவிலேயே முடியும்! ஆகவே, உள்ளதே போதும், 'நான் நான்' என்று அகங்காரம் கொண்டு புலம்பி, ஒன்றைவிட்டு ஒன்றைத் தொட்டு, ஆசை என்ற கடலுள் விழுந்து அழுந்தாமல், மனம் அடங்குதலான தூய அடிமை நிலையை எனக்கு அருளல் வேண்டும்!''

– இவை போன்ற விளக்கம் அமைந்த அரிய நூல் இது!

## தாயுமானவர் திருப்பாடல்கள்

ப. இராமநாதபிள்ளை (உ.ஆ.)

'தாயுமானவர் பாடல்கள்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ஓர் அரிய முன்னுரை உள்ளது. தாயுமானவர் பாடலின் திரண்ட கருத்துத் தரப்பட்டுள்ளது. அடுத்துத் 'தாயுமான அடிகள் வரலாற்றுச் சுருக்கம்' தரப்பட்டுள்ளது. தாயுமானவர் பாடல், பொருள், விளக்கம் எனும் முறையில் அமைந்துள்ளது.

"அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம் . . . ."

எனும் முதற்பாடலுக்கு உரையாசிரியர், மிக நீண்டதொரு விளக்கம் தருகின்றார்.

"திருவருள் என்றது தடையிலா மூதறிவு (சிவஞானம்)ப் பொருளான, வடிவங்கொள்ளாத அறிவாற்றலை, பரமசிவம் என்றது, இன்பநிலையமான வடிவங்கொள்ளாத சிவத்தினை. ஆகம வேதங்களின் கருத்துக்கு அப்பாலாய் உயிருக்கு உயிராய் உயிர்கட்கெல்லாம் அறிவை விளக்குவிக்கும் சிவசத்தி வடிவராய அம்மையப்பர் வணக்கம் கூறியதாயிற்று. எல்லாம் வல்ல விழுமிய முழு முதல்வனை அம்மையப்பராக ஓதும் உண்மை, வரும் செந்தமிழ்த் திருமாமறை திருமாமுறைத் திருப்பாட்டுக்களின் உணர்க!"

என்று கூறும் இவர், திருவாசகம் முதலான பல்வேறு நூற்சான்றுகளைக் காட்டுகின்றார்.

நூல் முழுவதும் இத்தகைய அரிய பல விளக்கங்களைக் கொண்டுள்ளது.

## திருஆலவாய் (மதுரை) திருப்பதிகங்கள்

பன்னிரு திருமுறை மன்றம் (ப.ஆ,)

நூலின் தொடக்கத்தில் 'மதுரைத் தலச் சிறப்பு'; அடுத்து, 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு', 'குமரகுருபரரும் மதுரையும்'; 'திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம்', 'மதுரையைப் பற்றிய நூல்கள்' ஆகியன இடம் பெற்றுள்ளன.

'திரு ஆலவாய்த் திருப்பதிகங்கள்' என்ற தலைப்பில், சம்பந்தர் பாடிய மதுரைப் பதிகங்கள் –9; திருநாவுக்கரசர் பாடிய பதிகங்கள்–2 ஆகிய தவிரச் சம்பந்தர் மதுரையில் தங்கியிருந்த போது, தம் தந்தை முதலானோரைச் சந்தித்துச் சீர்காழி தோணியப்பரை வினவுமுகமாகப் பாடிய பதிகம் – 1; திருவாலவாய்த் தொடர்புடைய பிற தேவாரத் திருப்பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. மதுரையைப் பற்றிய திருவாசகப் பாடல்கள், பெரிய புராணப் பாடல்கள், சொக்கநாத வெண்பா

ஆகியனவும் உள்ளன.

முற்பகுதியில் உள்ள தேவாரப் பாடல்களுக்கு உரிய பொழிப்புரையும் தரப்பட்டுள்ளது. மதுரையைப் பற்றி அறிய விரும்பும் சைவர்களுக்குப் பெரிதும் பயன்படும் நூல் இது!

## திரு இரும்பூளை என்னும் ஆலங்குடி தலவரலாறு

**கோ. சிவஞானம் (எ) மருள் நீக்கியார்**

இந்நூல் ஏலவார்குழலி அம்பிகை உடனுறை அருள்மிகு காசியாரண்யேசுரர் எழுந்தருளிய ஆலங்குடி என வழங்கும் திரு இரும்பூளை கோயிலின் வரலாற்றைச் சுருக்கமாக உரைக்கிறது.

நூலின் தொடக்கத்தில், 'தல வரலாறு' உள்ளது. பின்னர்ச் சம்பந்தர் பதிகம் 11 பாடல்; அப்பர் திருத்தாண்டகம் – 1 பாடல்; பெரிய புராணம் – 1 பாடல்; தட்சிணாமூர்த்தி திருவருட்பா – 10, நவக்கிரக தோத்திரம் – 9 பாடல் ஆகியன இடம்பெற்றுள்ளன. இறுதியில், தஞ்சை மாவட்டத்தில் உள்ள 'நவக்கிரக தலங்கள்' பற்றிய விவரம் உள்ளது.

"சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார் முலைமங் கையொடும் உடனாகி
ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்ட ஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே!"

என்பது சம்பந்தர் பாடல். ஆலங்குடி தலவரலாறு அறிய உதவும் நூல்.

## திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம்

**திருமயிலை சண்முகம் பிள்ளை**

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இதன் தொடக்கத்தில் 'வஞ்சித்துறை' யாப்பில் அமைந்த 'காப்பு'ச் செய்யுள் உள்ளது. அடுத்துத் 'தலைவனை வியத்தல்' என்ற துறையில் 'கல்யாணி' இராகத்தில், 'ஆதி' தாளத்தில் பாடப்படும் பாடல் உள்ளது:–

"ஞானா னந்தனுக் கிடந்தரு நகந் தருங்கொடி
உமைபயி ரவுகவு ரியனருள் பாலை
சூதா குந் தனத் திலன்பொடு கரந் தரும்பர
சுகநிலை தருமமு தருமறை நாடு . . . ."

என்று தொடங்கும் பாடலுக்குப் பின்வரும் சந்தக் குழிப்பு அமைந்துள்ளது:

"தானா தந் தனத் தனந்தன தனந் தனந்தன
தனதனதனதன தனதான தான
தானா தந் தனத் தனந்தன தனந் தனந்தன

தனதனதனதன தனதனதான
தானாதனதனதன தானாதனதனதன
தானாதன தான தந்தனா!''

## திருக்களிற்றுப்படியார் விளக்கக் கட்டுரை

திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார்

தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் (உ.ஆ)

சைவ சித்தாந்த சாத்திர நூல் பதினான்கில் ஒன்று, 'திருக்களிற்றுப் படியார்'. 'திருவுந்தியார்' என்ற நூலின் வழிநூல் இது! இந்நூல், 100 வெண்பாக்கள் கொண்டது. யாவும் அநுபூதிக் களஞ்சியங்கள்.

இந்நூலை, இதன் உரையாசிரியர், 'உபதேசப்பகுதி, உபாயப்பகுதி, ஆசாரிய நிட்டைப்பகுதி' எனப் பகுத்து, முதலாவதில், அறியவேண்டுவன தொகுத்து, உபாயப் பகுதியில் 'சிவதன்மம், சிவயோகம், சிவஞானம்' என்ற பகுப்பை வகுத்துக் காட்டி, இறுதியில் அனைத்திற்கும் ஆதாரமான ஞானாசாரியர் பெருமையினைப் 'பொதுவும் சிறப்புமா'க அமைந்திருந்தலைப் புலப்படுத்தி, இத்தலைப்புக்களை ஆங்காங்கு அமைத்து, அவ்வமைப்புக்களின் கீழ் திருக்களிற்றுப் படியாரின் வெண்பாக்கள் இசைந்திருத்தலை பலரும் எளிதில் உணரும்படி எளியமுறையில், ஏற்ற உவமைகளுடன், இனிய தமிழ்நடையில் தந்துள்ளார்.

'சைவ சித்தாந்தச் சிறப்பு' என்ற தலைப்பில் வருவது பின்வரும் திருக்களிற்றுப் படியார் பாடல்:

''இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார் – இன்றிங்கே
அங்கம் உயிர் பெறவே பாடும் அடியவரார்
எங்குமிலை கண்டாய் இது!''

இதற்கு உரையாசிரியர், 'கருத்துக்கள் :– (1) சிவம் காட்டும் உண்மை; (2) அடியார் அவ்வழி ஆற்றல்' என்று முன்னுரைத்து அடுத்துப் பின்வருமாறு 'விளக்கம்' தருகின்றார்:–

''ஒன்றை உறுதியாய்க் கூறுபவர் மன்றத்தே நின்று கூறுவர். இதனால் அது, உண்மை யெனப்படும். தானும் தன் மனைவியுமாய்க் கூறுதல், மேலும் உறுதியாகும். 'மையறு சிறப்பின் மிக்க மனையவள் தன்னைப் பற்றி, மொய்யலர் வாவிழக்கு மூழ்குவாய்' எனச் சிவபெருமான், திருநீலகண்ட நாயனாரை உத்தரவிடுதலால் இச்செய்தியை உணரலாம். ஒருநாள் கூறிப் பின்னர் மறைந்திடாதிருத்தல் அவ்வுண்மையின் மேற்பட்ட உண்மை இல்லை என்பதைக் காட்டும். இந்த முறையிலே சிவபெருமான் ஞானசத்தியுடனே திருஅம்பலத்தே என்றும் எழுந்தருளியிருந்து ஆனந்த நிருத்தம் செய்தருளித் தன்

மெய்யடியார்கட்கு எடுத்தருளிய ஸ்ரீபாதமோக்ஷ என்பதைத் திருக்கரத்தாலே காட்டியருளி (மோனத்தால் மொழிந்து) திருக்கண் சாத்தியருளி, யாவருங்காண நிற்பது போல, வேறெச் சமயத்தும் இல்லை! இதுவே பரமஞான உபதேசம் எனப்படும். இது சைவ சித்தாந்தத்தே நிகழ்வது. ஆதலால் பலரும் ஏற்ப ஒப்பற்ற உண்மையை மன்றிலேறிக் கூறும் இச்சமயமே உண்மையான 'ஞானசமயம்' ஆகும். இதனைக் கர்த்தாவின் செயல் கொண்டு நாம் துணிதல் தக்கதாகும். இதனையே, 'இன்று இச்சமயத்தின் அல்லது மற்றேழையுடன் ஒன்று சொல்லி மன்றத்து நின்றவர் ஆர்' என்று கட்டுரைத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர். ஆகையால், யாவரும் இச் சன்மார்க்க நெறி நிற்றலே தக்க செயலாமென்க!''

– இவைபோன்ற அரிய விளக்கங்கண் இந்நூலில் உள்ளன.

## திருக்குற்றால ஊடல்

திரிகூடராசப்பக் கவிராயர்.

திருக்குற்றால நாதருக்கும் குழல்வாய் மொழியம்மையாருக்கும் 'ஊடல்' நேர்ந்ததாகக் கற்பனையாகப் பாடப்பட்டது. 'காப்பு' – 1 தவிர 20 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலையடுத்தும் அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

குழல்வாய் மொழியம்மை, குற்றாலநாதரைப் பார்த்து ஊடல் கொள்வதாக வரும் பாடல் :–

"ஆரிருந்தும் தனித்திருந்தும் பிறைமவுலித் திரிகூடத் தண்ணலாரே!
சீரியபொன் முலைக்குறியும் வளைக்குறியும் பெற்றிருந்த தேவரீர்தா
மார்பிலொரு மைக்குறியும் வாடைமஞ்சட் குறியுமின்று வரப்பெற் றீரே!
நேரிழைதன் பேருரையீர்! வஞ்சந்தானோ உமது நெஞ்சந் தானே!''

இதன் அடிக்குறிப்பாக வருவது:–

"ஆரிருந்தும் – பொருந்தியிருந்தும்; மவுலி – முடி; முலைக்குறியும் வளைக்குறியும், உமை சிவபிரானைத் தழுவக் குழைந்த கதையிற் காண்க. (காஞ்சிப் புராணம்).

– இவ்வாறே பிறபாடல்களுக்கும் குறிப்புரை உள்ளது.

## திருக்குற்றாலக் குறவஞ்சி (குறிப்புரை)

திரிகூடராசப்பக் கவிராயர்

ச. சாம்பசிவனார் (உ.ஆ)

'திருக்குற்றாலக் குறவஞ்சி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில், 'திருக்குற்றால குறவஞ்சி' என்ற தலைப்பில் பல அரிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. "திருக்குற்றாலம், திரிகூட ராசப்பக் கவிராயர், குறவஞ்சிக் கரு, யாப்பு முறை, கதைச் சுருக்கம், சொல் நயம், பொருள்

நயம், தொடைநயம், அணிநயம், சுவை நயம், ஒலிநயம், சிற்றிலக்கியக் கூறுகள், தமிழ்முழக்கம், நாடக நன்னூல்" எனப் பலவும் இடம்பெற்றுள்ளன.

முதலில் 'தற்சிறப்புப் பாயிரம்' முதல் 'அவையடக்கம்' வரை – 9 பாடல்கள். அடுத்து நூல் – 120 பாடல்கள் 'மூலம் – அடிக்குறிப்பாக அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளன.

'பவனி காணப் பெண்கள் வருதல்' என்ற தலைப்பில் வரும் பாடல்:–

"பாலேறும் விடையில்வருந் திரிகூடப் பெருமானார் பவனிகாணக்
கடலேறுங் காமனுக்காக் கையேறும் படைப்பவுஞ்சாய்க் கன்னி மார்கள்
சேலேறுங் கலகவிழி கணைதீட்டிப் புருவநெடுஞ் சிலைகள் கோட்டி
மாலேறப் பொருதுமென்று மணிச்சிலம்பு முரசறைய வருகின்றாரே!"

– இதற்கு உரையாசிரியர் தரும் அடிக்குறிப்பு:

"பால் – பால் போன்ற வெண்மை நிறம்; ஏறும் – மிகுந்த; விடை – காளை வாகனம்; கால் – தென்றற் காற்று; காமன் – மன்மதன், கைஏறும் – கையில் தாங்கும்; பவுஞ்சு – சேனை; சேல் ஏறும் கொண்டை – மீனலை போன்ற; கலகம் – கலகம் செய்யும்; விழிக்கணை – கண்களாகிய அம்பு; சிலை– வில்; கோட்டி – வளைத்து; மால் – மயக்கம், பொருதும் – போர் செய்வோம், சிலம்பு முரசு – சிலம்பாகிய முரசு!"

– இத்தகைய குறிப்புரைகள் உள்ளன.

## திருக்குற்றாலக் குறவஞ்சி

திரிகூடராசப்பக் கவிராயர்

திருக்குற்றால நாதசுவாமி கோயில் (ப.ஆ)

'குறவஞ்சி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், சம்பந்தர் அருளிய 'திருக்குற்றாலத் தலப்பதிகங்கள் 2' உள்ளன.

'தற்சிறப்புப் பாயிரம், நூற்பயன்' முதலாயின 9 பாடல்கள் தவிர 119 பாடல்கள் உள்ளன. பாடல்களுக்கு அடிக்குறிப்பாக அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது. 'குறத்தி மலைவளம் கூறுதல்' என்ற தலைப்பில் வரும் பாடல்:–

"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்!
கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்!
கமனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்!
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்!
செங்கதிரோன் பரிக்காலுந் தேர்க்காலும் வழுகும்!
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே!"

இதன் அடிக்குறிப்பில், "கானவர்கள் – வேடர்கள்; வழியெறிந்து – கண்பார்வையைச் செலுத்தி; கமனசித்தர் – ஆகாயமார்க்கம் நடக்கும் சித்தர்; காயசித்தி – சரீரம், மருந்துகளினாற் பலமாயிருக்கும் செயல்; பரிக்கால் – குதிரைக்கால்; கூனல் – வளைவு; வேணி – சடை" என்று கொடுக்கப்பட்டுள்ளது.

– இத்தகைய அருஞ்சொற்பொருள்மட்டும் இடம்பெற்றுள்ள நூல்!

## திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும்

*திரிகூடராசப்பக் கவிராயர்*

புன்னைவனநாத முதலியார், செ. ரெ. இராமசாமி பிள்ளை (உ.ஆ.)

'திருக்குற்றாலக் குறவஞ்சி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இதன் தொடக்கத்தில் 'திருக்குற்றாலப பதிகங்கள்' இடம் பெற்றுள்ளன. அடுத்துத் 'தலச்சிறப்பு, நூலாசிரியர் வரலாறு, முன்னுரை' முதலாயின உள்ளன. முன்னுரையில், குறவஞ்சியைப் பற்றிய ஆராய்ச்சி சொல்லப்பட்டுள்ளது.

129 பாடல்கள் – மூலம் – பொழிப்புரை – விளக்கவுரை என அமைந்துள்ளன.

*"கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாஞ்*
*சதுர்வேதம் கிளைகள் ஈன்ற*
*களையெலாம் சிவலிங்கம் கனியெலாம்*
*சிவலிங்கம் கனிகள் ஈன்ற*
*சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம்*
*சிவலிங்கம் சொரூபம் ஆக*
*விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த*
*சிவக்கொழுந்தை வேண்டு வோமே!"*

எனும் பாடலுக்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை:–

"ஒரு பலாமரத்தின் கிளைகளாய்ப் பிரிந்திருக்கின்ற பல கொப்புகளெல்லாம் நான்கு மறைகள்; அக்கிளைகள் தந்த விளாரெல்லாம் சிவலிங்கம்; அம்மரத்தின் பழமெல்லாம் சிவலிங்கம்; அப் பழங்களிலுள்ள சுளையெல்லாம் சிவலிங்கம்; அச்சுளைகளிலுள்ள கொட்டைகள் எல்லாம் சிவலிங்க வடிவமாக விளைந்துள்ள இக் குறும்பலாவிடத்தே தோன்றியெழுந்த சிவபெருமானை நலந்தர வேண்டிக் கொள்வோம்!"

இதன்பின் விளக்கவுரையும் உண்டு. இவ்வாறு அனைத்துப் பாடல்களுக்கும் உரை தருகின்றார் உரையாசிரியர்.

## திருக்குற்றால மாலை

*திரிகூடராசப்பக் கவிராயர்*

'மாலை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

'திருக்குற்றால மாலை' என்பது, திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது.

முதலில் 'காப்பு' 1 தவிர 100 பாடல்கள் உள்ளன. மூலமட்டுமே உள்ளது.

*"மொழிகொண்ட மூவர் திருப்பாடல் கற்று முழுதுமுன்பால்*
*வழிகொண்ட பேரன்பு வைப்பதென்றோ குழல்வாய் மொழிப்பெண்*
*விழிகொண்ட காட்சிக் கெளியாய் பெண்பூமி பொன்வேட்கையெல்லா*
*மொழிகொண்ட தொண்டர்க் குரியாய் குற்றாலத் துறைபவனே!"*

என்பது இதன் முதற்பாடல்.

## திருக்குற்றாலத் தலபுராணம் (பொழிப்புரை)

*திரிகூட ராசப்பக் கவிராயர்*

க. வச்சிரவேல் முதலியார் (உ.ஆ)

'திருக்குற்றாலத் தலபுராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'காப்பு'ச் செய்யுள் 2 தவிர 2070 திருவிருத்தங்கள் உள்ளன.

'பாடல் – பொழிப்புரை – விளக்கக் குறிப்பு' எனும் முறையில் அமைந்துள்ளது.

*"குமிழ் முத்த மணிந்தனள் கொவ்வை முகிழ்க்கு முத்தின்*
*அமரத்தவ மூசியி னிற்குமோ ரார மேபோல்*
*கமழ் பொற்குழை யிற்குழை சாத்தினள் காலநீலம்*
*உமிழ்கட்கட விற்புடை பாய்சுற வொத்து லாவ!"*

– இது, 'திருமலைச் சருக்கத்'தில் வருவது. இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை:–

"கொவ்வைக் கனி போன்ற வாய் இதழ்களால் மூடப்பெற்றுள்ள பற்களாகிய முத்துக்குச் சமமாகத் தங்குதற்கு ஒரு முத்து ஊசிமுனையில் தூங்கித் தவம் இயற்றுதல் போலத் தோன்றும்படி குமிழமலர் போன்ற மூக்கில் முத்துப் பொருந்திய மூக்கணியை அணிந்தாள்; அழகிய காதில் மகரக் குழையைச் சேர்த்தாள்; அவை நீலமலர் நிறத்தைச் சிதறும் கண்ணாகிய கடலின் பக்கலில் பாயும் சுறவு ஒத்து அசைந்தன.

விளக்கக் குறிப்பு : குமிழ் – குமிழ் போன்ற மூக்கு; முகிழ்த்தல் – மூடுதல்; ஆரம் – முத்து; நீலம் உமிழ் எனப்பிரிக்க.

– இத்தகைய உரைவிளக்கம் உடைய நூல்!

## திருக்கோவலூர்ப் புராணம்

*(?)*

*வே. சௌந்தரராஜன் (ப.ஆ)*

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் திருப்பெயர்:– வீரட்டேசுரர்; அம்பாளின் திருப்பெயர்: பெரிய நாயகி. நரசிங்க முனையரையர், மெய்ப்பொருள் நாயனார் அவதரித்த பெருமையுடையது. தேவாரப் பாடல் பெற்றது.

தொடக்கத்தில் 'பாயிரம்' – 15 பாடல்கள். அடுத்துப் 'புராணவரலாறு' – 25 பாடல்கள். 'அந்தகாசூரன் வதைச் சருக்கம்' முதல் 'தீர்த்த விசேடச் சருக்கம்' வரை 1725 செய்யுட்கள் கொண்டது. மூலமட்டுமே உள்ளது.

*"வினையை வென்றார் திருக்கோவன் மான்மியமா*
*மிக்கதையை மெய்ஞ்ஞானத்தாற்*
*கனிவினொ டாகினு மஞ்ஞானத் தேனும் வினைவினோர்*
*கற்றோர் சொன்னோ*
*ரிசரிதிம் முறை வரைந்தோர்கள் சுமந்தோர்கள்*
*நினைந்தோர்க ளரியாவருமிம்மை*
*தனிலதிசு செல்வமெலாந் துய்த்திறைவ*
*னடிநிழற்கீழ் சாருவாரே!"*

என்பது இதன்கண் வரும் ஒருபாட்டு.

## திருக்கோவையார் (பேராசிரியர் உரையும் பழைய உரையும்)

*மாணிக்க வாசக சுவாமிகள்*

*ஸ்ரீமத் சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள் (ப.ஆ)*

'திருக்கோவையார்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில், 'ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது. அடுத்து 'ஆசியுரை' விரிவாக உள்ளது. அதன்பின் 'அணிந்துரை' அமைந்துள்ளது. 'திருக்கோவையார் உரைமாட்சி', 'திருக்கோவையார் ஆராய்ச்சியுரை'; 'மாணிக்கவாசகர் வரலாறு', 'சிறப்புக் குறிப்புடைய திருப்பாடல்கள்', 'போற்றப்பெறும் பிற தலங்கள்' முதலாயின அடுத்தடுத்து இடம்பெற்றுள்ளன.

'விநாயக வணக்கம், – 1; நூற் சிறப்பு – 1; அதிகார வரலாறு – 1 எனும் 3 பாடல் தவிர, 'இயற்கைப் புணர்ச்சி' முதல் 'பரத்தையிற் பிரிவு' வரை 400 பாடல்கள்.

*"திருவளர் தாமரை சீர்வளர்*
*காவிக ளீசர் தில்லைக்*
*குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்*
*காந்தள்கொண் டோங்குதெய்வ*
*மருவளர் மாலையொர் வல்லியி*
*னொல்கி யனநடைவாய்ந்*

*துருவளர் காமன்றன் வென்றிக்*
*கொடிபோன் றொளிர்கின்றதே!"*

என்பது, இந்நூலில், 'இயற்கைப் புணர்ச்சி'யில் 'காட் சி'யைக் குறித்தது. 'காட்சி' என்பது தலைமகளைத் தலைமகன் கண்ணுற்று இஃதொரு வியப்பு என் என்றல்.

இதற்குத் தரப்பட்ட பொருளாவது:–

"திருவளரும் தாமரைப் பூவினையும், அழகுவளரு நீலப்பூக்களையும் ஈசர் தில்லை வரைப்பின்கண் உண்டாகிய பூங்குமிழினது நிறம் வளரும் பூவினையும், கோங்கு அரும்புகளையும், செவ்விக் காந்தட்பூக்களையும் உறுப்பாகக் கொண்டு, மேம்பட்ட தெய்வமணம் வளரும் மாலை ஒரு வல்லி போல நுடங்கி, அன்னத்தின் நடைபோல நடைவாய்ந்து, வடிவு வளரும் காமனது வெற்றிக் கொடி போன்று விளங்காநின்றது, என்ன வியப்போ?"

– இதற்கு மேலும் விரிவான விளக்கம் உள்ளது. இவ்வாறே பிற பாக்களுக்கும் உண்டு.

## திருக்கோவையார் : உண்மை விளக்கம்

*மாணிக்கவாசகர்*

*ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.)*

'திருக்கோவையார்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'இயற்கைப் புணர்ச்சி' முதல், 'பரத்தையிற் பிரிவு' வரை 25 துறைகள் – 400 செய்யுட்கள் உள்ளன.

'பாடல், பொழிப்புரை, கருத்து' எனும் முறையில் அமைந்தது.

*"இரத முடைய நடமாட் டுடையவர் எம்முடையர்*
*வரத முடைய அணிதில்லை யன்னவர் இப்புனத்தார்*
*விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேல்*
*சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே!"*

என்பது 'மதியுடம்படுத்தல்' என்ற துறையில் வருவது. இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை, குறிப்புரை:

"கரும்பையும் தேனையும் பாலையும் போல இனிப்பதாய்ப் பேரின்பம் பயப்பதாய பரமானந்தத் தாண்டவம் புரிபவரும், எம்மை என்றும் மீளா அடிமை கொண்டவரும் ஆகிய கூத்தப் பெருமானின் தில்லையை ஒத்த அருள்மயமானவர்களாகிய இப்புனத்திலுள்ளார் வரவேற்கத் தக்க விருந்தினரோடு பேசாமையையே விரதமாகப் பூண்டவர்; அஃதன்றாயின் வாய்திறந்தால் முத்துதிரும் என்ற நினைப்பை மெய்ம்மையாக உடையவர்!

திருவருள், பரிபாகமுற்ற ஆன்மாவை வரவேற்கக் கடவதாக இருந்தும் அது

செய்யாமையின் வருந்திக் கூறியது. இரதம் – சுவை. ஆனந்தக் கூத்தப் பெருமான், ஆன்மாக்களுக்கு முத்தி நிலையில் கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பனாதலானும், அவன் நடம்தன்னைக் கண்டார்க்கு வேறொன்றையும் விரும்பாத பேரினிமை பயத்தலானும் "இரதமுடைய நடமாட்டுடையவர்" எனப்பெற்றது.

– இத்தகைய உயரிய விளக்கம் உடைய நூல்.

## திருச்செந்தில் வெண்பா அந்தாதி

*அ. சிவாநந்தசாகர யோகீச்வரர்*

'அந்தாதி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'திருச்செந்தில்' என்பது திருச்செந்தூர். ஆங்கு எழுந்தருளியுள்ள முருகன் மீது பாடப்பட்டது. 'காப்பு'ச் செய்யுள் தவிர 100 பாடல்கள் கொண்டது.

*"சீர்பரவுஞ் செந்திலமர் தெய்வச் செழுஞ்சுடரே!*
*பார்பரவு மோனப் பரசிவமே! – நார்பரவும்*
*வேதனெடு மால்பணியு மெய்ப் பொருளே யீங்கெனக்குன்*
*பாதமல ரன்றியுண்டோ பற்று!"*

என்பது முதற்பாடல். மூலம் மட்டுமே உள்ளது!

## திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

*பகழிக் கூத்தர்*

பி. நா. சிதம்பரமுதலியார் (ப.ஆ)

'பிள்ளைத்தமிழ்' பற்றிய விளக்கம், தொகுதி 1 ல் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் பகழிக்கூத்தர் வரலாறு சொல்லப்பட்டுள்ளது. அடுத்துச் 'சிறப்புப்பாயிரம்' – 3 பாடல்கள்;

*"செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழுங்*
*கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தா – னந்தேர்*
*திருமாது சேர்மரர்பன் றேர்ப்பாகற் கன்பு*
*தருமால் பகழிக்கூத் தன்!"*

என்பது அவற்றில் ஒன்று.

அடுத்துக் 'காப்புப் பருவம்' முதல் 'சிற்றிற் பருவம்' ஈறாகப் பத்துப் பருவப் பாடல்கள் – மூலம் மட்டும் உள்ளன.

## திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் (விளக்கவுரை)

*பகழிக்கூத்தர்*

*பு.சி. புன்னைவனநாத முதலியார் (உ.ஆ)*

'திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்' விளக்கம், முதல்தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. 'மூலம் – அரும்பதவுரை' எனும் அமைப்பில் உள்ளது.

*"கலையால் நிரம்பாத கலையுண் டுனக்கு நிறை*
*கலையுண் டிவன்தனக்குக்*
*களங்கமரு குறமான் உனக்குண்டு குறமான்*
*கருத்துண் டிவன்தனக்கு . . ."*

என்பது அம்புலிப் பருவ முதற்பாடல்.

இதற்கு உரையாசிரியர் தரும் அரும்பதவுரை:–

"நிரம்பாத கலை – குறைந்த சந்திர கலை; நிறைகலி – நிறைந்த கல்வி நூல்; களங்கம் அருகு உற – குற்றம் பக்கத்தில் பொருந்த; மான் – முயலகனென்னும் மான்; குறமான் – குறப்பெண்ணாகிய வள்ளி . . . !"

– இத்தகு உரைக் குறிப்புத் தரும் நூல்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத் திருப்பதிகங்கள் - முதல் திருமுறை (குறிப்புரையுடன்)

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ)

'சம்பந்தர் தேவாரம்' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. இதில், 'தோத்திரங்கள், தலமுறை, பண்முறை' முதலாயின சொல்லப்பட்டுள்ளன.

அடுத்துத் 'தலங்களின் குறிப்புக்கள்' உள்ளன. 'சீகாழி' முதல் 'ஸ்ரீ கயிலாயம்' வரை 87 திருத்தலங்கள் பற்றி, அரிய விளக்கங்கள் தந்துள்ளார் உரையாசிரியர்.

ஒவ்வொரு பதிகத்தின் முன்பும் 'பதிக வரலாறு' தந்து, பின்னர்ப் பதிகம், பண், தலம் முதலாயின கொடுக்கப்பட்டுள்ளன.

பாடலுக்கு அடிக்குறிப்பில், சொற்பொருளும் விளக்கமும் தருகின்றார் உரையாசிரியர்.

'திருவலிதாயம்' திருப்பதிக முதற்பாடல்

*"பத்தரோடு பல ரும்பொலியம்மல ரங்கைப் புனல்தூவி*
*ஒத்தசொல்லியுல கத்தவர் தாந்தொழு தேத்த வுயர்சென்னி*
*மத்தம் வைத்தபெரு மான் பிரியாதுறை கின்றவலிதாயம்*
*சித்தம் வைத்தவடி யாரவர் மேலடை யாமற்றிடர் நோயே!"*

இதன் அடிக்குறிப்பில் சொல்லப்பட்டதாவது :–

"இது, திருவலிதாயத்தைத் தியானிப்பவர்களுக்குத் துன்பம் இல்லை என்கின்றது. மந்திர புஷ்பம் இடுவதற்காக வலக்கையில் பூவை வைத்து, அர்க்கிய

ஜலத்தைச் சொரிந்து கையைமூடி அபிமந்திரித்துப் பலர்கூடி வேதமந்திரங்களைச் சொல்லி இறைவர்க்குச் சாத்துதல் மரபாதலின் அதனைப் 'பத்தரோடு' 'ஒத்தசொல்லி' என்பதால் குறிப்பிடுகிறார்''.

இதுதவிரச் சொற்பொருள், இலக்கணக் குறிப்பும் தருகின்றார் உரையாசிரியர்.

அரியதொரு உரைநூல் இது!

தேவாரப் பதிகங்கள் (தலமுறை)

*திருஞான சம்பந்த சுவாமிகள்*

*பட்டுச்சாமி ஓதுவார் (உ.ஆ)*

'சம்பந்தர் தேவாரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு' உள்ளது. அடுத்துத்'தேவாரப் பண்கள்' பற்றிய குறிப்பு. பகற்பண் – 10; இராப்பண் – 8; பொதுப்பண் – 3; ஆக 21 தேவாரப்பண்கள் என்று சொல்லப்பட்டுள்ளது.

சம்பந்தர் பாடிய 3 திருமுறைகளில் இடம்பெற்ற தேவாரப் பதிகங்கள் – 383.

இந்நூலில் இடம்பெற்றவை: சிவத்தலங்கள் 219; திருப்பதிகங்கள் – 376; பொதுத் திருப்பதிகங்கள் – 7 ஆக 383க்குத் திருப்பாடல்கள் 4147 ஆகும்.

ஒவ்வொரு பதிகத்திலும் அடிக்குறிப்பாகச் சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

11ஆவது பதிகம் : திருப்புள்ள மங்கை. இதற்கு உரையாசிரியர், பின்வருமாறு விளக்கம் தருவர்:–

'' 'வேளாளப் பசுபதி கோயில்' என வழங்கப்பெறும் புள்ள மங்கை – ஊரின் பெயர். புள்ள மங்கை – ஊரின் பெயர். புள் – கழுகு. இப்பெயருக்கேற்பக் கழுகுகள் கோபுரத்துள் குடி கொண்டுள்ளன என்பர்!''

*''பாலுந்துறு திரளாயின பரமன்பிர மன்தான்*
*போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புள மங்கைக்*
*காலன்திற லறச்சாடிய கடவுள்ளிடங் கருதில்*
*ஆலந்துறை தொழுவார்தமை யடையாவினை தானே!''*

என்பது முதற்பாடல். பாலுந்துறுதிரள் – பால் கடையக்கிடைக்கும் அமுது போன்றவர்; ஆலந்துறை – புள்ள மங்கையின் ஆலயத்தின் பெயர்; இறைவன் விடமுண்டு அருள்செய்த இடமாதலால் இப்பெயர் பெற்றது!'' – இத்தகைய சிறுகுறிப்பே தரப்பட்டுள்ளது.

தேவாரம் – முதல் 3 திருமுறைகள் (உரையுடன்)

*திருஞான சம்பந்தர்*

வ.த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ)

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின்

தொடக்கத்தில், 'பன்னிரு திருமுறைக் குறிப்பு, திருஞானசம்பந்தர் வரலாறு, திருமுறை ஆசிரியர்கள் அட்டவணை, திருஞான சம்பந்தர் தேவாரம் – தலவரிசைப் பதிகங்கள் அட்டவணை, திருநாட்டுத் தலப் பதிக அட்டவணை, திருஞானசம்பந்தர் தேவாரம் – பண்களின் அட்டவணை – திருத்தலங்களின் வரிசை" ஆகியன உள்ளன.

இவற்றால் அறியப்படுவன : திருமுறை ஆசிரியர்கள் – 27 பேர்; நூல்கள் – 76; திருப்பாடல்கள்– 18326. தலவரிசைப்பதிக அட்டவணையில் :– தொண்டை நாடு – 25; நடுநாடு – 15; சோழநாடு காவிரி வடகரைத் தலம் : 54; காவிரித் தென்கரைத்தலம் : 100; பாண்டிய நாட்டுத் தலம் : 13; கொங்கு நாட்டுத் தலம் : 4; துளுவ நாட்டுத் தலம் : 1; வடநாட்டுத் தலம் : 5; ஈழநாட்டுத் தலம் : 2; பொது : 7. ஆக மொத்தம் 226 தலங்கள். முதல் 3 திருமுறை : மொத்தப் பதிகங்கள் : 383. புதிதாகக் கிடைககப் பெற்றவை 3 சேர்த்து : 386 ஆகும்.

சம்பந்தர் தேவாரப் பாக்களில் அமைந்த பண்கள் : 23. மேலும் பாடல் பெற்ற திருத்தலங்களின் தொகுப்பும் தரப்பட்டுள்ளது:

1. சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் பாடிய திருத்தலங்கள் – 44
2. சம்பந்தர், அப்பர் இருவரும் பாடிய திருத்தலங்கள் – 52
3. சம்பந்தர், சுந்தரர் இருவரும் பாடிய திருத்தலங்கள் – 13
4. அப்பர், சுந்தரர் இருவரும் பாடிய திருத்தலங்கள் – 2
5. சம்பந்தர் மட்டும் பாடிய திருத்தலங்கள் – 112
6. அப்பர் மட்டும் பாடிய திருத்தலங்கள் – 28
7. சுந்தரர் மட்டும் பாடிய திருத்தலங்கள் – 25

இத்தகைய பயன்படும் விளக்கங்களைத் தரும் உரையாசிரியர், சம்பந்தர் தேவாரப் பாக்களுக்குத் தெளிவுரையும் சிறப்புரையும் தருகின்றார். பாடலின் தொடக்கத்தில், 'தல விளக்கம், இறைவன் – இறைவி திருப்பெயர்கள், தலமரம், தலத் தீர்த்தம், தேவாரப் பண் முதலியவற்றைக் கூறுகிறார்.

*"சிலைதனை நடுவிடை நிறுவியொர் சினமலி*
*அரவது கொடுதிவி*
*தலமலி சுரர் அசுரர்கள் ஒலி சலசல*
*கடல்கடை உழிமிகு*
*கொலைமலி விடம்எழ அவர்உடல் குலைதர*
*அதுநுகர்பவன் எழில்*
*மலைமலி மதில் புடை தழுவிய மறைவனம்*
*அமர்தரு பரமனே!"*

– இது, திருமறைக்காட்டுத் திருப்பதிக முதற்பாடல்.

இதற்கு முன்னுரையாக உரையாசிரியர் 'தல விளக்கம்' தந்து, இறைவன் – இறைவி திருப்பெயர் கூறுகின்றார்:–

சுவாமி – மறைக்காட்டீசர், வேதாரண்யேஸ்வரர்.

அம்பிகை – யாழைப் பழித்த மொழியம்மை . . . தலமரம் : வன்னி; தீர்த்தம் : மணிகர்ணிகை, வேததீர்த்தம் (கடல்), பண் : நட்டபாடை.

பாடலை அடுத்துப் பின்வரும் தெளிவுரை அமைந்துள்ளது. "மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பினைக் கயிறாகவும் கொண்டு, விண்ணுலகத்தின் தேவர்கள் ஒருபுறமும், அசுரர்கள் மற்றொரு புறமும் இருந்து கலகல என்னும் ஒலி எழுமாறு பாற்கடலைக் கடையும் போது, கொடிய விடமானது எழுந்தது. அது தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அச்சமும் நடுக்கமும் கொடுத்தது. சிவபெருமான் அக்கொடிய நஞ்சினை அருந்திய பரமன். அவன், மலை போன்ற பெரிய மதில்கள் சூழ்ந்த மறைக்காட்டில் வீற்றிருக்கின்றான்.

சிலை – மந்திரமலை; அரவு – வாசுகி என்னும் பாம்பு; திவிதல – விண்ணுலகம்; சுரர் – தேவர்; கொலை மலி – கொடிய மறைவனம் – திருமறைக்காடு!"

– தேவாரத்தைப் படித்துப் புரிந்து கொள்ளுமாறு அமைந்த நூல்!

தேவாரம் – முதல்திருமுறை

திருஞான சம்பந்தர்

சைவ சித்தாந்தப் பெருமன்றம் (ப.ஆ.)

தேவாரம் – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், கொ. நீ. சிங்காரவேலு எழுதிய 'திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு' உள்ளது. அடுத்துத் 'திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் மீது தோத்திரங்கள்' என்ற தலைப்பில், 19 பாடல்கள் தரப்பட்டுள்ளன. பின்னர்த் 'தல அகராதியும், தலப்பதிகத் தொடக்கமும்' உள்ளது. இதில், 'அச்சிறுபாக்கம்' முதல், 'வேற்காடு' வரையும் – 98; பொதுப்பதிகமாக – 1, ஆக 99ல் பாடப்பட்ட பதிகங்கள் : 136.

நட்டபாடைப் பண் – 22; தக்கராகப் பண் – 24; பழந்தக்கராகப் பண் – 16; தக்கேசிப் பண் – 12; குறிஞ்சிப் பண் – 15; திருவிருக்குக் குறள் குறிஞ்சிப்பண் – 7; குறிஞ்சிப்பண் – 7; வியாழக் குறிஞ்சிப் பண் – 25; மேகராகக் குறிஞ்சிப் பண் – 7; யாழ்மூரி – 1; ஆக – 13C.

இந்நூலில் ஆங்காங்கே சில அடிக்குறிப்பும் உண்டு. 'பிற்சேர்க்கை'யில் பதிகம் 127, 128க்குத் 'திரு ஏகபாதத் திருவுள்ளக் கருத்து', 'திருவெழுக்கூற்றிருக்கை – திருவுள்ளக் கருத்து' ஆகியன இடம்பெற்றுள்ளன.

தேவாரம் : முதல் திருமுறை (பொழிப்புரை, விளக்கக் குறிப்புரைகளுடன்)

திருஞானசம்பந்தர்

ச. தண்டபாணி தேசிகர் (வி.கு.)

வி.சா. குருசாமி தேசிகர் (பொ. உ.)

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஸ்ரீகுருஞான சம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது. அடுத்து 'ஆசியுரை' விரிவாக இடம் பெற்றுள்ளது. இதில் 'சொரூப நிலை, தடத்த நிலை, சம்புபட்சமும் அணுபட்சமும், திருமுறை, தேவாரம், முதலில் தேவாரம் பாடியவர், பண் அடைவு, மூத்த திருப்பதிகம், மூவினைகள், முப்பொருளியல்பு, ஆன்ம தத்துவம்' எனப் பல செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

பின்னர்ப் 'பதிப்புரை' இடம் பெற்றுள்ளது. இதில், 'அடங்கல் முறை, திருப்பதிகம், திருமுறைப் பதிப்பு, திருமுறை உரைப்பதிப்பு' ஆகியன விளக்கப்பட்டுள்ளன. இதன்பின், 'முதற்பதிப்பின் முகவுரை' உள்ளது. இதனை அடுத்து, 'முதல் திருமுறையின் உரைத்திறம்' அமைந்துள்ளது.

இதில், "பதிகம் தோன்றிய வரலாறு, சொற்களும் சொற்றொடர்களும் இருபொருள் தருதல், சுட்டு என்ற உள்ளுறை, சொற்றொடர்களுக்கு நயமான உரை காண்டல், விளக்கவுரை, தலபுராணம் முதலியன, அருஞ்சொற் பொருள், இன்றியமையாத இலக்கணக் குறிப்புக்கள், செய்யுள் முடிபு, பண்டைநூல் மேற்கோள்கள், வடமொழிச் சார்பு, சாத்திரக் கருத்துக்கள், பிறர் கருத்துக் கூறல்" எனப் பல செய்திகள் உள்ளன.

அடுத்துத் 'தல அட்டவணை : தலமும் பதிகமும் வரலாறும்' உள்ளது. இதில், தலங்கள் – 88; பதிகங்கள் – 136; பாடல்கள் – 1469 பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

இதனையடுத்து, 'முதல் திருமுறையில் உள்ள தலங்களின் வரலாற்றுக் குறிப்புக்கள்' உள்ளது. இதில், 'சீகாழி' முதல் 'திருக்கயிலாயம்' வரையிலான 88 திருத்தலங்களைப் பற்றிய குறிப்புக்கள் விரிவாக இடம் பெற்றுள்ளன.

இப்பகுதியில், 'திருத்தலம் எங்கு அமைந்துள்ளது, எப்படிச் செல்வது, தலச்சிறப்பு யாது, இறைவன் – இறைவி திருப்பெயர்கள், வரலாற்றுக் குறிப்பு' ஆகியன விரிவான அளவில் சொல்லப்பட்டுள்ளன. இக்குறிப்பைக் கொண்டே ஒருவர், தொடர்புடைய திருத்தலப் பயணம் செய்யலாம்.

இதனையடுத்துத் 'திருஞான சம்பந்தர் வரலாறு' இயம்பப் படுகிறது. பின்பு, 'முதல் திருமுறை– அற்புதத் திருப்பதிகங்களும் பண்களும்' சொல்லப்பட்டுள்ளன. 'ஞானப்பால் உண்டது' முதல், 'படிக்காசு வாசி தீரப் பாடியது' வரை 7 அற்புதத் திருப்பதிங்கள் முதல்திருமுறையில் உள்ளன. பண்கள் : 'நட்டபாடை' முதல், 'யாழ்மூரி' வரை – 8. இவற்றையுடைய பதிகங்கள்: 136.

அடுத்து, முதல் திருமுறையில் உள்ள 'திருப்பதிகங்களின் சிறப்புப் பெயர்கள்' சொல்லப்பட்டுள்ளன.

இனி, திருப்பதிகங்கள் மூலம்; அடிக்குறிப்பில், 'பொழிப்புரை – குறிப்புரை' என அமைந்துள்ளது.

"சடையார்புன லுடையானொரு
சரிகோவண முடையான்
படையார்மரு வுடையான்பல
பூதப்படை யுடையான்
மடமான்விழி யுமைமாதிட
முடையானெனை யுடையான்
விடையார்கொடி யுடையானிடம்
வீழிம்மிழ லையே!"

என்பது திருவீழிமிழலைப் பதிக முதற்பாடல். இதன் முன்னுரையில் உரையாசிரியர் தரும் குறிப்பு வருமாறு:–

"திருப்பாம்புரம் என்னும் தலத்தை வணங்கிக் கொண்டு பிள்ளையார் திருவீழிமிழலைக்கு அப்பருடன் எழுந்தருள, அந்தணர்கள் எதிர்கொண்டழைத்தார்கள். பிள்ளையார், சிவிகையினின்றிழிந்து, அந்தணர்கள் புடைசூழ, விண்ணிழிந்த கோயிலை வலங்கொண்டார்; வியந்தார்; கீழே விழுந்து வணங்கினார். உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி வழிந்தது. இசை ஆயிற்று. 'சடையார் புனல் உடையான்' என்றெடுத்துக் கந்த இசைத்தமிழைச் சாற்றி, மணவாளப் பெருமானது திருவடிக்கீழ் ஆனந்த வெள்ளத்தாடினார்!"

இப்பதிகத்தின் பண் 'நட்டபாடை' என்று குறித்த உரையாசிரியர், பின்வருமாறு இப்பாடலுக்குப் பொழிப்புரை தருகின்றார்:

"சடைமுடியில் கங்கையைத் தரித்தவனும், இடையினின்று சரிந்து நழுவும் ஒப்பற்ற கோவண ஆடையை அணிந்தவனும், மழுப்படையை உடையவனும், பலவகையான பூதங்களைப் படையாகக் கொண்டவனும், மடமைத் தன்மை பொருந்திய மான்விழி போன்ற விழிகளை உடைய உமையம்மையாகிய பெண்ணை இடப்பாகத்தே கொண்டவனும், என்னை ஆளாக உடையவனும், விடைக்கொடி உடையவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் திருவீழிமிழலை!"

நூலின் இடையிடையே திருத்தலப் படங்களும் உள்ளன. 12 திருமுறைகட்கும் இத்தகு விரிவான தொகுதிகள் உள்ளன.

தேவாரம் (இரண்டாம் திருமுறை)

திருஞான சம்பந்தர்

திருவாவடுதுறை ஆதீனம் (ப.ஆ)

'சம்பந்தர் தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், சம்பந்தர் அருளிய தேவாரம் – 2ஆம் திருமுறைப் பாடல்கள் – 122 திருத்தலங்களில் பாடப்பட்டவை. (மூலபாடம்) தரப்பட்டுள்ளன.

இத்திருமுறைகளில் கையாளப்பட்ட பண்கள் : இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி என்னும் ஆறாகும். ஒவ்வொரு பதிகத் தொடக்கத்திலும், அது பாடப்பட்ட திருத்தலம், அதற்குரிய 'பண்' குறிப்பிடப்பட்டுள்ளன.

சம்பந்தர் தேவாரம் மூலபாடத்தைப் பயில விரும்புவோர்க்கு இந்நூல் பயன்படும்.

## திருத்தொண்டர் புராணம் (வசனம்)

சேக்கிழார்.

கார்த்திகேயன் (ப.ஆ.)

'திருத்தொண்டர் புராணம்' எனப்படும் 'பெரிய புராணம்' – நூல் விளக்கம் முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் 'நாயன்மார்கள் பற்றிய சில விவரங்கள்' உள்ளன. இதில் (1) நாவுக்கரசர் – ஞானசம்பந்தர் இருவருக்கும் முற்பட்ட காலத்தைச் சேர்ந்த அடியார்கள் – 17 பேர்; (2) 'நாவுக்கரசர் – சம்பந்தர் காலத்தைச் சேர்ந்த அடியார்கள்' – 11 பேர்; (3) நாவுக்கரசர் – சம்பந்தர் ஆகியோருக்குப் பிற்பட்டும், சுந்தரருக்கு முற்பட்டும் உள்ள காலத்தைச் சேர்ந்த அடியார்கள்' – 22 பேர்; (4) 'சுந்தரர் காலத்தைச் சேர்ந்த அடியார்கள்' – 13 பேர்; ஆகிய விவரம் உள்ளது. அடுத்து, 'நாயன்மார்கள் குலம்' என்ற உட்தலைப்பில்; (1) அரசர் – 12பேர்; (2) அந்தணர் – 12பேர்; (3) வைசியர்– 6 பேர்; (4) ஆதி சைவர் – 4 பேர்; (5) வேளாளர் – 13 பேர்; (6) குயவர் – 1; (7) சலவைத் தொழிலாளர் – 1; (8) வேடர் – 1; (9) இடையர் – 1; (10) மாமாத்திரர் – 1; (11) மீனவர் – 1; (12) அரிசனர் – 1; (13) பாணர்– 1; (14) ஈழவர் – 1; (15) சாலியர் – 1; (16) குலம் குறிப்பிடப்படாதோர் – 6 பேர்.

63 நாயன்மார் வரலாற்றை எளிய – நல்ல தமிழில் உரைநடையில் எழுதப்பட்ட நூல். கவிதை படித்துப் புரிந்து கொள்ள இயலாதோர் இதனைப் படித்துக் தெரிந்து கொள்ளலாம்.

## திருத்தொண்டர் மாக்கதை

சேக்கிழார்

கழகம், சென்னை (ப.ஆ.)

'திருத்தொண்டர் புராணம்' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலில், நாயன்மார் வரலாறுகள் தோறும் முதற்கண் சிறு நுட்பக் குறிப்பும், திருப்பாட்டுக்கள் தோறும் சிறந்த விளக்கமான அடிக்குறிப்பும் தரப்பட்டுள்ளன.

தொடக்கத்தில், 'திருமுறை கண்ட புராணம்' (46 பாடல்); 'திருத்தொண்டத் தொகை'(11 பாடல்); 'திருத்தொண்டர் திருவந்தாதி' (90 பாடல்); 'சேக்கிழார் நாயனார் புராணம்' (104 பாடல்) ஆகியன உள்ளன.

அடுத்துப் 'பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் மாக்கதை' முழுமையும் இடம்பெற்றுள்ளன. பாடலைக் கொடுத்து, அடிக்குறிப்பாகச் சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நாயனார் புராணம் தொடங்கும் போதும், அந்த நாயனாரின் வரலாறு சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இவ்வகையில் 4286 திருவிருத்தப்பாக்கள் உள்ளன. பெரிய புராணத்தை ஓரளவு தெரிந்து கொள்ள இந்நூல் பயன்படும்.

## திருநாகைக் காரோணப் புராணம் (குறிப்புரை)

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை

த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை (உ.ஆ.)

'புராணம்' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நாகை – நாகபட்டினம். காரோணம் – காயாரோகணம் என்பதன் மருஉ.

நாகை, தேவாரப் பாடல் பெற்ற தலம். மூவராலும் பாடப்பெற்றது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூலாராய்ச்சிக் குறிப்புகள்', 'நூலாசிரியர் வரலாறு', 'உரையில் எடுத்தாண்ட மேற்கோள் நூற்பெயர் அகராதி' ஆகியன உள்ளன.

'நூலாராய்ச்சிக் குறிப்புகள்' என்ற தலைப்பில், 'மூர்த்தி, தலம், தீர்த்தம்' ஒவ்வொரு படலத்திலும் வரும் முக்கியமான செய்திகள்' ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்நூலில் 2506 திருவிருத்தங்கள் உள்ளன. பாடல், அடுத்துக் 'குறிப்புரை' என அமைந்துள்ளது.

"புன்மை மேயது சிறிதுமில் லாதது பொருளால்
வன்மை மேயதி யாரையும் வாழ்தரத் தாங்கும்
தன்மை மேயது தயையெனப் படுவது தவாத
நன்மை மேயது நாகபட் டினத்திரு நகரம்!"

என்பது 'திருநகரப் படலத்'தில் வருவது.

இதற்கு உரையாசிரியர், 'குறிப்புரையாக, "புன்மை – கீழான தன்மை; வன்மை – வலிமை; தவாத – நீங்காத" என்று சுருக்கமாகத் தருகின்றார்!

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் - 4,5,6 திருமுறைகள் (உரை)

வ. த. இராமசுப்பிரமணியன் (உ.ஆ.)

'திருநாவுக்கரசர் தேவாரம்', விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை, திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு' உள்ளன. அடுத்துத் 'திருநாட்டுத் தல வரிசைப் பதிகங்கள் அட்டவணை' கொடுக்கப்பட்டுள்ளது. தொண்டைநாட்டுத் தலம் – 9; நடுநாட்டுத் தலம் – 9; காவிரி வடகரைத் தலம் – 34; காவிரித் தென்கரைத் தலம் – 66; பாண்டி நாட்டுத் தலம் – 4; கொங்கு நாட்டுத் தலம் – 1; துளுவ நாட்டுத் தலம் – 1; வடநாட்டுத் தலம் – 2; 126 திருத்தலங்கள் ஆக திருத்தலங்கள் : 126; திருப்பதிகங்கள் : 312.

பாடலுக்கு உரை சொல்லுமிடத்து, முதலில் திருத்தல விளக்கம், இறைவன் – இறைவி திருப்பெயர்கள், தல மரம், தீர்த்தம், பதிகக் குறிப்பு ஆகியன குறிப்பிடுகின்றார் உரையாசிரியர்.

"வேதியா வேத கீதா
 விண்ணவர் அண்ணா என்றென்று
ஓதியே மலர்கள் தூவி
 ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய்!
 படர்சடை மதியம் சூடும்
ஆதியே ஆலவாயில்
 அப்பனே அருள்செ யாயே!"

என்பது, திருஆலவாய்ப் பதிக முதற்பாடல். இதற்குத் 'தல விளக்கம்' தருகின்றார் உரையாசிரியர்.

"பாண்டி நாட்டுத் தலம் 14இல், இது 1ஆவது திருத்தலம். திருஞானசம்பந்தர்; திருநாவுக்கரசர் ஆகியோர் பாடல் பெற்றது. மதுரை என்பது ஊர். கோயில் – ஆலவாய். பஞ்ச சபைகளில் இது 'வெள்ளிச் சபை' ஈசன் அறுபத்தி நான்கு திருவிளையாடல் நிகழ்த்திய திருத்தலம். மீனாட்சி அரசாள, ஈசன் திருமணம் கொண்டு ஆட்சிபுரிந்த திருத்தலம். சுவாமி சோமசுந்தரக் கடவுள்; சொக்கநாதர்; ஆலவாய் அண்ணல். அம்பிகை : மீனாட்சி; அங்கயற்கண்ணி. தலமரம் : கடம்பு: தீர்த்தம் : பொற்றாமரைக் குளம்.

இப்பாடலுக்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை :–

"நான்கு வேதங்களாக விளங்கும் நாதனே! வேத கீதங்களை ஓதும் பெருமானே! தேவர்கள் நெருங்கிவந்து தலைவா என்று ஏத்தப் பெறுபவரே! தேவரீருடைய திருநாமங்களை ஓதி, மலர்கள் தூவி மனம் ஒன்றி கழல்களைக் காண, உமாதேவியாரைத் திருமேனியில் ஒருபாகம்ாக வைத்துப் படர்ந்து மேவும் சடையின்மீது சந்திரனைச் சூடும் ஆதியே! ஆலவாயில் திகழும் அப்பனே! அருள் செய்வீராக!

சிறப்புரை :– இத்திருப்பாட்டானது, திரிகரணங்களாகிய மனம் வாக்கு

காயத்தால் செய்யப்பெறும் வழிபாட்டினை உணர்த்துவதாயிற்று. "ஓதுதலா'கிய செயல் வாக்கினால் செய்யப்படும் வழிபாடாகவும், 'மலர்தூவி ஏத்துதலா'வது காயத்தால் செய்யும் வழிபாடாகவும், 'ஒருங்கி கழல் காணுதல்' என்பது மனத்தால் புரியும் வழிபாடாகவும் காண்க. இவ்வாறு தேவர்கள் வழிபாடு செய்பவர். ஆயினும் மன்னுயிர்க்கும் இஃது அமையும் என்பதாம்!

– இவ்வாறு அரிய விளக்கம் தரும் நூல் இது!

தேவாரப் பதிகங்கள் (4, 5, 6 திருமுறைகள்)

திருநாவுக்கரசு சுவாமிகள்

கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் (ப.ஆ)

'தேவாரம்', முதல் தொகுதியில் விளக்கம் உள்ளது. இந்நூலில், முதற்கண் 'முன்னுரை' உள்ளது. இதில், 'திருநாவுக்கரசரின் திருப்பாட்டுகள் பெரும் பாலும் இறைவனது திருவடிச் சிறப்பையே கூறுவன' என்ற குறிப்புச் சொல்லப்பட்டுள்ளது.

இதில், 313 திருப்பதிகங்கள் – மூலபாடம் மட்டுமே உள்ளன. பதிகத் தொடக்கத்தில், தலப்பெயர், பண்; பாடல் முடிவில் நாடு, இறைவன் – இறைவி பெயர்கள் சுட்டப்படுகின்றன.

"வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்!
உள்ளுளே யுருகிநின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்!
கள்ளமே வினைகளெல்லாம் கரிசறுத் திடுவர் போலும்!
அள்ளலம் பழனம் மேய வாலங்காட் டடிகளாரே!"

என்பது, திருவாலங்காட்டுத் திருப்பதிக முதற்பாடல்.

இதற்கான பண் : திருநேரிசை. தொண்டை நாட்டிலுள்ளது. இறைவன் : ஊர்த்த தாண்டவேச்சுரர்; இறைவி : வண்டார் குழலியம்மை.

இத்தகைய சிறுகுறிப்பு மட்டுமே உண்டு.

தேவாரப் பதிகங்கள் (பண்முறை)

திருநாவுக்கரசர்

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. திருநாவுக்கரசர் அருளிய 4, 5, 6ஆம் திருமுறைகள் – பண்கள் அடிப்படையில் – மூலம் மட்டுமே உள்ளன.

"விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்டர் நாயகன் றன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் மறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே!"

என்பது திருவான்மியூர்த் திருப்பதிகம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் (தலமுறை)

கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.)

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் திருநாவுக்கரசர் அருளிய 4, 5, 6 ஆம் திருமுறைப் பாடல்கள் அனைத்தும், தலவாரியாகத் தரப்பட்டுள்ளன. மூலமட்டுமே உள்ளது.

ஒரு தலத்தில், என்னென்ன பதிகங்கள் பாடப்பட்டன என்று தெரிந்து கொள்ள இது பெரிதும் உதவும்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பதிகங்கள் (தலமுறை)

திருப்பனந்தாள் காசிமடம் (ப.ஆ.)

'திருநாவுக்கரசர் தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல், தலமுறை அடிப்படையில் வெளியிடப்பட்டுள்ளது. இதன் தொடக்கத்தில், 'திருநாவுக்கரசர் வரலாறு' உள்ளது. இதில் இடம் பெற்ற சிவத்தலங்கள் – 125; திருப்பதிகங்கள் – 275; பொதுத் திருப்பதிகங்கள் – 37. திருப்பதிகங்கள் 312க்குத் திருப்பாடல்கள் – 3066.

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே!
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே!"

– இது திருவானைக்காத் திருத்தலப் பதிகம். எல்லாம் மூலபாடங்களே!

## திருநெறிய தமிழ்

(திருமுறைப் பாவாயணத் தொகுப்பு)

என். எஸ். சீனிவாசப்பிள்ளை (ப.ஆ.)

'திருநெறிய தமிழ்' என்பது 'தேவாரம்'. தேவாரம் – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 12 திருமுறைகளிலிருந்தும் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. சில பதிகங்களுக்குப் 'பதிக வரலாறு' தரப்பட்டுள்ளது. மூலம் மட்டுமே உள்ளது. நாளும் பாராயணம் செய்ய உகந்தது.

## திருப்பரங்கிரிக்கட்புல மாலை

பு.அ. வேங்கடேசநாயகர் (ப.ஆ)

'மாலை' என்பதன் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. திருப்பரங்கிரி – திருப்பரங்குன்றம். இந்நூலின் தொடக்கத்தில் 'விநாயகர் துதி' உள்ளது. அடுத்து நூல் – மூலபாடம். 30 பாடல்கள் உள்ளன.

*“பொன்னி னாற்றிகழ் பொதுவினின் றருணடம் புரிந்து*
*மன்னு வாற்குயர் மறைப்பொருள் வழங்கிடுங் குறிஞ்சி*
*மன்ன னாந்திருப் பரங்கிரி மகிபனைக் காண்டற்*
*கென்ன மாதவ மியற்றிய தெனதுகட் புலனே!”*

என்பது முதற்பாடல். மூலமட்டுமே உள்ளது.

## திருப்புகழ்

*அருணகிரிநாதர்*

*ச. மெய்யப்பன் (ப.ஆ.)*

‘திருப்புகழ்’ விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ‘சிறப்புப் பாயிரம்’ உள்ளது. ‘திருப்புகழ்’ – ‘விநாயகர் துதி’ முதல் ‘கழுகுமலை’ வரை 190 பாடல்கள் உள்ளன. அனைத்தும் மூலபாடம்; ‘திருப்பரங்குன்றம்’ என்ற தலைப்பில்,

‘தந்தனந் தந்தந் – தனதான” என்ற சந்தத்தில்

*“சந்ததம் பந்தத் – தொடராலே*
*சஞ்சலஞ் துஞ்சித் – திரியாதே!*
*கந்தனென் றென்றுற் – றுனை நாளும்*
*கண்டுகொண் டன்புற் – றிடுவேனோ*
*தந்திநின் கொம்பைப் – புணர்வோனே*
*சங்கரன் பங்கிற் – சிவைபாலா!*
*செந்திலங் கண்டிக் – கதிர் வேலா!*
*தென்பரங் குன்றிற் – பெருமாளே!”*

என்றும் பாடல் உள்ளது. முருக அன்பர்கட்குப் பயன்படும் நூல்.

## திருப்புகழ் : மெய்ஞ்ஞான விருத்தியுரை

*அருணகிரிநாதர்*

அமிர்தம் சுந்தரநாதம் பிள்ளை (உ.ஆ.)

‘திருப்புகழ்’, விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ‘அருணகிரிநாதர் சரித்திரம்’ உள்ளது. அடுத்துச் ‘சிறப்புப் பாயிரம்’ – 2 பாடல்; நூற்பயன் – 9 பாடல் உள்ளன. பின்னர், அருணகிரிநாதர் காலத்திற்குப் பிற்பட்ட காலத்தார் இருவர் பாடிய சிறப்புப் பாயிரப் பாடல்கள் 2 உள்ளன. இந்நூலில் 100 பாடல்கள் உள்ளன.

திருப்புகழ்ப் பாடல் – பொருள் – விளக்கவுரை என விரிந்த அளவில் உள்ளது. பாடலுக்குமுன், ‘சந்தக்குழிப்பு’ இடம் பெற்றுள்ளது.

*“கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி அடிபேணிக் கப்பிய கரிமுகன்*
*கற்றிடும் அடியவர் புத்தியி லுறைபவ கடிதேகும்!*
*கற்பக என வினை . . . பெருமாளே!”*

14 சீர்கள் – 4 அடிகள் கொண்ட இப்பாடலுக்குரிய சந்தக் குழிப்பு:–

*“தத்தன தனதன தத்தன தனதன*
*தத்தன தனதன தனதான!”*

இதற்கு உரையாசிரியர் சொற்பொருள் தருவதுடன், விளக்கவுரையும் தருகின்றார்:

“ ‘கைத்தலம்’ என்பது ‘கையாகிய இடம்’ என விரிந்து, இருபெயரொட்டுப் பண்புத் தொகை ஆயிற்று. நிறைகனி – இது, ‘கை நிரம்பிய பல்வகைக் கனி’ எனவும்; ‘கை நிரம்பும் அளவினதாய பருத்த கனிகள்’ எனவும் பொருள் தராநின்றது. கப்புதல் – வாய் நிரம்ப வைத்துக் குதட்டி உண்ணுதல். கரிமுகன் – யானைமுகன்; கரி – யானை; கரத்தோடும் கூடியது கரி; ஏனைய மிருகங்களுக்கு இல்லாததாகிய தும்பிக்கை, யானைக் குண்மையின் ‘கரி’ எனப் பேர் போந்தது. இன்னும் ‘கைம்மா, கைம்மலை’ என யானைக்குப் பேரமைந்துள்ளவாறும் கருதற் பாலது. ‘கருத்த நிறத்தையுடையது ஆதலின் கரி எனப் பெயராயிற்று’ எனின் அது பொருந்தாது; இதனினும் கரிய மிருகங்கள் பலவுள என அறிக.

இவ்வாறே பல பக்கங்களில் விளக்கவுரை எழுதில் செல்கின்றார் இவ் உரையாசிரியர். இவ் விளக்கவுரையில், இலக்கணக்குறிப்பு, பிற நூல் மேற்கோள், சொற்பொருள் நயம் எனப்பலவும் அமைந்துள்ளன. மிகச் சிறந்த திருப்புகழ் விரிவுரை நூல் இது!

## திருப்பூவண நாதர் உலா (உரை)

*திருப்பூவணம் கந்தசாமிப் புலவர்*

செ. ரெ. இராமசாமி பிள்ளை (உ.ஆ.)

‘உலா’ விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ‘தந்துரை’ உள்ளது. இதில் ‘உலா இயல்பு, சொல்லணி, பொருளணி, வருணனை, இறைவன் பெருமை’ ஆகியன சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன. அடுத்துத் ‘திருத்தல வரலாறு, நூலாசிரியர் வரலாறு’ இடம்பெற்றுள்ளன.

முதலில் ‘பிள்ளையார் வணக்கம்’ – 1 பாடல்; அடுத்து நூல் – 469 கண்ணிகள். இவை பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட்டுப் பொருளும், சில பகுதிகட்கு அரும்பொருள் உரையும் தரப்பட்டுள்ளன.

*“பொன்பூத்த உந்திப் பொலந்தா மரையாற்கும்*
*மன்பூத்த கஞ்ச மறையவற்கும் – மின்பூத்த*

*இந்திரற்கும் தேவர்க்கும் யாவர்க்கும் மாதவர்க்கும்*
*சந்திரற்கும் சூரியர்க்கும் தம்பிரான் . . . !"*

– என்பது நூலின் தொடக்கம்.

இப்பகுதிக்குப் பொருள், தனித்தனியாகச் சொல்லப்பட்டுள்ளது. "அழகு பொருந்திய கொப்பூழாகிய மகரந்தப் பொடியையுடைய தாமரை மலரையுடைய திருமாலுக்கும், குவியாத செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, மறையோதுகின்ற நான்முகனுக்கும் தேவருலக ஆட்சிச் சிறப்புடைய இந்திரனுக்கும், மற்ற முப்பத்து முக்கோடி தேவர்கட்கும், அவரொழிந்த மற்றவர்கட்கும், மிக்க தவத்தையுடைய முனிவர்கட்கும், சந்திரனுக்கும் சூரியனுக்கும் தலைமையுடையவன் . . . !"

என்பது மேலே காட்டிய 4 அடிகளின் பொருள்.

உந்தி – கொப்பூழ். திருமாலுக்கு உந்தியே தாமரை மலராகப் பூத்துளது. அதில் நான்முகனைப் படைத்து அவன் வழியாக உலகந் தோன்றிற்றென விசிட்டாத்துவித மறைகூறும். 'நான்முகனை நாராயணன் படைத்தான்' என்னும் திருவாய்மொழியும் காண்க. . . . !"

– இத்தகைய விளக்கமும் இந்நூலில் காணலாம்!

## திருப்பூவணம் புஷ்பவனநாதர் வண்ணம்

*பு.அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ.)*

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'நாதநாமக் கிரியை' இராகத்தில் 'ஆதி' தானத்தில் பாடப்படும் பாடல்.

*"காரணப்ர சித்தவத்து ஞானவித்து நித்தியக்ரு*
*பாசமுத்ர நிட்களப்ர காசரத்ன வற்புதப்பொன்*
*மறைப்பொருள் நம்புமடி யவர்க்கவர் சிந்தைபணி*
*விளக்குமெ யன்புதனில் முளைத்தெழு கின்றபரி*
*பூரணசு கோதயவி னோதநவ நீதவடி*
*வாகியம னோகரப ரப்ரம்விலாசர் . . . ."*

என்று தொடங்கும் இவ்வண்ணம், பின்வரும் சந்தங் கொண்டது:

*"தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த*
*"தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த*
*"தனத்தன தந்ததன தனத்தன தந்ததன*
*"தனத்தன தந்ததன தனத்தன தந்ததன*
*தானதன தானதன தானதன தானதன*
*தானதன தானதன தந்த தனதான*
*தனதான தனனதன தானனா!"*

**திருப்போரூர் ஆண்டவர் சுழியிலா வண்ணம்**

*பு. அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ.)*

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

*"பூமிசை தங்குயிர் யாவையுமுன்பருள் தல்விக் காஸ்தானசுந்தரர்*
*மாதவர்கண்களி கூர நயந்தணி தில்லைக்கூத் தாடுசங்கரர்*
*பத்தர்க்கா ளந்தரத்தினை நத்திச்சூழ் மாந்தருக்கருள்*
*பூம்பதங்கன காம்புயம்புரை சாந்தர் மின்சடை தாங்குகங்கையர்*
*புலவர்பரவவட நிழலிலமரவரு*
*குரவர் பதுமமணி – வண்ணமங்கள நாதர் . . ."*

என்று தொடங்கும் இவ் வண்ணம், 'புன்னாகவராளி' இராகம் 'ஆதி' தாளத்தில் பின்வரும் சந்தக் குழிப்பில் பாடப்படுவது.

*"தானதனந்தன தானதனந்தன தையத்தாத் தானதந்தன*
*தானதனந்தன தானதனந்தன தையத்தாத் தானதந்தன*
*தத்தத்தா தாந்தனத்தன தத்தத்தா தாந்தனத்தன*
*தனதனதனதன தனதனதனதன*
*தனதனதனதன தன்னதந் தனதான*
*தனதானத்தன தானதன தனதந்தனா!"*

திருமூலர் திருமந்திரமாலை முந்நூறு (உரையும் விளக்கமும்)

*ந. சிவப்பிரகாச தேசிகர் (உ.ஆ.)*

'திருமந்திரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. பொன், பூ, மணி, சொல் முதலியவற்றால் ஒழுங்குபடத் தொடுத்து யாக்கப்படுவன 'மாலை' எனப்படும். இந்நூலின்கண் உள்ள செய்யுட்கள் யாவும் ஒரே வகையான யாப்பால் இயன்றனவாயும், அந்தாதித் தொடையால் அமைந்தனவாயும், முதலும் முடிவும் மண்டலித்தும் இருத்தலினாலே 'திருமந்திர மாலை' எனப்பெயர் பெற்றது. 'திருமூலர் மாலை' என்றும் பெயர்.

இஃது இறைவனுக்குரிய (1) அங்கம்; (2) பிரத்யங்கம்; (3) சாங்கம்; (4) உபாங்கம் ஆகிய நால்வகை அங்கங்களுள் 'உபாங்கம்' ஆகும். இஃது இறைவனை விட்டு நீங்காமல் அவனருகில் இருப்பது. உப – சமீபம். இதன் வகை 7. அவை : உடை, புரிநூல், மாலை, சாந்து, அணிகலன், இருக்கை – ஆசனம் ; ஆவரணம் என்பன.

இந்நூலின் தொடக்கத்தில் 'தோற்றுவாய்' உள்ளது. நூலைப்பற்றி அறிய இது பெரிதும் உதவுவது.

இதில் 332 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய தலைப்பு ; பாடவேதம்; குறிப்புரை; விளக்கம் என அமைந்துள்ளது.

*"வைத்துரைத் தான்மதி சூடிய கூத்தனும்*

*ஒத்த எழுத்தைம்பத் தொன்றும் உடலாகச்*
*சக்தி திருமேனி சங்கரன் நன்மேனி*
*அத்தன் மூவெழுத் தாகும் அகாரமே!"*

இதற்கு உரையாசிரியர் தரும் உரைக்குறிப்பு : முதலில் 'பாடபேதம்'; அடுத்துக் 'குறிப்புரை'; – 'இம்மந்திரம், இயந்திரத்தில் இடப்பட்டுள்ள எழுத்துக்கள் 51ம், புவனாபதியாரின் திருமேனியா மாறும், அன்று 51ம் அங்கமாய் அமைந்து நிற்கும் முறைமைக்குத் தோற்றுவாயும் உணர்த்துகின்றது.

மதி – திங்கள்; கூத்தன் – சிவன்; எழுத்து ஐம்பத்தொன்று – 'அகரம்' முதல் 'க்ஷகரம்' ஈறாகவுள்ள 51 எழுத்துக்கள். சத்தி – ஆற்றலுடையவள், இறைவி. சங்கரன் – இன்பஞ் செய்தலின் சங்கரன் (காஞ்சிப்புராணம்); அத்தன் – சிவன் (நாநார்த்த தீபிகை).

அகரம் முதலாக க்ஷகரம் ஈறாகவுள்ள 51 எழுத்துக்களும் உடலின் உறுப்புக்களாக இருத்தலினாலே, அவை புவனாபதியாரின் திருவுருவமாகும் என்பதாம் !

– இவ்வாறு விளக்கமளித்து 'மேற்கோளு'ம் காட்டுகின்றார் உரையாசிரியர். இதனால் 'திருமந்திரம்' வேறு, 'திருமந்திரமாலை' வேறு என்பது தெரியவரும்.

திருமந்திரம் : 1, 2, 3 (முதல் 3 தந்திரம் பொழிப்புரை, விளக்கக் குறிப்புரை)

*திருமூல தேவநாயனார்*

*சி. அருணைவடிவேலு முதலியார் (உ.ஆ.)*

'திருமந்திரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது. அடுத்து, 'அதிகார முறைமை' (9 தந்திரங்களுக்கும்); 'ஆசியுரை', 'முதற்பதிப்பின் பதிப்புரை, முன்னுரை' ஆகியன விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. பின்னர்த் 'திருமூல நாயனார் வரலாறு' இடம்பெற்றுள்ளது.

இதில் 'பாயிரம்' முதல் '3ஆம் தந்திரம் – சந்திரயோகம்' வரை 866 பாடல்கள் : 'மூலம், தெளிவுரை, குறிப்புரை' என அமைந்துள்ளது.

*"பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்*
*பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்*
*பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்*
*பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே!"*

என்பது, முதல் தந்திரத்தில், முதலாவதாகிய 'சிவபரத்துவம்' என்னும் பகுதியில் வருவது.

இதற்கு உரையாசிரியர் தரும் 'தெளிவுரை, குறிப்புரை' வருமாறு:–

"யாவரினும் பெரியவனும், யாவர்க்கும் அரியவனும், நால்வகைத்

தோற்றத்துள் ஒன்றாகாது தன் இச்சையாற் கொள்ளப்படுவனவாய அருட்டிரு மேனிகளை உடையவனும் ஆகிய எங்கள் சிவபெருமானைப் பிதற்றுதல் ஒருகாலும் ஒழியேன்; அதனால் நானே பெருமையையுடைய தவத்தை உடையவன்!"

குறிப்புரை: பிதற்றுதல் போலுதலின் 'பிதற்று' என்றார். இது, முதனிலைத் தொழிற்பெயர். 'பிதற்–றொழியேன்' என்பதனைச் சொற்பொருட்பின்வருநிலையாகப் பலகாற் கூறியது, வலியுறுத்தற் பொருட்டு. வேறு வேறு தொடராதலின் இஃது ஒருசொல்லடுக்கன்மை உணர்க. 'பெரியானை' என்னும் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று. 'இத்தன்மையனை இடையறாது துதித்தல் தனுமிலார்க்குக் கூடாது' என்றற்கு, 'பெருமைத் தவன் நானே' என்றார். 'தவமும் தவமுடையார்க்கே ஆகும்' (குறள் 262) என்றார் திருவள்ளுவ நாயனாரும்! 'யானே தவமுடையேன் . . . ஆளாயினேன்' (அம்மை திருவந்தாதி :1) என்றது காண்க!"

– இத்தகைய விளக்கம் தரும் அரிய நூல் இது!

திருமந்திர மாலையாகிய திருமந்திரம் (முதல் 3 தந்திரங்கள்)

*திருமூல தேவநாயனார்*

சி. அருணை வடிவேல் முதலியார் (உ.ஆ)

'திருமந்திரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'பதிப்புரை' உள்ளது. இதில் 'நூற்சிறப்பு, ஆகமப் பொருள்' முதல் மூன்று தந்திரப் பொருள், திருமந்திர உரை, அனுபவ நூல், யாப்புவகை, உரை அமைப்பு' ஆகியன உள்ளன. அடுத்து 'மதிப்புரை' உள்ளது. பின்னர் 'முன்னுரை'; இதில் 'நூற்கருத்துக்கள்' தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளன. இதனையடுத்துத் 'திருமூலநாயனார் வரலாறு' விளக்கமாக இடம்பெற்றுள்ளது. இதற்குப் பின், 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது.

பாடல், அடிக்குறிப்பில் 'தெளிவுரை, குறிப்புரை' என்று உள்ளது.

*"சாந்து கமழும் கவரியின் கந்தம்போல்*
*வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி*
*ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்*
*போந்தும் இருந்தும் புகழுகின் றேனே!"*

என்பது முதல் தந்திரப் பாடல்.

இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரையும் குறிப்புரையும்:–

"சந்தனத்தில் நின்று கமழ்கின்ற கத்தூரிமானின் மதமணம் போலச் சிவபெருமான், முத்தியுலகத்தில் உள்ள சிலர்க்கு அறிவுறுத்த நெறியே மெய்ந்நெறி. அந்நெறி நின்றே பகலவனது பலகதிர்கள் போன்ற அவனது பல

திருப்பெயர்களை, நான் நடக்கும் பொழுதும், இருக்கும் பொழுதும் துதித்துக் கிடக்கின்றேன்.

குறிப்புரை :– 'நீவிரும் அவ்வாறு செய்தலே தக்கது' என்பது குறிப்பெச்சம். 'மான்மத மணம் சந்தன மணத்தினும் வேறாய்மிக்குத் தோன்றுமாறு போலச் சிவபிரான் அறிவுறுத்த நெறி, ஏனைநெறியிலும் மிக்குத் தோன்றுதல், அறிவுடையார்க்குப் புலனாகும் என்பது,

'சாந்து கமழும் கவரியின் கந்தம்போல்' என்ற உவமையால் குறிக்கப்பட்டது. . . . கவரி – ஆகுபெயர். 'முத்தியுலகத்தில் மெய்ந்நெறி அறுவுறுக்கப்பட்டோர் 'பிரணவர்' முதலியோர் என்பது பின்னர்க் காணப்படும் மெய்ந்நெறியானே' என உருபு விரிக்க. ஆர்ந்த சுடர் – பன்மையும் ஒளியும் பற்றி வந்த உவமை. 'பேர்ந்தும்' என்பதும் பாடமாகலாம்!''

– இத்தகைய அரிய தெளிவுரை கொண்ட நூல்.

திருமந்திரம் மூவாயிரம் (2ஆம் பகுதி – 6 முதல் 9 தந்திரங்கள்)

*திருமூல நாயனார்.*

*ப. இராமநாதபிள்ளை; துடிசைகிழார் அ. சிதம்பரனார் (உ.ஆ.)*

இந்நூலில், 'மூலம் – பொழிப்புரை, பதவுரை' எனும் அமைப்பு உள்ளது.

*''முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கும்*
*அத்தனை மாயா அமரர் பிரான்தனைச்*
*சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்*
*பத்தர் பரசும் பசுபதி தானென்றே!''*

என்பது, 'பத்தியுடைமை' என்ற தலைப்பில் வருவது. இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை.

''வீடு பேற்றினை அளித்தருளும் திருவடியுணர்வாகவும், அவ்வுணர்வினை நல்கும் திருவைந்தெழுத்து மறையாகவும்; நிற்பவன் சிவபெருமான் அவனே அனைத்துயிர்க்கும் அத்தனுமாவன். அவனே என்றும் பொன்றா வானவர் தலைவனுமாவன். அவனே இயல்பாகப் பாசங்களினின்றும் நீங்கிய தூயோனுமாவன். அவனே என்றும் மங்கா அழிவுப் பேரொளியுமாவன். அவனே, மெய்யன்பர்களால் வழிபட்டுப் போற்றிப் புகழப்படும் பசுபதியாகிய இறைவனுமாவன்''

– இத்தகு எளிய உரை கொண்டது.

திருமந்திரமாலை எனப்பெயரிய 'திருமந்திரம்'.

*திருமூலர்*

*சைவசித்தாந்த மகாசமாஜம் (ப.ஆ.)*

'திருமூலர் திருமந்திரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின்

தொடக்கத்தில், 'திருமூலர் வரலாறு', 'அரும்பொருட் குறிப்புக்கள்' உள்ளன.

இந்நூலில் 3071 பாடல்கள் (மூல மட்டும்) உள்ளன.

*"அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே!"*

என்பது 'அன்புடைமை' என்னும் அதிகாரத்தில் வருவது. இந்நூலில் உள்ள 'அரும்பொருட்குறிப்புக்கள்' மிகவும் பயனுள்ளவை.

திருமந்திரம் (முதல் தந்திரம்)

*(பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன்)*

*திருமூலர்*

*ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.)*

'திருமந்திரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. இதில் 'முதல் தந்திரம், திருமந்திர உரைகள்' பற்றிய குறிப்பு உள்ளது.

இதில், 336 பாடல்கள் உள்ளன. பாடலையடுத்துப் 'பொருள்'; அதனையடுத்துச் சொற்பொருள், விளக்கம் தரப்பட்டுள்ளன.

*"சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே*
*சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா*
*சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்*
*ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே!"*

உரையாசிரியர் பின்வருமாறு பொருளும் விளக்கமும் தருகின்றார்:

"சூரிய காந்தமும் அதனைச் சுற்றியுள்ள பஞ்சும் போல, உயிரும் உயிரை மறைத்துள்ள மலங்களும், சூரிய காந்தம் சூழ்ந்துள்ள பஞ்சைச் சுடாது; சூரியன் சந்நிதியில் சுடும். அதுபோல எனது நந்தி குருநாதன் தோற்ற மலங்கள் வலியொடுங்கின.

சூரிய காந்தம் – சூரியன் கதிர்பட்டவுடன் நெருப்பு உண்டாக்கும் ஒருவகைக் கண்ணாடிக்கல். அதன்கீழ்ப் பஞ்சை வைத்துச் சூரிய காந்தக் கல்லின் வழியாகச் சூரியன் கதிர் விழச் செய்யின் பஞ்சு தீப்பற்றி எரியும். சூரிய காந்தக் கல்லுக்குத் தீ வெளிப்படுக்கும் தன்மை இயல்பு எனினும், பஞ்சு எளிதில் தீப்பற்றக் கூடியது எனினும், இவையிரண்டும் தம்முள் மிக அணுக்கத்திருப்பினும், சூரிய காந்தம் பஞ்சை எரிக்காது; சூரியன் சந்நிதியில்தான் எரிக்கும். அதுபோல ஆன்மாவும் ஆணவம் முதலிய மலங்களும் தொடர்புடையவாயினும், ஆன்மா தானே மலங்களை நீக்கிக் கொள்ளாது; சிவகருணை வேண்டும் என்பதாம். சிவ

கருணையே ஆசிரியன்வழி அடையப்படுவது!"

– இத்தகைய அரிய விளக்கங்கள் கொண்ட நூல்.

திருமந்திரம் : இரண்டாம் தந்திரம்

(பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்)

திருமூலர்

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.)

'திருமந்திரம்' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் உள்ள 'முன்னுரை'யில், நூலைப் பற்றிய குறிப்புரை தரப்பட்டுள்ளது.

இந்நூலில் திருமந்திரம் 337 முதல் 548 வரையிலான பாடல்கள் – பொருள் – விளக்கம் ஆகியன உள்ளன.

"அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கல்வியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்துநின் றானே!"

இதற்கு உரையாசிரியர் தரும் உரை :– "இறைவன் இருப்பு, இப்படி என்றல் நுதலிற்று. பஞ்சபூதங்களினும் அன்புடன் எழுந்தருளியிருக்கும் இறைவன், அன்பு, அறிவு, அடக்கம், இன்பம், இன்பம் விளைக்கும் புணர்ச்சி ஆகிய எல்லாமாய் நிற்பன். மேலும் தோற்றக் காலமும் இறுதிக் காலமுமான ஊழியுமாக இருப்பன் என்றவாறு. இறைவன் அன்பு முதலிய உயிர்க்குணமாகியும், புணர்ச்சி முதலாகிய தொழிலாகியும், பொழுதாகியும் இருப்பன் என்பது கருத்து.

– இவ்வாறே எளிய உரை அமைந்த நூல் இது!

திருமந்திரம் – சிவயோக சாரக்கட்டளை என்னும் சிவயோக சிந்தனை.

திருமூலர்

த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை (உ.ஆ.)

'திருமந்திரம்' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. இதில் 'இயமம், நியமம், ஆசனம், தியானம், சமாதி' முதலியனபற்றி விளக்கம் தரப்பட்டுள்ளது.

திருமந்திர நூலில் ஆங்காங்கு இடம்பெற்றுள்ள 'சிவயோக சிந்தனை' குறித்த பாடல்களும் அவற்றுக்கான விளக்கங்களும் இந்நூலில் தரப்பட்டுள்ளன. இச் 'சிவயோக சிந்தனை' இல்லறம் துறவறம் ஆகிய இருதிறத்தார்க்கும் மிக எளிதாகப் பயிற்சி செய்யும்படி எளிய நடையில் தரப்பட்டுள்ளது.

"மதிதனில் ஈராறாய் மன்னும் கலையின்
உதய மதுநா ளொழியவோ ரெட்டும்
பதியும் ஈராறாண்டு பற்றறப் பார்க்கில்
திதமான ஈராறு சித்திகள் ஆமே!"

என்பது திருமந்திரம். இதற்கு உரைகாரர் தரும் விளக்கம் :-

"சூரியோதய காலம் முதல் மூன்று நாழிகையும், மத்தியான வேளையும், அத்தமன காலத்துக்கு ஒரு முகூர்த்த நேரம் முன்னும் பின்னும், அத்தயாம காலமும் ஆகத் தினந்தோறும் நான்கு தடவை பிராணாயாமம் செய்து வரவேணும். ஒவ்வொரு வேளையினும் 80 பிராணாயாமம் செய்யும்படி நன்றாக அப்பியாசம் செய்து வரவும். ஒரு முகூர்த்தம் – 2 நாழிகை. அப்பியாசம் செய்யுமிடத்துக் காலையில் 60 பிராணயாமமும், மத்தியான காலத்தில் 40 பிராணாயாமமும், சாயங்காலத்திலும் அத்தயாமத்திலும் 20 பிராணாயாமமுமாக மெல்ல மெல்லச் செய்து வரவும். அது கைவல்லியம் ஆகும்போது முதலாவது வேர்வையும், இரண்டாவது உடல்நடுக்கமும், மூன்றாவது தவளைத் தத்தும், அப்பியாச காலத்தில் பதுமாதத்தில் இருக்கும் பொழுது பூமியிலிருந்தாலும், ஆகாயத்தில் இருப்பதாலும் உண்டாகும்!"

– இத்தகு விளக்கம் தரும் நூல் இது!

திருமந்திரம் – விரிவுரை தொகுதி 1+2

திருமூலர்

ஜி. வரதராஜன் (உ.ஆ)

'திருமந்திரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'நூன்முகம்' உள்ளது. இதில் நூலின் கருத்து, சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது.

முதல் தொகுதியில் 3 தந்திரங்கள்; 2ஆம் தொகுதியில் 4, 5, 6 எனத் தந்திரங்கள் உள்ளன. ஒவ்வொரு தலைப்பிற்கும் பொருள்; பாடல்; பதப்பொருள்; விளக்கம்; கருத்து என்ற அமைப்பில் உள்ளது.

"இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே
பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத் துவந்ததே!"

– இதற்கு உரையாசிரியர் தரும் 'பதப்பொருள், விளக்கம், கருத்து' வருமாறு:–

பதப் பொருளின் தொகுப்பு :– திருவருளால் இறைவனைப் பொருந்த எழுகின்ற அன்பின் வழியே, அன்பை ஆதாரமாகக் கொண்டு வெளிப்படுகின்ற இறைவனை இறவா இன்ப அன்பில் பற்ற, செவ்வொளியானது மேல் நோக்கி

ஏறுதலைச் செய்து சிரசில் படர, விரும்பிய திருவடி உள்ளத்தே இன்பமாய் நிறைந்தது.

இதற்கு இவர்தரும் விளக்கம் :– பசைதல் – அன்பு கொள்ளுதல்; சென்னி கைவைத்தலாவது– மூலாதாரத்திலும் சுவாதிட்டானத்திலும் உள்ள சக்கரங்கள் செவ்வொளியுடன் கூடியவை. சிவத்தைச் சிந்திக்கச் சிந்திக்க சுவாதிட்டானத்திலுள்ள உணர்வானது, மூலாதாரம் சென்று பிடரிக்கண் வழியாகப் பிரமாந்திரம் அடையும். அப்போது குருமண்டலம் விளங்கி ஓர் ஆனந்தம் உண்டாகும். இதுவே 'சென்னி கை வைத்தல்'.

"சீருடைச் செங்கமலத்தில் திகழுரு வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசமறுத்தெனை யாண்ட
ஆருடை யம்பொனின் மேனி அமுதினை நீ வரக்கூவாய்!" (திருவாச. 354)

கருத்து : அன்பினால் இறைவனைச் சிந்தித்தால், சிரசின்மீது உணர்வு பெருகி இன்பம் உண்டாகும்!

– இத்தகு அரிய விளக்கம் தரும் நூல்!

திருமந்திரம் – ஐந்தாம் தந்திரம் (பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்)

திருமூலர்

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.)

'திருமந்திரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் 'முகவுரை'யில், திருமந்திர நூல் நுவலும் கருத்துச் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இந்நூலில், 5ஆம் தந்திரம் 1419 முதல் 1572 உவமையிலான பாடல்களும் அவற்றின் பொருள், விளக்கங்களும் உள்ளன.

"சரியாதி நான்குந் தருஞானம் நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்தம் ஆறும்
பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே!"

என்ற பாடலுக்கு, உரையாசிரியர் தரும் பொருளும் விளக்கமும்:–

"சரியை முதலான நான்கு நெறிகளும் நல்கும் ஞானம் நான்கும், விரிவான வேதாந்த சித்தாந்த நூல்கள் தரும் நெறிகள்; அவ்வாறையும், மக்களுக்கு அறியத்தக்க பொருளாக அமைந்தது; சிவபெருமான், அழகிய பூமிக்கண் ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளி, ஆணவமல மயக்கத்துள் அழுந்திய மக்கள் வணங்கி ஈடேற அருளினன்.

சரியாதி தருஞானம் நான்கு : சரியையில் ஞானம், கிரியையில் ஞானம்,

யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என்பன. வேதாந்தம் ஆறு : காபிலம், காணாதம், பாதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமினியம் என்பன. சித்தாந்தம் ஆறு : பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. பொருளானது : உயிர்கட்கு ஈடேறும் உபாயப் பொருளாக அமைந்தது. மருளாகும் மாந்தர் : அநாதியே மூலமலத்தால் மறைப்புண்டு மயங்கிய ஆன்மாக்கள்!"

– இவ்வாறு ஒவ்வொரு பாடலுக்கும் விளக்கம் தரப்பட்டுள்ளது.

## திருமந்திரம்

திருமூலர்.

துடிசைகிழார் அ. சிதம்பரனார் (ப.ஆ.)

'திருமந்திரம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'திருமந்திர வரலாறு, திருமந்திர ஆராய்ச்சி, ஒப்புமைப் பகுதி' முதலான பயனுள்ள குறிப்புக்கள் உள்ளன.

'திருமுறைகளின் வரலாறு, திருமந்திரம் பெயர்க்காரணம், திருமூல நாயனார் இயற்பெயர் – நாடு, சுந்தரநாதர், திருக்கூத்துக் காட்சி கண்டது, திருமூலர் காலம், திருமந்திரம்' முதலான செய்திகள், 'திருமந்திர வரலாறு என்ற தலைப்பில் சொல்லப்பட்டுள்ளன.

'திருமூலர் வரலாறு – அகச் சான்றுகள், நூல் நுதலும் பொருள்கள், திருமந்திர நூலின் பழமையும் பெருமையும்' முதலிய செய்திகள் 'திருமந்திர ஆராய்ச்சி' என்ற தலைப்பில் சொல்லப்பட்டுள்ளன. திருமந்திர நூல் மூலம் அல்லது கருத்து, பிற எந்த நூலில் சொல்லப்பட்டுள்ளது எனும் ஒப்புமைப் பகுதியும் இடம்பெற்றுள்ளது.

அடுத்துப் 'பாயிரம்' முதல் இறுதிவரை மூலபாடம் – 3108 பாடல்கள் தரப்பட்டுள்ளன. திருமந்திரப் பாடல்களை மட்டும் பயில விரும்புவார்க்கு இது பயன்தரும் நூல்.

## திருமயிலைத் திருப்புகழ் (உரையுடன்)

அருணகிரிநாதர்

திருமுருக. கிருபானந்த வாரியார் (உ.ஆ)

'திருப்புகழ்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 10 திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. இவற்றிற்கு அரிய உரை விளக்கம் தந்துள்ளார் உரையாசிரியர்.

ஒவ்வொரு பாடலுக்கும், மூலத்தையடுத்துப் 'பதவுரை – பொழிப்புரை, விரிவுரை, கருத்துரை' என அமைந்துள்ளன.

"அயிலொத் தெழுமிரு – விழியாலே!
அமுதொத்திடுமரு – மொழியாலே!

சயிலத் தெழுதுணை – முலையாலே!
    தடையுற் றடியனு – மடிவேனோ?
கயிலைப் பதியான் – முருகோனே!
    கடலக் கரைதிரை – யருகேசூழ்
மயிலைப் பதிதினி – லுறைவோனே!
    மகிமைக் கடியவர் – பெருமாளே"

எனினும் பாடலுக்கு உரையாசிரியர், முதலில் பதவுரை தந்து அடுத்துப் பின்வருமாறு பொழிப்புரை தருகின்றார்:–

"திருக்கயிலாய மலையில், வீற்றிருக்கின்ற சிவபெருமானுடைய திருக்குழந்தையே! கடற்கரையில் அலைகள் அருகில் சூழுகின்ற திருமயிலாப்பூரில் வாழ்பவரே! பெருமையுடைய அடியவர் போற்றும் பெருமிதமுடையவரே! வேல் போன்ற மாதர்களின் இருகண்களாலும், அமுதம் போன்ற அழகிய சொற்களாலும், மலை போன்ற இரு தனங்களாலும் அடியேன் முத்திநெறி செல்லாது தடைபட்டு மடியலாமோ?"

இனி, இதில் வரும் தொடர்கட்கு 'விரிவுரை' தந்து, 'கருத்துரை'யும் அளிக்கின்றார் உரைகாரர்! மயிலை வாழ் மக்கள் நாளும் பாராயணம் செய்யத்தக்க நூல்!

## திருமுருகாற்றுப்படை

நக்கீரர்

(தெளிவுபொருள் விளக்கவுரை சொல்லடைவு பொருளடைவு)

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் (ப.ஆ.)

'திருமுருகாற்றுப்படை' நூல் விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் 'பதிப்புரை' உள்ளது.

"உயிர்கள் அனைத்துக்கும் கணவன் – ஆண்டவனேயல்லவா? ஆண்டவனை அணைவதற்கு 'மறுஇல் கற்பு' வேண்டும். 'உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே!' என்று நிற்பதுதான் 'மறுஇல் கற்பு';

எனும் குறிப்பு, இப் 'பதிப்புரை'யில் உள்ளது.

அடுத்து, 'நக்கீரனார் வரலாறு' தரப்பட்டுள்ளது. பின்னர்த் 'திருமுருகன் திருவுருவக் காட்சி'; 'ஆற்றுப்படை வீடுகளின் வைப்பு முறை', 'திருமுருகாற்றுப் படைக்குறிப்பு' ஆகியன அமைந்துள்ளன.

"திருச்சீரலைபாய் – நெய்தல்; திருப்பரங்குன்றம் – குறிஞ்சி; திருவாவினன் குடி – முல்லை; திருவோகம் – மருதம்" என்ற கருத்தில் இந்நூல் உருவாகியுள்ளது.

பின்னர் ஆறு படைவீடுகளுக்கும் உரிய பாடல் (317 அடி) தரப்பட்டுள்ளது; அடுத்துப் பகுதி பகுதியாகப் பிரித்துத் தெளிபொருள் சொல்லப்படுகிறது.

முதலில், 'பொழிப்புரை'; அடுத்து 'விளக்கம்' எனும் முறையில் உரை அமைந்துள்ளது. ஆங்காங்கே இலக்கணக்குறிப்பும் உள்ளது.

"வாணுதல் – வான் என்பதைப் பொருட்பெயராகக் கொண்டு, வாணுதல் என்பதனை இரண்டன் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி எனலாம். வான் என்பதனைப் பாண்டிப் பெயராகக் கொள்ளின், பண்புத்தொகை அன்மொழியாம்!" என்பன போன்ற குறிப்புக்கள் உள்ளன.

இறுதியில் உள்ள 'சொல்லடைவு, பொருளடைவு' பலர்க்கும் பயன்படும். இதனையடுத்துத் 'திருமாலிருஞ்சோலைமலை' (அழகர் கோயில்) பற்றிய ஆங்கிலக் கட்டுரையும் உள்ளது. 'திருமுருகாற்றுப்படை' நூலினை அறிய இந்நூல் பெரிதும் துணைபுரியும்.

## திருமுருகாற்றுப்படை

நக்கீரர்

பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ.)

திருமுருகாற்றுப்படை – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில், நூலாசிரியர் 'நக்கீரர் வரலாறு', 'பாட்டுடைத் தலைவன் வரலாறு', 'உரைப்பாயிரம்' முதலாயின உள்ளன.

அடுத்துத் 'திருப்பரங்குன்றம்' முதல் 'பழமுதிர்சோலை' வரையிலான 6 படைவீடுகட்குமுரிய பாடல்கள் – 317 அடிகள் தரப்பட்டுள்ளன. அதனையடுத்து ஒவ்வொரு படைவீட்டிற்குமுரிய பாடல், பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட்டு, உரைவிளக்கம் தரப்படுகின்றது. மேலும், 'திணை துறை'யும் சுட்டப்பட்டுள்ளது. ஆங்காங்கே சாத்திர நூற் சான்றுகளும் தரப்பட்டுள்ளன.

திருமுருகாற்றுப்படையின் தொடக்கம்,

"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு"

என வந்துள்ளது. இதற்கு இவ்வுரையாசிரியர் தரும் விளக்கம்:

"ஞாயிற்று மண்டிலத்தையும், இறைப்பொருளையும் பலசமயத்தவரும் போற்றுதல் இயல்பாதலும் அறிக! இங்ஙனம் இறைப்பொருள் தனது திருவருளாகிய சத்தி மேலிட்ட காலத்தே அவ்வருள் காரணமாகவே உயிர்கள் ஆணவமல இருளினின்றும் நீங்கித் தனது திருவடி ஒளியாகிய வீடுபெற்று மகிழும் பொருட்டு படைப்பு முதலிய தொழில்களைச் செய்வன் என்பதனை,

"நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்

நிறைகிரியை தரவுதனை நிமலன் மேவி . . .''

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளானும் உணர்க!''

– இவ்வாறு நூல்முழுதும் பல்வேறு விளக்கம், பிறநூற் சான்றுகள் அமைந்து கற்பார்க்குக் கழிபேருவகை நல்குவதாக இந்நூல் அமைந்துள்ளது.

## திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகர் உரையும்

நக்கீரர்

அ. மஹாதேவ செட்டியார் (ப.ஆ,)

திருமுருகாற்றுப்படை நூல் விளக்கம், முதல் தொகுதியில் சொல்லப்பட்டுள்ளது. இந்நூலில், 'திருப்பரங்குன்றம்' முதல் 'பழமுதிர்சோலை' வரையிலான 6 படைவீடுகளுக்கான பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு திருப்படை வீட்டுத் துதியின் மூலம், வரிக் கணக்கோடு போடப்பட்டிருக்கின்றது; மேற்படி துதியைச் சிறுசிறு வாக்கியங்களாக எடுத்து, அந்வயப் படுத்திக் காட்டி, இதன்கீழ் மேற்படி வாக்கியம், இன்னவரியைச் சார்ந்ததென்றும் காட்டப்பட்டுள்ளது; பிறகு, மேற்படி பதங்கள் ஒரே வரிசையாகவும், மேற்படி பதங்களின் பதப்பொருள் மேற்படி பதங்களுக்கு நேர் நேராகவும் போடப்பட்டிருக்கின்றன. மேற்படி பதவுரையையே பொழிப்புரையாகவும் படித்துக் கொள்ளுமாறு அமைக்கப்பட்டுள்ளது. மேற்படி பதவுரையின் கீழ் உரைவிளக்கம் காட்டப்பட்டுள்ளது. பாடநிபதங்கள் அந்தந்த இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

நூலின் தொடக்கத்தில் 'நக்கீரர் வரலாறு' உள்ளது. அடுத்துப் 'பரிமேலழகர் வரலாறு' இடம் பெற்றுள்ளது. பின்னர், 'இப் பிரபந்தத்தின் தாற்பரியம்' சொல்லப்பட்டுள்ளது.

''முத்தியைப் பெற்றவன் ஒருவன், பெறுதற்குப் பக்குவனாகிய ஓர் இரவலனை, அது பெறும்பொருட்டு முருகக் கடவுளிடத்தே வழிப்படுத்ததாக 'இப்பிரந்தம் செய்யப்பட்டமை தெளிக!'' எனவே, இதன் தாற்பரியக் கருத்து.

ஒவ்வொரு பாடவீட்டைப் பற்றிய பாடல் முழுவதையும் கொடுத்து, அதன்பின், வரிக்குவரி – சொல்லுக்குச் சொல், பதம் பிரித்து உரைகூறப் பட்டுள்ளது.

நூலின் இறுதியில் 10 தோத்திரப் பாக்கள்; இவற்றிற்கு, கோ. வடிவேலு செட்டியார் உரை எழுதியுள்ளார்.

## திருமுறைத் தியானம்

பு. மா. ஜய செந்தில் நாதன் (தொ. ஆ)

சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும் நாள்தோறும் பாராயணம் செய்தல் என்பது இயலாதவொன்று. எனவே ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு திருத்தலத் தொடர்பான ஒரு பாடலையாவது, பொருள் உணர்ந்து, பாராயணம் செய்து

பயன்பெற வேண்டும் என்ற உயர் நோக்கத்தால் உருவானதே இந்நூல்!

'நாள்தோறும் பாராயணம்' என்பதால், 'சனவரி – 1' முதல் 'திசம்பர் – 31' வரை கணக்கிட்டு, ஒவ்வொரு நாளும் ஒரு பாடலையாவது பொருள் உணர்ந்து பாராயணம் செய்வதற்கு ஏதுவாக அமைந்துள்ளது. பாடிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலானோர் பெயர்; திருத்தலப்பெயர்; ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் – இறைவி திருப்பெயர்கள் – இவற்றை முதலில் கொடுத்து, அடுத்துத் தேவாரப் பாடல்; அதற்குரிய பொழிப்புரை தந்துள்ளார் தொகுப்பாசிரியர்.

## திருமுறைத் திரட்டு (கருத்துரையுடன்)

ஸ்ரீ உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள்

வா. ச. சுந்தரேசம் பிள்ளை (உ.ஆ.)

இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. நூலில் 99 பாடல்கள்; ஒவ்வொரு பாடலுக்கும் கருத்துரை தரப்பட்டுள்ளது.

"பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய் . . ." என்னும் 1 ஆவது திருமுறைப் பாடலுக்கு, உரையாசிரியர் பின்வருமாறு கருத்துரை தருகின்றார்:

"பத்தியாகிய விதையை விதைத்து, ஐம்புலன்களாகிய விலங்குகளால் பத்திப் பயிர்க்குக் கேடுவராமற் காத்து, மனக்குற்றங்களாகிய பகையினை அறுத்து, முக்குணங்களும் அடங்கிய நிலையில் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நால்வகை உட்கருவிகளையும் ஒருநெறியின் செலுத்தி, யாண்டும் விளக்கமுற்றுத்திகழும் மெய்ப்பொருளாகிய இறைவனை இடைவிடாது நினைந்து, போற்றும் மெய்யடியார்களைத் தன்னின் வேறற ஆட்கொண்டருளவல்லவன் இறைவனாதலின் அவனருளாலேயே அவனை யறிந்து போற்றுதல் வேண்டும்!"

– இத்தகைய கருத்துரை உள்ள நூல் இது!

## திருமுறை மலர்கள்

ச. மெய்யப்பன் (ப.ஆ)

இந்நூலின் தொடக்கத்தில், மெய்யப்பன் எழுதிய 'முன்னுரை' உள்ளது.

"திருமுறைகள், பக்தி இயக்கத்தின் ஊற்றுக்கள்; தமிழிசைக்கு ஆதாரம்; . . . புறச்சமயப் படையெடுப்புக்களிலிருந்து தமிழகத்தைக் காத்தவை இவை! சாத்திர நூல்களுக்கு வித்தும் வேரும், திருமுறைகளில் உள்ளன; திருமுறைகளின் தமிழ் – நெகிழ்ந்த தமிழ்; எல்லோரையும் நெகிழ்விக்கும் தமிழ்; அன்புநெறி வளர்க்கும் அருந்தமிழ்; செம்மை நலம் பேணும் செந்தமிழ்; இசை வளர்க்கும் பண்ணார் இன்தமிழ்!" என்றெல்லாம், திருமுறைச் சிறப்பை இம்முன்னுரையில் காணலாம்.

இவற்றை நாளும் ஓதி வழிபடற் பொருட்டு இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நூலில், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் அருளிய பாடல்கள்

இடம்பெற்றுள்ளன. தேவாரம் – 214; திருவாசகம் – முதல் 4 பாடல்கள்.

## திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசர் நவகாரிகை மாலை

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ.)*

'மாலை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள அருணாசல ஈசர் மீது பாடப்பட்டது. நவம் – ஒன்பது. கட்டளைக் கலித்துறை அமையப்பாடுவது 'காரிகை' ஆகும். இந்நூலில், 'காப்பு' – நேரிசை வெண்பாவால் ஆனது – 1 பாடல். அடுத்துக் கட்டளைக் கலித்துறை – 9 பாடல்கள்.

*"நில்லாது காயம் நிலையாது வாழ்விவை நிச்சயமே*
*பொல்லாத புத்தியை யேன்படைத்தாய் புரமூன்றெரித்த*
*வல்லாய்நின் கோயிற் பசுமாடுகள் வயிராற வுண்ணப்*
*புல்லாய்ச் சமைந்திலனே யருணாபுரிப் பூமியிலே!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூல பாடம்!

## திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் பதிகம்

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ.)*

பதிகம் 10 பாடல். திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள அருணாசல ஈசுவரர் மீது பாடப்பட்டது. முதலில் 'காப்பு' வெண்பா – 1; ஆசிரிய விருத்தப் பாக்கள் – 11 ஆக 12 பாடல்கள் உள்ளன.

*"நீயெனது தெய்வமென் றுன்கோயில் வலம்வந்து நேயமொடு கொண்டாடிநன்*
*நினைவோடு பணிபவர்க் கழிவிலாப் பதவியும் நிறைசெல்வமும் கனதையும்*
*தேயுசும் மிக்கவுண் டாயுளும் நூறுண்டு தென்புண்டு வன்பு முண்டு*
*தியானிக்க நினைவுமுண் டிகையுண் டுயர்கல்வி தெளிவுண்டு ஞானமுண்டு*
*வாயுண்டு கவிசொலக் கேட்கவுஞ் செவியுண்டு வாழ்வுண்டு தாழ்வில்லையே*
*வல்லாண்மையுண்டுமிகு நல்லோ ரிணக்கமது மாறாது தாழ்வுறாது*
*ஆயிரா ரோக்யமும் பெருகவருள் வாவிகூ ழருணாசலக் கடவுளே!*
*அரகர மகேசனே! பரமகுரு ஈசனே! அணிஅணா மலைவாசனே!"*

என்பது அவற்றில் ஒன்று! அனைத்தும் மூலபாடம்!

## திருவண்ணாமலை உண்ணாமுலையம்மை வருகைப் பதிகம்

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ)*

பதிகம் – 10. 'வருகை' என்பது பிள்ளைத்தமிழில் ஒரு பருவமாகப் பாடப்படும். ஈண்டுத் திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலையம்மை மீது பாடப்பட்டது.

இந்நூலில் 'காப்பு' – 1 வெண்பா. அடுத்து 'ஆசிரிய விருத்தத்தால் ஆன பாக்கள் – 11; இறுதியில் கட்டளைக் கலித்துறை – 1 பாட்டு. ஆக 13 பாடல்கள்.

*"சீர்கொண்ட வாழிமிசை பள்ளி கொண்ட திருமாலுண் டகமிடை*
*யூர்கொண்ட நான்முகனும் பரந்து வுடைகொண்ட சிந்தையொடுதே*
*டேர்கொண்ட வன்னிமலை நாதர்வாம மிழைகொண்ட மின்னவிடையாய்*
*வார்கொண்ட உண்ணா முலைநாம தேவி வரவேண்டு மென்ற*
*னருகே!"*

என்பது இதில் வரும் முதற்பாட்டு. மூலபாடமே உள்ளது.

## திருவண்ணாமலைக் கார்த்திகைத் தீபவெண்பா

*புராணிகர் சோணாசல முதலியார்*

'வெண்பா' யாப்பினால் பாடப்பட்டது. திருவண்ணாமலையில் நிகழும் 'கார்த்திகைத் தீபத்'தைப் பற்றிய நூல். இந்நூலில், 'காப்பு' – 1; நூல் – 100; 'வாழி' – 1 ஆக 102 பாடல்கள் உள்ளன.

*"கங்கை யணிதீபம் கற்பூர தீபமலை*
*மங்கையொரு பங்கில் வளர்தீபம் – பங்கயன்மால்*
*விண்பாரு நேடும்வண மேவியவண் ணாமலையிற்*
*பண்பாருங் கார்த்திகைத்தீ பம்!"*

என்பது முதற்பாடல். மூலமட்டுமே உள்ளது.

## திருவண்ணாமலை திருவருட்பதிகம்

*திருவருட் பிரகாச வள்ளலார்*

*அ. இரங்கசாமி முதலியார் அன் சன்ஸ் (ப.ஆ.)*

திருவண்ணாமலை இறைவன் மீது பாடப்பட்டது. பதிகம் = 10 பாடல். 'திருவருட்பா' வில் ஒரு பகுதி இது!

*"ஏது செய்திடினும் பொறுத்தருள் புரியு மென்னுயிர்க்கொரு பெருந்துணையே!*
*தீதுசெய் மனத்தார் தம்முடன் சேராச் செயலெனக் களித்த வென்றேவே!*
*வாதுசெய் புலனால் வருந்தல்செய் கின்றேன் வருந்துறா வண்ணமெற் கருளித்*
*தாதுசெய் பவனேத் தருணையங் கோயில் சந்நிதிக்கி யான்வர வருளே!"*

என்பது இவற்றில் ஒன்று. மூலமட்டுமே உள்ளது.

## திருவண்ணாமலைப் பதிகங்கள்

*ஸ்ரீமத் ஞான சித்த சுவாமிகள்*

பதிகம் – 10. திருவண்ணாமலை ஈசன் மீது பாடப்பட்டவை. இந்நூலில் 10 பாடல் கொண்ட 4 பதிகங்கள் உள்ளன. 'திருவருட் சகாயம்' என்ற தலைப்பில் – 3 பதிகம். 'திருவருள் வியப்பு' என்ற தலைப்பில் – 1 பதிகம். அறுசீர், எழுசீர், எண்சீர் விருத்தம், கலிநிலைத்துறை எனும் யாப்பில் அமைந்தவை.

*"திங்கள்செஞ் சடையுமோர்பாற் றிருமுடி துலங்கக் கையிற்*
*கங்கண மிலங்கக் காலிற் கவின்சிலம் பலம்பவன்பர்*
*சங்கரா என நின்றேத்தத் தாயெனக் கிருபை நல்கி*
*அங்கமொன் றானசோதி யணியணா மலையுளானே!"*

என்பது அவற்றில் ஒன்று. அனைத்தும் மூலபாடம்!

## திருவருட்பயன் (வழித்துணை விளக்கவுரை)

*உமாபதி சிவனார்*

*ஆ. ஆனந்தராசன் (உ.ஆ.)*

'திருவருட்பயன்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'நூல்முகம்' உள்ளது. இதில், 'உமாபதிசிவம், சிவப்பிரகாசமும் திருவருட்பயனும், திருவருட்பயன் – பெயர் விளக்கம், சிவநெறித் திருக்குறள், சிறந்தநூல்' எனும் உட்தலைப்புக்கள் உள்ளன.

'சிறப்புப் பாயிரம்' தொடங்கி நூல் முழுமைக்கும் விரிவான விளக்கவுரை உள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் அதற்கேற்ற தலைப்பும் தரப்பட்டுள்ளது.

'வினை நீங்கும் முறைமை' என்ற தலைப்பில் வருவது பின்வரும் பாடல் :–

*"ஏன்றவினை உடலோடு ஏகும்; இடையேறும் வினை*
*தோன்றில் அருளே சுடும்"*

இதற்கு உரையாசிரியர் பின்வருமாறு பொருள் தருகின்றார்:–

"இப் பிறப்பில் நுகர்தற்கு என்று முகந்து கொண்டு வந்த பிராரத்த வினைகள், சீவன் முத்தர்க்கு இவ்வுடம்பு இருக்கும் வரையில் இருந்து, அவரால் பற்றின்றி நுகரப்பட்டு, இவ்வுடம்பு நீங்கும் காலத்து முடித்தொழியும். அவர், பிராரத்த வினையை நுகரும் போது, புதுவினையாகிய 'ஆகாமியம்' தோன்றுமாயின், அதனைத் திருவருளே எரித்து விடும்!"

இதன்பின், இதற்கான விரிவான விளக்கமும் தருகின்றார்.

## திருவருட்பயன் - தெளிவுரை

*உமாபதி சிவாசாரியார்*

*கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ.)*

'திருவருட்பயன்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் ஓர் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. அதில், 'மெய்கண்ட நூல்கள், திருவருட்பயன், நூற்சிறப்பு, நுவலும் பொருள், பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருள் மலநிலை, அருளரு நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்து அருள்நிலை, அணைந்தோர் தன்மை, பொருள் திறன், அணிநலன்கள், நூலாசிரியர், அற்புதச் செயல்கள்' என்னும் உட்தலைப்புக்கள் உள்ளன.

ஒவ்வோர் அதிகாரத் தலைப்பையும் தந்து, அதன் பொருளைக் கூறி, அதன்பின் பாடலும் தெளிவுரையும், விளக்கமுமாக அமைத்துள்ளார் உரையாசிரியர்.

'உயிர் விளக்கம்' என்ற தலைப்பில் வரும் ஒரு பாடல் :-

*"தித்திக்கும் பால்தானும் கைக்கும் திருந்திடும் நாப்*
*பித்தத்தின் தான்தவிர்ந்த பின்"*

இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை:-

"பித்த நோயுடையார்தம் நாக்கிற்குத் தித்திக்கும் பாலும் கசப்பாக இருக்கும்; அப்பித்த நோயினின்றும் நீங்கியபின் நாவிற்கு முன் கசப்பாக இருந்த பால், தித்திக்கத் தக்கதாகத் திருத்திவிடும். அவ்வாறே உயிர், மலஇருள் உற்றிருக்கும் பொழுது, இறைவனது மறைப்பாற்றல் பொழுது (திரோதான சத்தி) கசப்பாக இருக்கும். அம் மல இருள் நீங்கிய பொழுது, அக்கசப்பான மறைப்பாற்றலே இனிக்கும் என்பதாம்.

இது 'ஒட்டணி' யாம். பித்த நோயின்றி நன்கிருக்கும் நாவிற்குப் பாலின் இனிமை நன்கு விளங்குதல் போல, மலப்பிணிப்பின்றி இயல்பிலிருக்கும் உயிர்க்கு இறைவனது அருட்சத்தியின் இனிமை நன்கு விளங்கும் என்பது இதன் கருத்தாகும்!"

– இத்தகைய விளக்கம் இந்நூலின்கண் உண்டு!

## திருவருட்பா - (மூலமும் உரையும்) (முதல் பாகம்) (1-200 செய்யுட்கள்)

*இராமலிங்க அடிகளார்.*

ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ)

'திருவருட்பா விளக்கம்', முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூல் அறிமுகம்' உள்ளது. அடுத்துத் 'திருவருட்பா' மூலபாடம் – உரை – விளக்கம்' என அமைந்துள்ளது. இம்முதல் தொகுதியில் 570 பாடல்களும் உரைவிளக்கங்களும் உள்ளன.

*"மஞ்சட் பூச்சின் மினுக்கி னிளைஞர்கள்*
*மயங்க வேசெயும் வாழ்விழி மாதர்பால்*
*கெஞ்சிக் கொஞ்சி நிறையழிந் துன்னருட்*
*கிச்சை நீத்துக் கிடந்தன னாயினேன்*
*மஞ்சுற் றோங்கும் பொழிற்றணி காசல*
*வள்ள லென்வினை மாற்றுத னீதியே*
*தஞ்சத் தால்வந் தடைந்திடு மன்பர்கள்*
*தம்மைக் காக்கும் தனியருட் குன்றமே!"*

– இது 'புன்மை நினைந்து இரங்கல்' என்ற பகுதியில் வரும் முதற்பாட்டு. இதற்கு முன்னுரையாக உரையாசிரியர் தரும் குறிப்பாவது:

"புன்மை என்பது மேன்மைக்கும் கீழ்மைக்கும் நடுவணதாய தன்மை. தனது அறிவு, சிறிதாகியவழியும் பெரிதாக மதித்து ஒழுகுவது புன்மை உடையோர் செயல். இப் பத்தின்கண், மகளிர்பால் பெறும் சிற்றின்பமே பெரிதென எண்ணியும் அதற்குரியன மொழிந்தும் செய்தும் ஒழுகும் புன்மைத் தன்மை உளதாதலை அறிந்து வருந்துகின்ற வடலூர் வள்ளற் பெருமான், மிக இரங்குகின்றார். புன்மைப் பான்மையை மக்கள் உள்ளத்தில் நிலைபெறச் செய்வது, பொது மகளிரின் செயலாதலின், அதனைப் பாட்டுத் தோறும் எடுத்தோதி அம்மகளிரிடத்தே ஆடவர்க்கு விருப்பின்மை உண்டாகும் பொருட்டு அப் பொதுமகளிரின் குணஞ் செயல்களைப் பாட்டுத்தோறும் விரித்துக் கூறுகின்றார். இம் மகளிரைப் 'பொருட் பெண்டிர்' என்றும், 'வஞ்ச மகளிர்' என்றும், 'கள்ளமாதர்' என்றும் சான்றோர் கூறுவர்.

முன்நாளில் இருந்த அரசுகள் இப்பெண்டிர் இருப்புக்கு இடந்தந்தன. இந்நாளைய அரசு அதற்கு இடந்தராது மக்கள் சமுதாயத்தைத் தூய்மை செய்துவிட்டது!

இனி, இப்பாடலுக்கு இவர் தரும் உரை வருமாறு : –

"மஞ்சள் பூசப்பட்டதாலும், பொற்பால் உளதாகும் அழகொளியாலும் இளைஞர் உள்ளங்களை மயக்கும் ஒளி பொருந்திய கண்களையுடைய மகளிரிடத்துக் கெஞ்சி நின்றும், கொஞ்சிப் பேசியும் நிறையழிந்து உன்னுடைய அருள் நலத்தில் விருப்பம் கொள்ளாமல் கிடந்தவனாகிய நாயினேன், மேகம் தவழ்ந்துலவ உயர்ந்த சோலைகள் நிறைந்த தணிகை மலையில் உள்ள வள்ளலாகிய முருகப் பெருமானே, எளிமையுற்று வந்திடும் அன்பர்களைக் காத்தருளும் ஒப்பற்ற திருவருள் மலை நீ ஆதலால், எனது வினைத் தொடர்பை நீக்குவது உனக்கு நீதியே யாகும்!"

இதற்கு உரையாசிரியர் மேலும் விளக்கம் தருகின்றார். அதில் வரும் ஒரு பகுதி:–

"... இள மகளிரின் கட்பார்வையில் காதலுணர்வைப் பிறப்பிக்கும் காட்சி சிறந்து நிற்பது பற்றி, 'வான்விழி மாதர்' எனக் குறிக்கின்றார். 'நாட்ட மிரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டி உரைக்கும் குறிப்புரையாகும்' (களவு) என்பது தொல்காப்பியம். 'கெஞ்சுதல்', அன்பால் எளிமைப்பட ஒழுகுதல்; அன்பு மிகுதி தோன்ற மென்மொழிகளைப் பன்னிப் பேசுதல் 'கொஞ்சுதல்' ஆகும் ...!"

– இத்தகைய சொற்பொருள் நயங்களைத் தன்பால் கொண்ட ஓர் அரிய நூல் இது. இவ்வாறே பிற தொகுதிகளிலும் காணலாம்!

### திருவருட்பா மூலமும் 'உரையும்'

*இராமலிங்க அடிகளார்*

*ஔவை சு. துரைசாமிப் பிள்ளை (உ.ஆ.)*

'திருவருட்பா' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல் தொடக்கத்தில் 'நூல் அறிமுகம்' உள்ளது. இது, 8 தொகுதிகள் கொண்டது. ஆறு திருமுறைகள் – பாடல் தொகை 5818. பாடல் – உரை – விளக்கம் எனும் முறையில் அமைந்துள்ளது.

*"சீர்கொண்ட தெய்வ வதனங்க ளாறும் திகழ்கடப்பந்*
*தார்கொண்ட பன்னிருதோள்களும் தாமரைத் தாள்களுமோர்*
*கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியுமருட்*
*கார்கொண்ட வண்மைத் தணிகாசலமு மென் கண்ணுற்றதே!"*

என்பது, முதல் திருமுறை – திருத்தணிகைப் பதிகம் – பிரார்த்தனை மாலை என்ற பகுதியில் வரும் முதல் பாட்டு.

இதற்கு உரையாசிரியர் தரும் உரையும் விளக்கமும்:–

"சிறப்புப் பொருந்திய தெய்வ ஒளி திகழும் ஆறு முகங்களும் மணம் கமழும் கடம்பு மாலை கிடந்தொளிரும் பன்னிரண்டு தோள்களும், தாமரை மலர் போன்ற திருவடிகளும், கூர்மையுற்றதொரு வேற்படையும், மயிலாகிய ஊர்தியும், நல்ல கோழிச் சேவல் எழுதிய கொடியும், அருள் உற்ற கருமுகில் தவழ்வதால் வளமை பொருந்திய தணிகை மலையும் என் கண்ணிற் காணக் காட்சி தருகின்றன!"

இனி இதன் விளக்கமாக,

"சண்முகத் தெய்வமாதலால், முருகன் திருமுகங்களைத் 'தெய்வ வதனங்கள்' என்றும்; இயல்பிலேயே சிறப்புடையனவாதல் பற்றி, 'சீர் கொண்ட' என்றும் சிறப்பித்துக் கூறுகின்றார் பிரார்த்தனை மேற்கொண்டு சொன்மாலை தொடுக்கின்றாராதலின், மங்கலச் சொல்லால் தொடங்கும் மரபு பற்றிச் 'சீர்கொண்ட' என எடுக்கின்றார் எனினும் அமையும் ...!"

– இன்னும் விளக்கம் உண்டு. இத்தகைய அரிய விளக்கங்கொண்ட உயர்ந்த உரை நூல் இது!

### திருவருட்பா - இங்கிதமாலை

*இராமலிங்க அடிகளார்*

க.வ. திருவேங்கடநாயுடு (உ.ஆ.)

'திருவருட்பா' - நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'முகவுரை' உள்ளது. அதில், உரையாசிரியர்,

"இங்கீதம் என்பது, தாருகவனமுனிவர், மகளிரின் கருவபங்க நிமித்தம், சிவபெருமான் கொண்ட பிச்சாடன மூர்த்தத்தை நோக்கி, அத்தவமங்கையர், தவமயங்கினராய் உள்ளுறையோடு வினாய வினாக்களுக்கு அப்பெருமான் மெய்ப்பாடாகவும் உரையாகவும் விடுத்த விடைகளின் மேலது. இது, காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழப்பு, வியப்பு, சாந்தம் என்னும் பொருட்சுவை ஒன்பானுள் காமச்சுவையை வெளிப்படையாகக் காட்டுவதாயினும், ஏனைச் சுவைகளையும் குறிப்பிற் பெரிதும் காட்டுகின்ற துய்த்துணர்க!" என அரிய விளக்கம் தருகின்றார்.

இஃது காப்புச் செய்யுள் தவிர, 165 பாடல்கள் கொண்டது.

முதலில் பாடல்; அடுத்துப் 'பொருள்'; பின்பு 'விளக்கக்குறிப்பு' என அமைந்துள்ளது.

*"திருவார் கமலத் தடப்பணைசூழ் செல்வப்பெருஞ்சீ ரொற்றியில்யாழ்*
*மருவார் கொன்றைச் சடைமுடிகொள் வள்ளலிவர்க்குப் பலிகொடுநா*
*னொருவா தடைந்தே னினிநமக்கிங் குதவவருந் தோறுன்முலைமே*
*லிருவா ரிடுநீ யென்கின்றா ரிதுதான்சேடி யென்னேடீ!"*

இதற்கு உரையாசிரியர் தரும் உரை:-

"இலக்குமி குடிகொள்ளும் செந்தாமரை மலர்கள் செறிந்த தடாகங்களும் வயல்களும் சூழ்ந்ததாய்ச் செல்வத்தோடு பெரும்புகழ் படைத்த திருவொற்றியூரில் வாழ்கின்ற, மணம் நிரம்பிய கொன்றைமாலிகை அணிந்த சடாமகுடத்தையுடைய கடவுளாகிய இத் தியாகேசப் பெருமானுக்கு (இடுதற் பொருட்டு) பிச்சையைக் கொண்டு, யான் அகலாது அணுகினன்; இனிமேல் எமக்கு ஈண்டு அன்னமளிக்க வரும் பொழுதெல்லாம், உனது தனங்களில் இருவாரை நீ இடுவாய் எனக் கூறுகின்றனர். அடி தோழியே, இவ்வாறுரைப்பதன் பொருள் என்னை?"

இவ்வாறு எழுதும் உரைகாரர், இலக்கணக்குறிப்பு, மற்றும் விளக்கமும் தருகின்றார்.

### திருவருட்பா : இங்கித மாலை (உரை)

*இராமலிங்க அடிகளார்*

உரை(?)

'திருவருட்பா' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின்

தொடக்கத்தில் 'காப்பு'ச் செய்யுள் 1 உள்ளது. தொடக்கத்தில், 'பாடாண் திணை' கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' என்று தலைப்புக் கொடுத்துப் பாடலும், பொருளும், குறிப்பும் தரப்பட்டுள்ளன.

*"திருவார் கமலத் தடம்பணை சூழ் செல்வப் பெருஞ்சீர் ஒற்றியில் வாழ்"*

என்று தொடங்கும் பாடலுக்கு இவ்உரையாசிரியர் தரும் பொருளின் தொகுப்பு :–

"அழகு நிறைந்த தாமரைத் தடாகங்களும், வயல்களும், சூழப் பெற்ற செல்வத்தால், பெருஞ் சிறப்பையுடைய திருவொற்றியூரில் வாழ்கின்ற மணம் பொருந்திய கொன்றை மலர்மாலையைத் தரித்த சடாமகுடத்தைக் கொண்ட வள்ளலாகிய இவருக்குப் பிச்சையை எடுத்துக்கொண்டு நான் நீங்காமல் கிட்டினேன். (இவர் என்னை நோக்கிப் 'பெண்ணே'!) இனிமேல் எமக்கு, இவ்விடத்தில் அன்னமிட வரும்போதெல்லாம், உன் தனங்களின்மீது நீ இரண்டு வார் அணியக்கடவை! என்று சொல்லுகிறார். தோழி, இது என்னேடீ!"

தான் – அசை; 'ஒருவாதடைந்தேன் நீ யிருவாரிடு என்கின்றார்' என்பதற்கு, 'ஒரு வம்பு செய்தேன். அதற்கு இவர் இரண்டு வம்பு செய்' என்று சொல்லுகின்றார் என்று அசதியாடுதற் பொருளதாகிய சொன்னயம் தோன்றுமாறு காண்க. வார் – வம்பு (சண்டை); 'உன் முலைமே லிடுவாரிடு' என்பதற்கு 'உனது கற்பில் பிறழா திரு. உனது தனங்களுக்குக் கச்சணி' என்றும், 'முல்லையரும்பை பெயர்த்த அன்னமிடு, சுகமாயிரு' என்றும் பொருள் தோன்றுதல் காண்க. இவ் இரண்டு அர்த்தத்தில், முன்னதற்கு 'முல்லை' என்பது 'இடைக்குறையாய்' 'முலை' என்றாயதென்றும் (முல்லை – கற்பு) பின்னதற்கு முல்லை உவமையாகு பெயரென்றும் கொள்க!"

– இத்தகைய அரிய விளக்கம் தரும் நூல்.

## திருவருட்பா – திருவமுதத் திரட்டு

*இராமலிங்க அடிகளார்*

நா. கிரிதாரி பிரசாத் (தொ. ஆ.)

'திருவருட்பா' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'பதிப்புரை' உள்ளது. 'சற்குருவணக்கம்' முதல் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம்' வரை 21 தலைப்புக்கள் உள்ளன. நூலின் இறுதியில், யோகி வேதாத்திரி மகரிஷி, தவத்திரு சச்சிதானந்த சுவாமிகள், தவத்திரு சுவாமி சரவணானந்தா, தவத்திரு ஊரன் அடிகளார், டி.ஆர். துளசிராம், ஔவை துரைசாமிப் பிள்ளை ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் உள்ளது.

இதில், திருவருட்பா – 6 திருமுறைகளிலிருந்தும் சிற்சில பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

"தேன்என இனிக்கும் திருவருட்கடலே!
தெள்ளிய அமுதமே! சிவமே!
வான் என நிற்கும் தெய்வமே! முல்லை
வாயில் வாழ் மாசிலா மணியே!
ஊன் என நின்ற உணர்விலேன் எனினும்
உன்திருக் கோயில்வந் தடைந்தால்
ஏன்எனக் கேளா திருந்தனை ஐயா!
ஈதுநின் திருவருட் கியல்போ?"

என்பது 23ம் திருமுறையில் இடம் பெற்ற பாடல்!

**திருவருட்பா (மூலமும் உரையும்) - பகுதி 1**

இராமலிங்க அடிகளார்.

அ. மாணிக்கம் (உ.ஆ)

'திருவருட்பா' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

திருவருட்பா – 6 திருமுறைகள் கொண்டது. முறை – பகுப்பு. முதல் திருமுறையில் 'தெய்வ மணிமாலை' தொடங்கித் 'தனித்திருத்தொடை' முடிய 52 பதிகங்கள்; 570 பாடல்கள் – இவை முருகப் பெருமான் மீது பாடியவை. இரண்டாம் திருமுறையில் 'கருணை விண்ணப்பம்' முதல் 'இரேணுகை பஞ்சகம்' முடிய 103 பதிகங்கள் – 1388 பாடல்கள். மூன்றாம் திருமுறையில் 'திருவடிப் புகழ்ச்சி' முதல் 'மங்களம்' வரை – 27 பதிகங்கள்; 612 பாடல்கள். நான்காம் திருமுறையில் 'குஞ்சித பாதப் பதிகம்' முதல் 'அருள் நிலை விளக்கம்' வரை 41 தலைப்புக்கள் – 458 பாடல்கள்; ஐந்தாம் திருமுறையில் 'அன்புமாலை' முதல் 'ஆளுடைய அடிகள் அருள் மாலை' வரை – 12 மாலை; 238 பாடல். ஆறாம் திருமுறையில் 'பரசிவம்' முதல் 'சத்திய அறிவிப்பு' வரை 144 பதிகங்கள்; 2552 பாடல்கள் மேலும் இத்திருமுறையில், 1596 அடிகள் கொண்ட 'அருட்பெருஞ்சோதி அகவல்' உள்ளது.

இம்முதல் தொகுதியில், (1) தெய்வ மணிமாலை 'சென்னைக் கந்த கோட்டம்' முதல் 2ஆம் திருமுறையில் உள்ள 'கொடி விண்ணப்பம்' முடிய 1192 பாக்கம் – மூலம், பொழிப்புரை இடம் பெற்றுள்ளன.

". . . . காமவுட் பகைவனும் கோபவெங் கொடியனும்
கனலோப முழு மூடனும்
கடுமோக வீணனும் கொடுமதமெ னும்துட்ட
கண்கெட்ட ஆங்காரியும் . . .
சண்முகத் தெய்வ மணியே!"

என்பது முதல் திருமுறை, சென்னை கந்த கோட்டப் பதிகப் பாடல். இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை :–

“ஒளி விளங்கும் சென்னையம்பதியில் கந்த கோட்டத்துள் விளங்கும் கோயிலுள் வீற்றிருக்கும் முருகப் பெருமானே! குளிர்ந்த ஒளி விளங்கும் தூய்மையான மணிகளுள் சிறந்த சிவந்த சைவ மணியான ஆறுமுகம் கொண்ட தெய்வமான மணியே! நன்மை மிக்க பெரிய மறைகளில் ‘ஓம்’ என வழங்கும் அருள்மொழியின் பொருட்கூறுகளைப் பொதிய மலையில் உள்ள அகத்திய முனிவர்க்கு அருளி, அவர் சிந்தனையில் வைத்து வழிபாட்டுக்குரிய ஆசாரியர்க்கு முடி மணியான பெருமானே! காமம் என்ற உட்பகைவனும், சினம் என்ற கொடியவனும், மிக்க லோபம் என்னும் முழுமூடனும், கொடிய மதம் எனப்படும் துட்டத் தனமும், குருட்டுத் தன்மையுடைய ஆங்கார உருவினனும், காவல் அற்ற மாற்சரியம் என்ற வீணானவனும், கொலை எனப்படும் பாதகனும் என்ற இந்த ஏழுபேர்களும் இவர்கட்கு உறவானவர்களும் என்னைச் சூழ்ந்து கைப்பற்றிக் கொள்ளாமல் இருக்க அருள் செய்வாய்!”

– இவ்வாறே 6 திருமுறைகட்கும் உரையுடன் கூடிய நூல் இது!

### திருவருட்பா (9ஆம் புத்தகம்) 5ஆம் திருமுறை அல்லது திருத்தணிகைப் பகுதி

இராமலிங்க அடிகளார்

ஆ. பாலகிருஷ்ண பிள்ளை (ப.ஆ)

‘திருவருட்பா’ விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இதில் 54 பதிகங்கள் – 2 இசை உருக்கள்; 577 பாடல்கள்; 27 இசைக் கூறுகள்; 246 குறிப்புக்கள் உள்ளன. நூலின் தொடக்கத்தில் ‘பாயிரம்’ உள்ளது. இதில் இப்பகுதியின் பொருட்சிறப்பு, செய்யுள் நயம், பயன் முதலியன சொல்லப்பட்டுள்ளன. அடுத்து ‘வாயுறை வாழ்த்து’ இடம்பெற்றுள்ளது. இதில் அ. வரதநஞ்சையபிள்ளை பாடல்கள் (19) வ. சு. செங்கல்வராய பிள்ளை ஆசி முதலியன உள்ளன.

அடுத்துத் திருவருட்பா – மூலம்; சிற்சில இடங்களில் அடிக்குறிப்பு.

“சொல்லும் பொருளும் ஆய்நிறைந்த சுகமே அன்பர் துதிதுணையே!
புல்லும் புகழ்சேர் நல்தணிகைப் பொருப்பின் மருந்தே! பூரணமே
அல்லும் பகலும் நின்நாமம் அந்தோ நினைந்துன் ஆளாகேன்
கல்லும் பொருவா வன்மனத்தால் கலங்கா நின்றேன் கடையேனே!”

என்பது ‘மருள்மாலை விண்ணப்பத்’தில் வரும் முதற்பாடல்.

– இவ்வாறு மூலபாடம் மட்டுமே உள்ளது.

### திருவருணைக் கலம்பகம்

சைவ எல்லப்ப நாவலர்.

‘கலம்பகம்’ விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. ‘திருவருணை’ என்பது ‘திருவண்ணாமலை’. ஆங்கு எழுந்தருளிய இறைவன் மீது பாடப்பட்டது. கலம்பகத்துக்குரிய உறுப்புக்கள் கொண்டது. காப்பு – 1 தவிர, 100 பாடல்கள் கொண்டது.

"சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள் வாய்
மைவைத்த சீர்திருத் தேவார முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே!"

என்பது முதற்பாடல். மூல மட்டுமே உள்ளது!

## திருவருணைக் கலிவெண்பா

புராணிகர் சோணாசல முதலியார்.

'கலிவெண்பா' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

'திருவருணை' என்பது 'திருவண்ணாமலை'. ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது.

இந்நூலில் 31 கண்ணிகள் உள்ளன.

"கார்பூத்த மாலுங் கருமாவாய் காணரிய
பார்பூத்த சீரடியும் பங்கயத் தோ – னேர்பூத்த
. . . . . ."

என்று தொடங்குவது. மூலமட்டுமே உள்ளது.

## திருவருணைத் தனிவெண்பா

குகை நமச்சிவாய தேவர்.

'திருவருணை' என்பது 'திருவண்ணாமலை'. ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்ட தனித்தனி வெண்பாக்கள். இதில் 35 வெண்பாக்கள் உள்ளன.

"சொன்னந் தருகுருவே! சோணா சலத்தானே!
இன்னம் பிறந்தாலு மிப்படிநின் – சன்னிதியை
நாடக் கிடைத்திடுமோ நன்னெஞ்சே நாமவரைக்
கூடக் கிடைத்திடுமோ கூறு!"

என்பது முதற்பாடல். மூல மட்டுமே உள்ளது!

## திருவருணையந்தாதி

சைவ எல்லப்ப நாவலர்.

'அந்தாதி' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'திருவருணை' என்பது 'திருவண்ணாமலை'. ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பட்டது.

இதில், 'காப்பு' – 2 தவிர 100 பாடல்கள் உள்ளன. அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது. 'பூ' என்று தொடங்கி, இறுதிப்பாடல் 'பூ மன்னனே' என முடிவதால் 'மண்டலித்தல்' எனப்படும்.

"பூமன் றலைமை யளிகூ ழுருணையிற் புங்கவனார்
மாமன் றலைமை யடுந்தலை யாகவரங் கொடுத்தார்
காமன் றலைமையற வழலாக்கிய கண்ணர் விண்ணோர்
தாமன் றலைமையக் கந்தீரநஞ் சரித்தனரே!"

என்பது இதன் முதற்பாடல். அனைத்தும் மூலபாடங்கள்.

## திருவாசகமும் திருக்கோவையார் செய்யுட்டிரட்டும்

(குறிப்புரையும் விஷய சூசனமும். 250 வேதப் பிரமாணங்களுடன்)

மாணிக்கவாசகர்

ஸ்ரீலஸ்ரீ சிவ அருணகிரி முதலியார் (உ.ஆ.)

திருவாசகத்தைப் பற்றிய விளக்கம், இந்நூலின் முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. 'மாணிக்க வாசக சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்'; அடுத்து 'மாணிக்க வாசக சுவாமிகள் புராண சாரம்' (5 பாடல்கள்); 'திருவாசகப் பெருமை' (9 பாடல்கள்), 'திருவாசக உண்மை' – சிவபுராணம் முதல் 'அச்சோப்பதிகம்' வரை 24 பாடல்கள்; 'திருப்பதிகங்களின் பெயரும் தொகையும்' (3 பாடல்கள்); 'நூலின் திருநாமங்கள்' (8); 'சுவாமிகள் திருநாமங்கள்' (6); 'நூற் சிறப்பு' (1 பாட்டு) என்பன நூலின் தொடக்கத்தில் உள்ளன. அடுத்துத் 'திருவாசகம்' மூலத்தைக் கொடுத்து, அடிக்குறிப்பாக இன்றியமையாத சொற்களுக்குமட்டும் பதவுரை தரப்பட்டுள்ளது.

'திருவெம்பாவை'யை விளக்கவந்த இவ் உரையாசிரியர், பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

"திருவெம்பாவையின் பாராயண காலம் : தினந்தோறும் சூரியன் உதித்த ஐந்து நாழிகைக்கு முன்னாவது, இரண்டரை நாழிகைக்கு முன்னாவது, ஒன்றேமுக்கால் நாழிகைக்கு முன்னாவது நித்திரை விட்டெழுந்து, புறத்தே சென்று இயன்றவளவு சுத்தி செய்து கொண்டு, வடக்கு முகமாகவேனும் கிழக்குமுகமாகவேனும் இருந்து விபூதியை நெற்றியில் தரித்துக் கொண்டு, கணபதியையும் குருவையும் நமஸ்கரித்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் சத்தியாநுசாரம் ஜபித்து, மிக்க சிரத்தா பக்தியோடு இதைப் பாராயணஞ் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்ய அநுகூலப்படாதாயின், மார்கழி மாதத்திலாவது அவசியஞ் செய்யவேண்டும். அங்ஙனம் செய்வோர் சிவபெருமானது கிருபா கடாக்ஷத்துக்குப் பாத்திரராய், திருவருள்ஞானம் பெறுவரென்பது திண்ணம். ஒவ்வொருநாளும் விடியற்காலம் இருபத்தைந்து நாழிகை முதல் முப்பது நாழிகை வரையில் தேவகால மாதலால் அக்காலம் 'ப்ராம்ஹீ' முகூர்த்தம் எனப் பெயர் பெறும். அக்காலம் சிவத்தியானத்துக்கு மனந்தெளியுங்காலம். அக்காலத்தில் விழித்திருக்கின் நோய்களும் அணுக அஞ்சும். சிவனா ராணையுமிது!

இந்நூலில் 2ஆவது பகுதியாக வருவது, 'திருக்கோவையார் செய்யுட்டிரட்டு'. இதில், 'நூற்சிறப்பு' நீங்கலாக 12 பாடல்கள் உள்ளன.

இறுதியில், 'திருவாசக விஷய சூசனம் – அறுபது' (250 வேதப் பிரமாணங்களுடன்) தரப்பட்டுள்ளது. அதில் வரும் ஒரு குறிப்பு:–

"ஆகமமாகி. ஆகமம் – ஆப்த வாக்கியம். ஆ – ஞானம்; க – மோட்சம்; ம – மலநாசம். எனவே ஆன்மாக்களுக்கு மலத்தை நாசஞ்செய்து, ஞானத்தை யுதிப்பித்து யோட்சத்தைத் தருதல் எனப் பொருள் படும். அன்றியும், ஆ – பாசம்; க – பசு; ம – பதி எனப் பொருள்பட்டுத் தன்னைப் பழகினோர்க்குத் திரிபதார்த்த லட்சணத்தை உணர்த்துவது எனவும் பொருள் கொள்ளப்படும். இத்தகைய அரிய பொருள் நயங்களை இந்நூலில் காணலாம்.

## திருவாசகம் (பொழிப்புரை, விளக்கக் குறிப்புரை)

மாணிக்க வாசக சுவாமிகள்

சி. அருணை வடிவேலு முதலியார் (வி.கு.)

எம். சிவச்சந்திரன் (பொ. உ)

'திருவாசகம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது. அடுத்து 'ஆசியுரை', 'பதிப்புரை' 'அணிந்துரை', 'குறிப்புரை மாட்சி', 'திருவாசகம் – ஆராய்ச்சியுரை' ஆகியன உள்ளன. பின்பு, 'தல அட்டவணை' தலமும் பதிகமும்' என்பதில், 46 தலங்கள் – பதிக எண்கள் தரப்பட்டுள்ளன. 'மாணிக்க வாசகர் வரலாறு' அகச் சான்றுகளுடன் தரப்பட்டுள்ளது. 'சிறப்புக் குறிப்புக்கள்' என்ற தலைப்பில், 'அடி முடி தேடியது' முதல் 'வேலம்புத்தூரில் விட்டேறு அருளியது' வரை 45 குறிப்புக்கள் உள்ளன. 'திருவாசகப் பதிகத் தொகை' என்ற தலைப்பில் 3 பாடல்கள் உள்ளன. அடுத்து 'நூற் சிறப்பு' என்ற தலைப்பில்,

"கடவுட்டன்மையை, 'திரு' என்றல் சமயங்களின் மரபாதலின் 'திருவாசகம்' என்பது 'கடவுட்டன்மையையுடைய சொல்' என்னும் பொருளதாம். அஃது அடையடுத்த கருவியாகு பெயராய், அச்சொற்களாலாகிய பாட்டுக்களைக் குறித்தது. திருவாதவூரடிகள் இறைவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, 'புறம், அகம்' என்னும் இருதிணை வகையிலும் அருளிச் செய்த பாட்டுக்களுள் அகத்திணை வகையால் அமைந்த பாட்டுக்கள் 'கோவை' என்னும் பெயருடைய தொடர்நிலைச் செய்யுளாய் அமைந்திருத்தலின், புறத்தினை வகையில் அமைந்த பாட்டுக்களை, 'திருவாசகம்' என வேறொரு குறியிட்டு வழங்கினர் முன்னோர்!" என்ற செய்தி சொல்லப்பட்டுள்ளது.

அடுத்துச் 'சிவபுராணம்' முதல் 'அச்சோப்பதிகம்' வரை 658 பாடல்கள் : மூலமும் பொழிப்புரையும் குறிப்புரையுமாக அமைந்துள்ளது.

''முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
அத்தன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே!''

– இது, இறுதி 'அச்சோப் பதிகத்'தின் முதற்பாடல்.

இதன் முன்னுரையில், 'அநுபவ வழி அறியாமை' எனும் தலைப்பிட்டுப் பின்வரும் குறிப்புச் சொல்லப்பட்டுள்ளது:

''அக்கோ என்னும் முடிபினையுடைய பத்துப் பாடல்களின் தொகுதி 'அச்சோப்பதிகம்'. 'அச்சோ' என்பது வியப்பிடைச் சொல். முன்வந்த அதிசயப்பத்து, அற்புதப் பத்துக்களில் இறைவனது திருவருளின் பெருமையே கூறினார். இதன்கண் தாம்பெற்ற பேறு, பலர்க்குப் பெறுதற்கரிதாதலையே கூறுகின்றார். இதனையே பிறிதோராற்றால் 'அநுபவ வழி அறியாமை' எனக் குறித்தனர் முன்னோர். அஃதாவது 'தமக்குக் கிடைத்த ஆனந்தத்தை அனுபவிக்க வழி அறியாமை' என்றனர். 'அனுபவிப்பார் ஒருவரையும் காணாமையின், அனுபவிக்கும் வழியை அறிந்திலர்' என்றனர். இதன்கண் உள்ள பாடலைக் 'கலிவிருத்தம்' என்றனர். எனினும் 'நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா' என்றலே பொருத்தமுடையதாம். இதன்கண் ஒன்பது திருப்பாட்டுக்களே உள்ளன. மற்றொரு பாட்டுப் பிற்காலத்தில் ஓர் ஏட்டில், காணப்பட்டது எனக் காட்டினார் உளர்!''

மேலே காட்டிய பாடலின் பொழிப்புரையாக உரையாசிரியர் காட்டுவது :–

''முத்திவழியை அறியாத மூர்க்கரொடு கூடி, அவர் வழியில் முயல்கின்ற எனக்குப் பத்தி வழியை அறிவித்து, என் பழவினைகள் ஓடும்படி மனமாசு அகற்றிச் சிவ வடிவமாக்கி என்னை ஆண்டருளினன், எமது தந்தையாகிய சிவபெருமான். அப்பெருமான் அருள் செய்த பேற்றைப் பெறவல்லவர் வேறு யாவர்!''

இதன்பின் வரும் குறிப்புரை:–

''முயலுதல் – செயல் செய்தல். மூர்க்கரோடு சேர்ந்து செய்யும் செயல் தீதாம் என்பது சொல்ல வேண்டா! பாறும் வண்ணம் – அழியும்படி; சித்தம் – உள்ளம்; என்றது அறிவை. 'தானாக்கி' என்பதனை, 'சிவமாக்கி' என்றார். ஆளுதல் – தன் இன்பத்தை நுகரச் செய்தல். 'அருளிய முறைமையை இவ்வுலகில் யார் பெறுவார்' என்க. அச்சோ – இது வியப்பு!''

– இவை போன்ற அரிய, நுட்பமான விளக்கங்களைக் கூறும் நூல்.

### திருவாசகம் (பதிக விளக்கத்துடன்)

மாணிக்கவாசகர்

ஆ. ஆனந்தராசன் (ப.ஆ)

திருவாசகம் – விளக்கம், இந்நூலின் முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் 'மாணிக்க வாசகர் வரலாறு' தரப்பட்டுள்ளது.

திருவாசகம் – மூல பாடத்தையடுத்து, அப்பதிகக் கருத்துக்களைச் சுருக்கமாக உரைக்கின்றார் பதிப்பாசிரியர். 'நீத்தல் விண்ணப்பம்' என்ற பகுதியில் வரும் ஒரு விளக்கம்:–

"நிறைந்த நீரிலே நின்று கொண்டு, நீர் வேட்கையால் நாவறண்டு வருந்துவார் போல, உனது அருளைப் பெற்றும் துன்பத்தினின்றும் விடுபடாமல் இருக்கின்றேன் என்று தனது நிலையைச் சுட்டுகிறார் அடிகள். 'வெள்ளத்துள் நாவற்றியாங்கு' என்ற இவ்வுவமையைப் பின்வந்த உமாபதி சிவம், 'திருவருட்பயன்' என்ற தமது சாத்திரநூலில் எடுத்துப் பயன்படுத்துகிறார். அடிகள், தம் நிலைக்குச் சொன்ன இவ்வுவமையை உமாபதி சிவம், பொதுமைப்படுத்தி, உலகவுயிர்களுக்குப் பொருத்திக் கூறுகிறார். உயிர்கள், நிறைந்த திருவருள் இன்பத்துள் நின்றும், அதனை நுகராமல் ஆணவ மலத்தொடர்பினால் அதனை மறந்து துயருறுகின்றனவே என்பது அவர் கூற்று!"

ஆங்காங்கே இத்தகு அரிய விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## திருவாசகம் (விளக்கவுரை)

மாணிக்க வாசகர்

ப. இராமநாதபிள்ளை (உ.ஆ)

'திருவாசகம்', விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. இதில் திருவாசகம் ஒவ்வொரு பகுதியைப் பற்றியும் விளக்கம் தரப்பட்டுள்ளது.

'பாட்டு, பொழிப்புரை, விளக்கம்' என்று அமைந்துள்ளது. 'திருவாசகம், திருச்சதகத்'தில் 'காருணியத் திரங்கல்' என்ற பகுதி உண்டு. இதற்கு உரையாசிரியர் பின்வருமாறு விளக்கம் தருகின்றார்:

" 'காருணியத் திரங்கல்' என்பது, திருவருள் வீழ்ச்சியாகிய திருவருட்பேறு கருதி உளங்கனிந்து இறங்குதலென்பதாகும். பாசநீக்கமும் சிவப்பேறும் புறத்துறையும் அகத்துறையும் போன்ற நிகழ்ச்சிகளாகும். பெரும்பான்மை பற்றிச் செந்தமிழ் மறைமுடியாம் சீரிய திருவாசகம், பாசநீக்கமெனவும்; திருச்சிற்றம்பலக் கோவையார் சிவப்பேறு எனவும் கூறுதல் அமைவுடைத்தாகும். காருணியம் – திருவருள். பாசநீக்கத்தின் பின்னரும், சிவப்பேற்றுக்கு முன்னரும் வேண்டற்பாலது இத் திருவருள் வீழ்ச்சி. இத்திருவருள் வீழ்ச்சியாகிய அருட் பேற்றைத் திருவுள்ளங் கொண்டே அடிகள் 'போற்றி' என்னும் பொருள் சேர் மறைமொழியினைத் திருப்பாடல் தோறும் பன்முறை யோதிப்

போற்றியருள்வாராயினர். இப் 'பேற்றி' என்னும் செந்தமிழ்த் திருமுறைக்குக் 'காத்தருள்க, வணக்கம்' என்னும் இரு பொருளும் பொருந்துமிடநோக்கிக் கொள்ளப்படும். அடிகள் ஆண்டவனை மன்றாடி வேண்டும் திருக்குறிப்புக்கள் பாட்டுகடோறும் பரவியுள்ளதையும் காணலாம்!"

– இவ்வாறு முன்னுரை கூறியபின், பாடலும், பாடலுக்குப் பொழிப்புரையும் விளக்கமும் தருகின்றார்:–

"தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள்
விடலையே போற்றி ஒப்பில்
ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி!"

இதற்கு இவ்உரையாசிரியர் தரும் பொழிப்புரையும் விளக்கமும்:

"இவ் ஊன் உடலோடு கூடிய வாழ்க்கையைப் பொறேன். இன்ப வடிவனாய் நின்று, என்றும் பொன்றா இன்பம் செய்தருளுபவனே காத்தருள்க! நுண்ணிய அறிவுப் பெருவெளியில் விளங்கும் மூத்தோனே! காத்தருள்க! எளியேங்களுடைய உரவோனே காத்தருள்க!

ஒப்பற்ற தனிமுதல்வனே காத்தருள்க! தில்லை நகரில் திருக்கூத்தியற்றும் கூத்தப் பெருமானே காத்தருள்க! எளியேங்களின் தூயோனே காத்தருள்க! காத்தருள்க!

போற்றி – காத்தருள்க. இகர ஈற்று வியங்கோள்!

இதன்கண் விளிகள் ஏழும் போற்றி எட்டும் காணப்படுகின்றன. இவை முறையே சிவபெருமானின் எழுவகை ஆற்றல்களையும் எண்பெருங்குணங்களையும் குறிக்கும் குறிப்பாகும். அறிவுப் பெருவெளி – திருவருணம்பலம். இதுவே திருச்சிற்றம்பலம்!

– இத்தகைய அரிய விளக்கமுள்ள ஒருநூல்!

### திருவாசகம்

(ஒப்புள்ள உபநிஷத் மந்த்ரங்கள் இணைக்கப்பெற்றுள்ளன.)

மாணிக்கவாசகர்

சுவாமி சித்பவானந்தர் (வி.உ) .

திருவாசகத்தைப் பற்றிய விளக்கம், இந்நூலின் முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. முதற்கண், 'திருவாசகம் – முகவுரை' எனும் பகுதி உள்ளது. இதில்,

(1) வாதவூரார் வரலாறு; (2) நூல் அமைப்பு; (3) தத்துவ விளக்கம்; (4)மாயாதத்துவம்; (5) மும்மலம் (6) சமயங்களின் தோற்றம்; (7) சமயங்களின் சமரசம்; (8) வடமொழியும் தென் மொழியும்; (9) மஹாபாவ; (10) நாரத பக்தி சூத்ரங்கள்; (11) வேள்வி; (12) தவம்; (13) அதிசயச் செயல்கள்; (14) வேதங்கள்; (15) தர்சனங்கள்; (16) ஆறு சமயங்கள்; (17) இதிகாசங்கள்; (18) புராணங்கள்; (19) ஜைனமதம்; (20) புத்தமதம்; (21) புராணக்கதைகள் எனும் உட்பிரிவுகளில் விரிவான செய்திகள் சொல்லப்படுகின்றன.

"பிண்டமாகிய ஒரு ஜீவனிடத்து அடங்கியுள்ள தெய்வப் பெற்றியாவையும் திருவாசகம் விளக்குகிறது. அறிய வேண்டிய எந்தப் பகுதியையும் அது புறக்கணித்து விடவில்லை. தத்துவ ஆராய்ச்சிக்கு அது சிறந்ததொரு நூலாக வாய்த்திருக்கிறது. . . . இடைக்காலத்தில் தோன்றிய ரிஷிகளில் ஒருவர் மாணிக்கவாசகர். தமது சாதன வகைகளையும் அனுபூதியின் படித்தரங்களையும் அவர் நன்கு விளக்கியிருக்கிறார். அவருடைய கூற்றுக்களை உபநிஷதங்களின் கூற்றுக்களோடு ஒப்பிட்டு ஆராய்வது சிறந்ததொரு ஆராய்ச்சியாகும்!" என்று 'தத்துவ விளக்கம்' என்ற பகுதியில் உரையாசிரியர் குறிப்பிடுகின்றார்.

இந்நூலில், திருவாசகப் பாடல் அடிகளைத் தனித்தனியே கொடுத்துப் பொழிப்புரை கூறியபின் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றார் உரையாசிரியர். மூல பாடத்தைப் பிரிக்காமல் உள்ளவாறே எழுதி, அதன்பின் பொருள் புரிவதற்காகப் பிரித்துக் காட்டுகின்றார்.

*"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க!"*

என்பது சிவபுராணத்தின் முதல் அடி. இதற்கு இவர் தரும் விளக்கத்தின் ஒருபகுதி:–

"யஜுர் வேதத்துக்கு நடுநாயகம் வகிப்பது ஸ்ரீ ருத்திரம். இந்த ஸ்ரீருத்ரத்தில் நடுநாயகம் வகிப்பது நமசிவாய என்னும் மந்த்ரம். இதை இடையறாது உச்சரிப்பவர் சிவ சொரூபம் ஆகின்றனர். வேதம் ஓதுவதும் ஸ்ரீருத்திரம் ஓதுவதும் எல்லார்க்கும் சாத்தியமன்று! அதற்கு அதிகாரிகள் ஆவது மிக கஷ்டம். எல்லாரும் அதிகாரிகள் ஆவதுமில்லை! ஆனால் நமசிவாயவென்று நவிலுவது மிக எளிது. அது, யார்க்கும் இயலும். அது எல்லார்க்கும் பொது; எல்லார்க்கும் சொந்தம். தீக்ஷை பெற்றுக் கொண்டும் அதைப் பகரலாம்; தீக்ஷை பெறாதும் பகரலாம். தாயைக் கூவியழைக்கச் சேய்க்கு உரிமையுண்டு. அதற்குத் தீக்ஷை தேவையில்லை! அங்ஙனம் இறைவனை அவனுடைய மந்த்ரத்தைக் கொண்டு கூவியழைக்க உயிர்களுக்கு உரிமையுண்டு!"

என்பன போன்ற விளக்கங்கள் கொண்ட ஓர் அரிய விளக்கவுரை நூல்.

## திருவாசகம் மூலமும் உரையும்

*மாணிக்க வாசகர்*

கா. சுப்பிரமணிய பிள்ளை (உ.ஆ.)

சைவத் திருமுறை பன்னிரண்டில் 8 ஆவது திருமுறையைச் சார்ந்தது. இந்நூலினைப் பற்றிய விளக்கம்' முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது.

நூலின் தொடக்கத்தில் 'தோற்றுவாய்' அமைந்துள்ளது. இதில், மாணிக்கவாசகர், எந்தெந்தத் தலத்தில் என்னென்ன பாடல்களைப் பாடினார் என்ற விவரம் உள்ளது. அடுத்துத் 'திருவாசகப் பெருமை' என்ற தலைப்பில் 9 பாக்கள் இடம்பெற்றுள்ளன. பின்னர்த் 'திருவாசக உண்மை' எனும் தலைப்பில் திருவாசகத்தில் வரும் 'சிவபுராணம்' முதல் 'அச்சோப் பதிகம்' வரை 24 பகுதிகளின் கருத்து விளக்கப் பாடல்கள் உள்ளன. 'திருப்பதிகங்களின் பெயரும் தொகையும்' என்னும் தலைப்பில், பதிகங்களில் இடம்பெற்ற பாக்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது.

அடுத்துத் திருவாசகம் நூல் முழுமைக்கும் உரை தந்துள்ளார் ஆசிரியர். பாடலைப் பகுதிபகுதியாகப் பிரித்து, மூலத்தை அப்படியே கொடுத்தபின், கோடிட்டுப் பொருள் விளக்கம் தருகின்றார்.

"திருவாசகம் – வீடளிக்கும் அருண்மொழி நூல். திரு – வீடு. சிவபுராணம் – சிவனைப் பற்றிய பழைய வரலாறு. அதாவது, மன்னுயிர்களை உய்வித்தற் பொருட்டுச் சிவபெருமான் அளவில்லாத காலமாக இயற்றிவரும் பழமையான திருவருட்செயல் முறையைக் கூறும் பகுதி என்பதாம்".

இத்தகைய அரிய விளக்கம் தரம் நூல் இது!

## திருவாசகம்

*மாணிக்க வாசகர்*

கே. சுப்பிரமணியபிள்ளை (ப.ஆ.)

திருவாசகம் – விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் 'மாணிக்க வாசக சுவாமிகள் வரலாறு' தரப்பட்டுள்ளது. அடுத்துத் 'திருவாசகச் சிறப்பு' என்ற தலைப்பில் 9 பாடல்கள் உள்ளன. 'மாணிக்க வாசகர் வழிபாடு' என்பதில் 2 பாடல்கள் உள்ளன.

அடுத்துப் பாடல்கள் (மூலமட்டும்) 658 இடம்பெற்றுள்ளன. 'திருவாசக மிகைப்பாடல்கள்' என்ற தலைப்பில் 8 பாடல்கள் உள்ளன. நூலின் இறுதியில், 'திருவாசகப் பதிக வரிசை' என்ற தலைப்பில் – 10 பாடல்கள்; 'திருவாசகப் பதிகத் தொகை' என்ற தலைப்பில் – 3 பாடல்கள் உள்ளன. 'பாட வேறுபாடுகள்' – 49 உட்தலைப்புக்களில் சொல்லப்பட்டுள்ளன. 'திருவாசகத் திருத்தலங்கள்' – 60 பெயர்களைக் கூறி, அவை இடம் பெற்றுள்ள பதிகம், பாட்டு எண் ஆகியன சொல்லப்பட்டுள்ளன.

## திருவாசகம் (மூலமும் பல ஆராய்ச்சி அகராதிகளும்)

*மாணிக்க வாசகர்*

சைவ சித்தாந்தப் பெருமன்றம் (தொ.ஆ.)

'திருவாசகம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'மாணிக்க வாசக சுவாமிகள் சரித்திரம்' உள்ளது. அடுத்து 'ஆராய்ச்சிக் குறிப்புக்கள்' இடம் பெற்றுள்ளன. இதில், "அடிகள் காலம், குலம், சமயம், முற்பிறவி, தாய் தந்தையர், பாடல்கள் பாடிய இடங்கள்" எனப் பல்வேறு ஆராய்ச்சிக் குறிப்புக்கள் உள்ளன.

'சிவபுராணம்' முதல் 'அச்சோப் பதிகம்' வரை திருப்பதிகள் – 51; பாடல்கள் 658. இதில் மிகைப்பாடல் – 3; திருவாசகச் சிறப்பு – 5 பாடல்கள் இறுதியில் உள்ளன.

அனைத்தும் மூலபாடம். இதனையடுத்துத் 'திருவாசகத் திருவுள்ளக்கிடை','திருவாசக உண்மை' – 24 பாடல்கள் உள்ளன.

'திருவாசக உண்மை' என்ற இப்பகுதியில் வரும் முதற்பாட்டு:-

*"தேசுறு மாணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்தில்*
*பேசுதிருச் **சிவபுராணத்** தகவற் பெருமை சொலில்*
*ஈசர்தமக் கியல்பான திருநாம முதலெவையும்*
*மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்!"*

இதனையடுத்துத் "திருவெம்பாவைக் கருத்து, சிவபெருமான் பெயரகராதி, உவமை அகராதி, சொல்லகராதி, சிறப்புப்பெயர் அகராதி, அரும்பொருளகராதி, தேவார ஒப்புமை அகராதி, தலக்குறிப்பு அட்டவணை, யாப்புவகை அட்டவணை, பாட பேதங்களின் அட்டவணை, சாத்திரமேற்கோளகராதி" எனப் பல பயன்படத்தக்க குறிப்புக்கள் உளளன.

திருவாசகத்தை ஆராய்ச்சி செய்வார்க்கு மிகப்பெரிதும் பயன்படும் நூல் இது!

## திருவாசகம்

*மாணிக்கவாசகர்*

மர்ரே அண்டு கம்பெனி (பதிப்பு)

'**திருவாசகம்**' விளக்கம், முதல் தொகுதியில் சொல்லப்பட்டுள்ளது. இந்நூலில் 'திருவாசகம்' மூலபாடம் மட்டுமே தரப்பட்டுள்ளது. முன்னுள்ள 'பதிப்புரை' மிகவும் பயனுள்ளது. இதன்கண், முதன்முதலில் ஏறத்தாழ 130 ஆண்டுகளுக்கு முன்னர்த் திருவாசகத்தைப் பதிப்பித்தார் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர், அதன் பின்னர்த் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர், யாழ்ப்பாணத்து நல்லூர்ச் சதாசிவப் பிள்ளை, காஞ்சிபுரம் சபாபதி முதலியார், ஆறுமுக நாவலர் முன்னிலையில் பொன்னம்பலம் பிள்ளை ஆகியோர் தனித்தனியாகப் பதிப்பித்தார்கள் என்ற குறிப்பு சொல்லப்பட்டுள்ளது.

"பல இடங்களிலிருந்தும் கிடைத்த 67 ஓலைச்சுவடிகளை ஆராய்ந்து, பாட

ரூப பேதங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இப்போது பெருவழக்கில் இருந்துவரும் பாடங்களை மாற்றியதில், 108 இடங்களில் வேறுபாடம் கொள்ளுவது பொருத்தம் என்றறிந்து, அப்பாடங்களில் 82 பாடங்கள், இதுவரை வெளிவந்துள்ள பதிப்புக்கள் ஒன்றிலும் காணப்பெறாதவை" என்ற விவரம் இப் 'பதிப்புரை'யில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

"புறத்தார்க்குஞ் சேயோன்" என்பது, இறைவனுடைய நிலையைத் தத்துவக் கருத்துடன் கூறுகின்றது. 'அப்பாலைக்கு அப்பாலன்' இறைவன் எனக்கூறி, அவன் எங்கும் நிறைந்தவன் என்ற கருத்தையும் பெற வைக்கின்றது. மேலும், இப்பாடத்தையே சரவணப் பெருமாளையரும், நல்லூர்ச் சதாசிவ பிள்ளையும் கொண்டுள்ளார்கள். 'புத்தர்' என்பது இங்கு பௌத்த சமயத்தாரைக் குறிப்பதாகும். இப்பாடமே, சிவக்கொழுந்து தேசிகரும் சபாபதி முதலியாரும் கொண்டார்கள். 'கார் கலப்ப' என்பது, ஒத்த தட்பவெப்பம் உள்ள மார்கழித்திங்களில் காலைப்பொழுதில் கதிரவனுடைய இளங்கதிர்கள் வானத்தே சிறிது சிறிது வீசி, மேகத்துடன் கலந்து நிற்கும் காட்சியைக் காட்டுவதாகும். வானத்தில் கதிரவன் ஒளி கலந்து தோன்றும் காட்சியை நம் பழம்புலவர்கள் செய்யுள்களில் நன்கு காணலாம். தண் ஒளி காரொடு கலப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். 'கொங்கு கருங்குழலி' என்பதே பொருத்தமானது என்பது இறைவியின் கூந்தல் இயற்கை மணமுடையது என்ற சமயக் கொள்கைக்கு ஒத்தது! . . ."

என்பன போன்ற விளக்கங்கள் 'பதிப்புரை'யில் தரப்பட்டுள்ளன.

திருவாசகம் – மூலபாடம் தரப்பட்டுள்ளது; இறுதியில் 'மிகைப்பாடல்', 'சொல் விளக்கம்', 'திருவாசகத்தில் காணும் திருப்பதிகள்', 'திருவாசகக் கதைக் குறிப்புக்கள்' முதலியன கொடுக்கப்பட்டுள்ளன.

இதில்வரும் 'சொல்விளக்கம்', மிகவும் பயனுள்ளது. ஓர் அரிய திருவாசகப் பதிப்பு இது எனலாம்!

## திருவாசகம் கோயிற்றிருப்பதிகம் - சொற்பொருளுரை

*மாணிக்கவாசகர்*

திரு. அடிகளாசிரியன் (உ.ஆ)

திருவாசகம் – விளக்கம். முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில், 'கோயில் மூத்த திருப்பதிகம், தில்லையில் பாடப்பட்டது. ஆனால், 'கோயில் திருப்பதிகம் தில்லையில் பாடப்பட்ட தென்றற்கு அகச் சான்றில்லை!', 'மாணிக்கவாசகர் இறைவன் எழுந்தருளியுள்ள தம் உடம்பாகிய கோயிலைக் கருதிப் பாடியதே கோயிற்றிருப்பதிகம்' என்ற ஆராய்ச்சிக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

அடுத்துக் 'கோயில் திருப்பதிகம்' 10 பாடல்களுக்கும், விரிவான உரை விளக்கம் தரப்பட்டுள்ளது.

முதற்பாடலுக்கு விளக்கம் கூறவந்த இவ்வுரையாசிரியர், "மருத்துவன், கறக்கும் பசுவிற்கு வரும் ஒருவகையான நோய்க்கு, அந்நோய் கெடுமாறு, அப்பசுவின் பாலையே கறந்து, அதற்கு ஊட்டுதல் போல, ஆசிரியர், உயிரின் ஆணவமலம் என்னும் நோய் கெடுமாறு, உயிர்க்குள் உயிராய் நிற்கும் நிட்கள சிவத்தினை, சகல வடிவாகிய இட்டலிங்கமாய்க் கரபீடத்தில் அருச்சிக்குமாறு தந்து பின், உயிர்க்குள் அமைவுறச் செய்வன்!" என்று கூறுமிவர்,

*"ஆவுறு பிணிகெட ஆவின் பால்கறந்(து)*
*ஆவினை ஊட்டல் போல் ஆண வம்கெட*
*ஆவியுள அமலனை அங்கை தந்துபின்*
*ஆவியுள அமைவுற ஆக்கும் ஆரியன்!"*

என்னும் பிரபுலிங்க லீலைப் பாடலைச் சான்று காட்டுவர். நூல் சிறிதே எனினும் கருத்தாழம் உடையது!

## திருவாசகம் - திருச்சதகம் கதிர்மணி விளக்கம்

*மாணிக்கவாசகர்*

மு. கதிரேசச் செட்டியார்.

'திருவாசகம்' - விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. தொடக்கத்தில் 'திருவாசகம்- உரைத்தொடக்கம்' உள்ளது. அடுத்துத் 'திருச்சதகம்' என்பதன் பொருள் விளக்கம்; 'பத்தி வைராக்கிய விசித்திரம்' என்பதன் விரிவான விளக்கம் தரப்பட்டுள்ளது.

இதில், ஒவ்வொரு திருப்பாட்டிற்கும் 'கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத் திரட்டல், அகலங்கூறல்' என்னும் நான்கு வகையாகக் கொண்டு உரைவிளக்கம் தரப்பட்டுள்ளது.

'கருத்துரைத்தல்' ஆவது, திருப்பாட்டை அடுத்து அதன் திரண்ட கருத்தையும், முன்னைத் திருப்பாட்டோடு உள்ள இயைபையும் சுருக்கிக் கூறுதலாகும். 'கண்ணழித்தல்' என்பது, பதப்பொருள் சொல்லுதல். 'பொழிப்புத் திரட்டல்' என்பது, மூலபாடத்தின் பதங்களை விட்டு அவற்றிற்குச் சொல்லிய பொருள்களைத் திரட்டிக் காட்டுதல். 'அகலங்கூறலா'வது திருப்பாட்டின் பொருளைத் தூய்மை செய்தற்கு வினா விடை உள்ளுறுத்தும், ஆற்றன் முதலியவற்றாலும் குறிப்பாலும் சொற்களின் அமைந்து கிடக்கும் பொருள் நயங்களை விளக்கியும், இன்றியமையாத இடங்களில் மேற்கோள்காட்டியும் விளக்கிக் கூறுதலாகும்.

*"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்*

*துன்விரை யார்கழற்கென் . . .*"

என்று தொடங்கும் முதற்பாட்டிற்கு உரையாசிரியர் பின்வருமாறு 'கருத்துரை' தருகின்றார்:–

"பத்தி வைராக்கியங்களில் மனமொழி மெய்கள் மூன்றும் ஈடுபடல் வேண்டும். இறைவனை மெய்ப்பொருள் என உணர்ந்து மனத்தால் நினைந்தும்; மொழியால் பாராட்டியும்; மெய்யால் வணங்கியும் அன்பு செய்தல் பத்தியாம். உலக வாழ்க்கையைப் பொய்யென உணர்ந்து, அம் முக் கரணங்களாலும் வெறுத்துவிடல் வைராக்கியமாகும். ஆகவே, ஆளுடைய அடிகள், முதலிற் பத்தி நிலையைப் புலப்படுத்துவாராய்த் தம் மனமொழி மெய்கள் ஆகிய முக்கரணங்களும் இறைவன் வயப்பட்ட செய்தியை இம் முதல் திருப்பாட்டில் அருளிச் செய்கின்றார்!"

– இவ்வாறே திருச்சதகம் 100 பாடல்களுக்கும் ஓர் அரிய உரை நூலாக அமைந்துள்ளது இது!

## திருவாசகம் : திருப்பள்ளி எழுச்சி, திருவெம்பாவை

*மாணிக்கவாசகர்*

(உ.ஆ.) கோமதி சூரியமூர்த்தி

திருவாசகம் – விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. இந்நூலில் 'திருப்பள்ளி எழுச்சி'– 10 பாடல்; திருவெம்பாவை – 20 பாடல். இவற்றிற்குப் பொழிப்புரை தரப்பட்டுள்ளது. இவற்றுடன், ஆண்டாள் பாடிய 'திருப்பாவை' 30 பாடல் பொழிப்புரையும் உள்ளது.

## திருவாசகம் : திருவண்டப் பகுதி

*மாணிக்கவாசகர்*

பன்னிரு திருமுறை மன்றம் (ப.ஆ.)

திருவாசகம் – விளக்கம், முதல் தொகுதியில் தரப்பட்டுள்ளது. திருவாசகத்தில் மாணிக்க வாசகர் அருளிய 'திருவண்டப்பகுதி' 182 அடிகள் கொண்டது. இந்நூலில், முதற்கண் மூலபாடத்தைக் கொடுத்து, அதன்பின் உரைவிளக்கம் தரப்பட்டுள்ளது.

இப்பாடலில் வரும் 'குழகன்' என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது:–

"தன்னையொழிந்தவரெல்லாம் குழந்தைகளாகத் தோன்றியும்; இளைஞராக வளர்ந்து சிறந்தும்; மூப்புடையராகி அழிந்தும்; செயற்படவும்; தான் ஒருவனே எஞ்ஞான்றும் இளமையும் அழகும் நிரம்பியுள்ளான் என்பதும், இங்ஙனம் கொட்கப் பெயர்க்கும் தொழில் அவனுக்கு ஒரு சிறு விளையாட்டினை ஒக்குமென்பதும் தோன்றச் 'குழகன்' எனப்பட்டான்!"

– இத்தகு உரைநயங்கள் உள்ள நூல் இது!

## திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

*பெரும்பற்றப் புலியூர் நம்பி*

உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.)

'திருவிளையாடற் புராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. மதுரையில் சோமசுந்தரப் பெருமான் நிகழ்த்திய 64 திருவிளையாடல்கள் பற்றியது. பரஞ்சோதி முனிவர் என்பவரும் 'திருவிளையாடற்புராணம்' பாடியுள்ளார்.

இந்நூலின் தொடக்கத்தில், 'பெரும் பற்றப் புலியூர் நம்பியின் வரலாறு, நூலாராய்ச்சி' உள்ளன. அடுத்துப் 'பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடலிற் காணப்பெறாத அரிய விஷயங்கள் – அதாவது இருநூல்கட்குமிடையே காணலாகும் வேறுபாடுகள்' சொல்லப்பட்டுள்ளன.

காப்புச் செய்யுள் – 4; கடவுள் வாழ்த்து – 23; அவையடக்கம் – 4; ஆக 31 திருவிருத்தங்கள், தொடக்கத்தில் உள்ளன.

இதனையடுத்துப் 'பதிகம்' – 11 திருவிருத்தம்; நூல் வரலாறு – 8 திருவிருத்தம்; திருநாட்டுச் சிறப்பு – 14; திருநகரச் சிறப்பு – 18; நூற்பயன் – 9. ஆகத்திருவிருத்தம் : 91

பின்பு, 'இந்திரன் பழி தீர்த்த படலம்' முதல் 64 திருவிளையாடல்கள் – மூலமட்டுமே உள்ளன. பாடல்கட்கு அடிக்குறிப்பாகச் சில அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

'திருநகரச் சிறப்பு' எனும் பகுதியில் 'ஆலவாய்' பற்றிய பாடல் :–

*"பாக மங்கைய னோக்கியார் பரிவுமங்கய னோக்கியார்*
*மோக நந்துற வன்பினான் முனிவர் நந்துற வன்பினான்*
*மாக மொன்றிய வாய்மையால் வந்தி லங்கிய வாய்மையா*
*லாக மம்பக ராலவா யமுத மன்றிரு வாலவாய்!"*

– இதற்கு அடிக்குறிப்பாகச் சொல்லப்பட்ட பொருள்:–

"அயல் நோக்கி ஆர் மோகம் நந்துற – புறத்தேயுள்ள விடயங்களை நோக்குதலால் நிறைந்துள்ள ஆசையானது கெட; அன்பின் நால் முனிவர் நந்துற – அன்பினையுடைய நான்கு முனிவர்கள் பெருக்கமுற; வன்பினால் – வன்பினோடு; மாகம் ஒன்றிய ஆய்மையால் – பெருமை பொருந்திய நுண்ணிய பொருள்களாலும்; வாய்மையால் – உண்மைப் பொருள்களாலும் இலங்கிய; ஆகமம் – ஆகமநூற் பொருள்களை; வந்து பகர் – வந்து உபதேசித்த; ஆலம் வாய் அமுதம் மன் – வடவால மரத்தின் கீழே எழுந்தருளிய சிவபெருமானது; திரு – செல்வம்; ஆலவாய் – ஆலவாயென்னும் திருப்படைவீடே; பாகம் அம்கயில் நோக்கியர் – அவருடைய பாகத்திலுள்ள அங்கயற்கண்ணம்மையினது; பரிவும்

அங்கு – விருப்பமும் அத்தலத்தேதான்; நான்முனிவர் – சனகர் முதலியோர்; அமுதமன் – அமிர்தேசர், மதுரேசர்; அமுதம் – முத்தி, அமிர்தம்; பரிவும் – உம்மை இறந்தது தழுவியது; 'கயனோக்கியார் பரிவும் அங்கு' என்றது, இத்தலம் சத்திபீடம் என்பதைப் புலப்படுத்தியது!"

– இத்தகைய அடிக்குறிப்பு ஆங்காங்கே உள்ளன!

## திருவிசைப்பா, திருப்பல்லாண்டு (பொழிப்புரை, விளக்கக் குறிப்புரை)

*திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதுபேர்*

சி. அருணைவடிவேலு முதலியார் (வி.உ); தி. வே. கோபாலய்யர் (பொ. உ)

'திருவிசைப்பா, திருப்பல்லாண்டு' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு', 'ஆசியுரை', 'திருவிசைப்பாப் பொருள் நலம்', 'திருவிசைப்பா – இலக்கிய நலமும் பண்பாடும்' முதலாயின உள்ளன. அடுத்துத் 'தல அட்டவணை – தலமும் பதிக வரலாறும்' சொல்லப்பட்டுள்ளது. இதில், 'ஆரூர்' முதல் 'வீழிமிழலை' வரை 14 திருத்தலங்களும், பதிக எண்களும் குறிக்கப்பட்டுள்ளன.

அடுத்து இவ் 9 ஆம் திருமுறையில் உள்ள 'தலங்களின் வரலாற்றுக் குறிப்பு', மிக விரிவாக இடம்பெற்றுள்ளது. இதனையடுத்து 'ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள் வரலாறு' உள்ளது. பின்பு, 'சிறப்புக் குறிப்புடைய திருப்பதிகங்கள், திருப்பாடல்கள்'; 'ஆசிரியர்களும் அவர்கள் அருளிச் செய்த பதிகங்களும்' பற்றிய குறிப்பு உள்ளது. இதில், "திருமாளிகைத் தேவர் – 4; சேந்தனார் – 3; கருவூர்த்தேவர் – 10; பூந்துருத்தி நம்பி காடநம்பி – 2; கண்டராதித்தர் – 1; வேணாட்டடிகள் – 1; திருவாலியமுதனார் – 4; புருடோத்தம நம்பி – 2; சேதிரயெர் – 5 ஆக 28 திருவிசைப்பா; சேந்தனார் – திருப்பல்லாண்டு – 1 என்பன சொல்லப்பட்டுள்ளன.

இதனையடுத்து இத்திருமுறையில் அமைந்த பண்கள்: 'இந்தளம்' முதல் 'புற நீர்மை' வரை – 6; பதிகங்கள் : 29 என்ற விவரம் உள்ளது.

*"உயர்கொடி யாடை மிடைபட லத்தின்*
*ஓமதூ மப்பட லத்தின்*
*பியர்நெடு மாடத் தகிற்புகைப் படலம்*
*பெருகிய பெரும்பற்றப் புலியூர்*
*சியரொளி மணிகள் நிரந்துசேர் கனகம்*
*நிறைந்தசிற் றம்பலக் கூத்தா*
*மயரறும் அமரர் மகுடந்தோய் மலர்ச்சே*
*வடிகள் என் மனத்துவைத் தருளே!"*

என்பது, 'திருவிசைப்பா' – கோயில்பதிகம்.

இதன் முன்னுரையாக உரையாசிரியர் தருவது:–

"இத்திருப்பதிகம், தில்லைக் கூத்தப் பெருமானது திருவுருவத்தைப் பாதாதிகேசமாக (அடி முதல் முடி வரையிலுமாக) நினையும் வகையில் அருளிச் செய்யப்பட்டது. திருவாலியமுதனார் என்ற மற்றொருவர் அருளிச் செய்த ஒரு திருப்பதிகமும் இவ்வாறிருத்தல் அறியத்தக்கது!"

இப்பதிகப் பண் : பஞ்சமம்.

இதற்கான பொழிப்புரை :– "உயர்ந்த துணிகளாலாகிய கொடிகளின் தொகுதிகளின் மேல், வேள்வியில் எழுந்த புகைப்படலமும் அதன் மீது பெரிய மாட வீடுகளிலிருந்து வெளிவரும் அகிற் புகைப்படலமும் மிகுதியாகக் காணப்படும் பெரும்பற்றப் புலியூரில், மேம்பட்ட ஒளியையுடைய மணிகள் வரிசையாகப் பதிக்கப் பெற்ற தங்கம் நிறைந்திருக்கும் சிற்றம்பலத்தில் கூத்து நிகழ்த்தும் பெருமானே! அஞ்ஞானமாகிய மயக்கம் நீங்கிய தேவர்களின் முடிகள் தங்கப் பெறும் தாமரைப்பூப் போன்ற உன் சிவந்த திருவடிகளை அடியேனுடைய உள்ளத்தில் நீ வைத்தருள்வாயாக!"

குறிப்புரை : 'நெடுமாடத்து' என்பதனை முதலிற் கூட்டுக. மிடை – நெருங்கிய; படலம் – கூட்டம்; தூமம் –புகை; பியர் – 'பியல்' என்பதன் போலி. 'பிடர்' என்பது பொருள். இதனைக் கொடிப் படலத்திற்கும் கூட்டுக. 'பியர்' என்பதைப் 'பெயர்' என்றும் பாடம் ஓதுவர். ஓங்கியுள்ள மேல்மாடங்களில் உயர்த்தப்பட்டுள்ள கொடிச் சீலைகளின் கூட்டத்தின்மேல் ஓமத்தின் புகையும், அவ் ஓமப்புகைப் படலத்தின் மேல் அகிற்புகைப்படலமும் நிறைந்திருக்கின்ற பெரும்பற்றப்புலியூர் என்றவாறு. சியர் ஒளி – விளக்கத்தையுடைய ஒளி; மயர் – மயக்கம்; 'மயர்வு' என்பதும் பாடம். சேவடிகளையே கூறினாராயினும் திருவுருவம் முழுவதையும் கூறுதல் கருத்தென்க!"

– இத்தகைய சிறந்த உரைவிளக்கத்துடன் கூடிய நூல் இது.

## திருவிசைப்பா திருப்பல்லாண்டு (ஒன்பதாம் திருமுறை)

திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர்

இரா. சங்கரன் (ப.ஆ.)

சைவத்திருமுறை 12ல், 9ஆம் திருமுறையில் இடம்பெற்றவை 'திருவிசைப்பா, திருப்பல்லாண்டு', 'திருமுறை' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் 'திருவிசைப்பா ஆசிரியன்மார் சரித்திரம்' உள்ளது. திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர். பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் எனும் ஒன்பது பேரின் வாழ்க்கை வரலாற்றுச்

சுருக்கம் தரப்பட்டுள்ளது.

அடுத்து இவ் ஒன்பது நாயன்மார் 'திருப்பெயரும், திருப்பதிக வகையும், பண்ணின் வகையும் தெரியும் அடைவு' – 3 பாடல்களில் தரப்பட்டுள்ளது.

'திருவிசைப்பா' என்ற தலைப்பில், 'கோயில்' – 11 + 11 + 12 + 11 = 45 பாடல்கள் (மூலம்); திருவீழிமிழலை – 12; திருவாவடுதுறை – 11; திருவிடைக்கழி – 11; கோயில் – 11; திருக்களத்தை யாதித்தேச்சரம் 10. திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம் – 11; திருமுகத்தலை – 10; திரைலோக்கிய சுந்தரம் – 11; கங்கை கொண்ட சோழேச்சரம் –11; திருப்பூவணம் – 10; திருச்சாட்டியக்குடி – 10; தஞ்சை இராசராசேச்சரம் – 11; திருவிடைமருதூர் – 10; திருவாரூர் – 2; கோயில் – 10; கோயில் – 10; கோயில்– 10; கோயில் பாதாதிகேசம் – 11. கோயில் – பவாமால் வரை –10; கோயில் – அல்லாய்ப் பகலாய் – 11; கோயில் – கோலமலர் – 10; கோயில் – வாரணி – 11; கோயில் – வானவர்கள் – 11; கோயில் – 10; என வரிசையாக உள்ளன. (மூலம்).

அடுத்துச் சேந்தனார் அருளிய 'திருப்பல்லாண்டு' (மூலம்) – 11 பாடல்களும் உள்ளன. திருவிசைப்பா, திருப்பல்லாண்டு மூலமட்டும் படிக்க விரும்புவார்க்கு இது பயன்படும்.

## *திருவிசைப்பா, திருப்பல்லாண்டு (விரிவுரையுடன்)*

திருமாளிகைத் தேவர் முதலானோர்

வே. மாணிக்கவாசகம் பிள்ளை (உ.ஆ)

'திருவிசைப்பா, திருப்பல்லாண்டு' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'முன்னுரை' உள்ளது. இதில், பாடிய அருளாளர்களைப் பற்றியும், நூலில் சொல்லப்படும் கருத்துக்கள் பற்றியும் இடம்பெற்றுள்ளன.

'பாடல் மூலம் – பொருள் – விளக்கம்' என்ற முறையில் அமைந்துள்ளது.

"இடர்கெடுத் தென்னை ஆண்டுகொண் டென்னுள்
இருட்பிழம் பறஎறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்குந்
தூயநற் சோதியுட் சோதீ!
அடல்விடைப் பாகா அம்பலக் கூத்தா
அயனொடு மாலறி யாமைப்
படரொளி பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே!"

என்பது திருவிசைப்பாப் பாடல். இதற்குரிய பொருள்:–

"என்னுடைய பிறவித் துன்பத்தை ஒழித்து, என்னை அடிமையாகக்

கொண்டு, என் உள்ளத்திலுள்ள அறியாமையாகிய இருட்டிரளை அதன் மறைத்தற் சத்தி முற்றிலும் வலிகெட்டு ஓடும்படி, அகற்றித்தள்ளி, என் சித்தத்துத் தோன்றிய ஒளிநிறைந்த மாணிக்க விளக்கினால் அறிவொளி பரவச் செய்கின்ற மாசூராத உயிரின் அறிவுக்கறிவாய் விளங்கும் மெய்ஞ்ஞானச் சுடரே! வலிமிக்க இடபவூர்தியானே! பொன்மன்றில் திருநடம் புரிபவனே! நான்முகனும் அரியும் காணாதபடி அனற்பிழம்பாய் விரிந்த ஒளிபரப்பி, எங்கும் என்னுடன் கலந்து வணங்குவாயாக!

– இதற்கு உரையாசிரியர் மேலும் பலவிளக்கம் தருகின்றார்.

## திருவிளையாடற் புராணம் (அருஞ்சொற்பொருள்)

பரஞ்சோதி முனிவர்

கு. சுந்தரமூர்த்தி (உ.ஆ.)

'திருவிளையாடற் புராணம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'பரஞ்சோதி முனிவர் வரலாறு' உள்ளது. அடுத்து 'ஆராய்ச்சி முன்னுரை'! இதில், புராணங்களின் வளர்ச்சி, முப்புராணங்கள், முந்துநூல்களில் திருவிளையாடற் குறிப்புக்கள்' முதலாயின சொல்லப்பட்டுள்ளன.

அடுத்துத் 'திருவிளையாடற் புராண முதற்பதிப்பின் முன்னுரை' இடம்பெற்றுள்ளது. இது, மிகச் சிறந்த ஆராய்ச்சி எனலாம். 3 காண்டங்கள்; 3363 செய்யுட்கள், ஒவ்வொரு பாடலுக்கும் அடிக்குறிப்பாகச் சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

"உலகிய ளிறுத்து வான்வந் தொருபரஞ் சுடர்வான் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப் பாராண்
டிலகுறு தோற்ற மீதான் முனிவர ரிருவர் தேற
அலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றாம்!"

என்பது, 'வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலத்' தின் முதற்பாடல். இதற்கு உரையாசிரியர், அடிக்குறிப்பில், பின்வருமாறு எழுதுகின்றார்:

"உலகு இயல் – உயர்ந்தோர் வகுத்தன. அவை : அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப் பொருள், மறநிலைப் பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம் என்பன. முனிவர் இருவர் – பதஞ்சலி, வியாக்கிரபாதர்! . ." இவ்வாறே பிறவும்!

## திருவிளையாடற் புராணம் (மூலமும் தெளிவுரையும்) தொகுதி – 1

பரஞ்சோதி முனிவர்

வ. ஜோதி (உ.ஆ.)

'திருவிளையாடற்புராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஆராய்ச்சி முன்னுரை' உள்ளது. இதில், 'பாண்டித் திருநாடு, மதுரையம்பதி, மதுரையின் பெருமை, புராணங்கள், திருவிளையாடற்புராணம், பரஞ்சோதி, நூலாசிரியர், மூலநூல், இறைவனின் அருள் விளையாடல்களைக் கூறும் வேறுநூல்கள், இந்நூலில் இடம்பெற்ற பாண்டியர்கள், ஆடவர்கள், பெண்கள், சங்கப்புலவர்கள், யாகங்கள், விரதங்கள், அட்டமாசித்திகள், தலங்களின் பெருமை, காப்பியங்கள்' எனப் பல்வேறு குறிப்புக்கள் உள்ளன.

இம் முதல் தொகுதியில், முதலாவது மதுரைக் காண்டம் – திருவாலவாய்க் காண்டம் உரைநடைப் பகுதி, தொடக்கத்தில் இடம்பெற்றுள்ளது. அடுத்துப் பாடல் – எதிர்வரிசையில் பொழிப்புரை என அமைந்துள்ளது. 471 பாடல்கள் இத்தொகுதியில் உள்ளன.

"கொல்லை யானிரை மேய்ப்பவர் கோழிணர்க் குருந்தின்
ஒல்லை தாயதிற் படர்கறிக் கருந்துண ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்தினழ சிற்றில்
எல்லை யாயமோ டாடுப வெயின்சிறு மகளிர்!"

என்பது, மதுரைக் காண்டத்தில், திணை மயக்கம் கூறும் பாடல். இதற்கு உரையாசிரியர் தரும் பொழிப்புரை:–

"முல்லை நிலத்தில் பசுக்கூட்டங்களை மேய்த்துவரும் ஆயர்கள், கொழுவிய பூங்கொத்துக்– களையுடைய குருந்த மரத்தின்மேல் விரைந்து ஏறி, அதில் படர்ந்துள்ள மிளகுக் கொடியில் உள்ள கரிய மிளகுக் கொத்துக்களை உதிர்ப்பார்கள். குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்த வேட்டுவச் சிறுமியர் நெய்தல் நிலத்தில் உள்ள முத்துக்களினால் கட்டிய சிறு வீட்டில் முல்லை அரும்புகளே சோறாக, அவற்றோடு தேனைக் கலந்து மகளிர் கூட்டத்துடன் விளையாடுவர்!"

– எல்லாத் தொகுதிகளுக்கும் இத்தகைய உரை உண்டு.

## திருவிளையாடற்புராணம் : திருவாலவாய்க் காண்டம் (உரை)

பரஞ்சோதி முனிவர்

ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.)

'புராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 49 ஆவது 'திருவாலவாயான படலம்' முதல் 65 ஆவது 'அருச்சனைப் படலம்' வரை 3363 பாடல்கள் உள்ளன.

'பாடல் – பொருள் – குறிப்பு' எனும் முறையில் அமைந்துள்ளது.

"ஏத்தியருச் சனைசெய்து நினைவிலரி தாயன்பி லெளிய வட்ட
மூர்த்தியையாய் கயற்கண்ணி யன்பனைமுப் போதும்போய் முடிதாழ்ந்
தின்பம்

பூத்தமனத் தினராகிக் கருவித்தேன் பொதிந்தசிறு புட்போலந்த
மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து வதிந்தார்
மன்னோ!"

என்பது அருச்சனைப் படல இறுதிப் பாட்டு.

இதற்கு உரையாசிரியர் தரும் பொருள் :-

"(தாம் நிறுவிய சிவலிங்கங்களைத்) துதித்து, அருச்சித்து, நினைத்தற்கு அரிதாகி அன்பிற்கு எளிய அட்டமூர்த்தியும், அங்கயற்கண்ணம்மையின் தலைவருமாகிய சோமசுந்தரக் கடவுளை, மூன்று காலங்களிலுஞ் சென்று தலைவணங்கி, இன்பம் நிறைந்த மனத்தினை யுடையராய், மிக்க தேனடையில் மொய்த்த வண்டுகள் போல, அந்தச் சிறந்த பதியின்கண், வசிட்டர் முதலிய முனிவர்கள் தவவனம் ஒன்று ஆக்கி அதில் தங்கியிருந்தனர்!"

கருவி – தொகுதி; சிறுபுள் – ஈ, வண்டு; தேனிலே மொய்த்த வண்டு, அதனை நுகர்ந்து சலனமற்றிருந்தாற் போன்று, சிவானந்தம் நுகர்ந்து சலிப்பற்றிருந்தனர் என்க!"

– இத்தகு விளக்கம் ஒவ்வொரு பாடலுக்கும் உரிய அரிய நூல்!

## திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் (தெளிவுரை)

திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்; திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார்

சி.சு. மணி (உ.ஆ.)

(1) திருஉந்தியார் (2) திருக்களிற்றுப்படியார் – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

இந்நூலில் முதற்கண் 'திரு உந்தியார்' 45 பாடல்களுக்குரிய பொழிப்புரையும், அதனையடுத்து விளக்கமும் உள்ளது. அவ்வாறே 'திருக்களிற்றுப் படியார்' 100 பாடல்களுக்கும் உள்ளது.

"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கு இரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் – வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான் காண்!"

எனும் திருக்களிற்றுப் படியார் பாடலுக்கு உரையாசிரியர் பின்வருமாறு பொழிப்புரை தருகின்றார்:–

"யாவற்றையும் ஒடுக்குகின்ற முற்றழிப்புக் காலத்தில் தனது அருட்சித்தியையும், தன்னுள் கரந்து, சிவம் ஒன்றேயாகியும், அதன்பின்னர் அண்டங்கள் அனைத்தையும் மீளத் தோற்றுவிக்கும் காலத்து சத்தியும் சிவமும்

என இரண்டாகி நின்றும், ஐம்பெரும் பூதங்களும் கதிரவனும் மதியும் ஆன்மாவும் ஆகிய எட்டு உருவினன் ஆகி, அவற்றுள் நிறைந்தும், அவை யாவற்றுள்ளும் கலந்து நின்றும், அவற்றில் தோய்வறத் தன்னியல்பால் வேறாகியும், உயிருக்கு உயிராய் உள்நின்று இயக்கியும் காணும்– உபகாரம் காட்டும் உபகாரம் ஆகியவற்றைப் புரிதலால் உடனாகியும் இருக்கின்ற இயல்பினை உடையவன் சிவபெருமான்!''

இவ்வாறு கூறும் உரையாசிரியர், பின்வருமாறு விளக்கமும் தருகின்றார்:

''திருமுறைகளின் பிழிவே சைவசித்தாந்தம் என்று அறிஞர்கள் கொள்ளுவர். அதற்கு ஓர் அரிய எடுத்துக்காட்டாக இப்பாடல் அமைந்துள்ளது. திருவீழிமிழலையில் எம்பந்த வல்வினை நோய் தீர்த்திட்டு எமையாளும் சம்பந்தப் பெருமான் அருளிய திருப்பாடல்:–

''ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண்ஆண் குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழுஓசையோடு எட்டுத்திசை தானாய்
வேறாய் உடன்ஆனான் இடம்வீழிம் மிழலையே!''

– ''அருமையான இத்தேவாரப் பாடலில் கூறப்பட்ட கருத்துக்கள் திருக்களிற்றுப் படியாரின் ஆசிரியரால் இந்தப் பாடலில் பொதிந்து வைக்கப்பட்டிருப்பது போற்றுதற்குரியதாகும்!'' என்றதனோடு அமையாமல் மேலும் விளக்கம் தருகின்றார்.

– இவ்வாறு அரிய விளக்கங்கள் அமைந்த நூல் இது!

### திருவுந்தியார் - திருக்களிற்றுப்படியார் (மூலமும் உரையும்)

திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்; திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் .

கு. வைத்திய நாதன் (உ.ஆ.)

இவ்விரு நூல் விளக்கம் – முதல் தொகுதியில் உள்ளது. திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார் அருளிச் செய்தது 'திருவுந்தியார்'; திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் அருளிச் செய்தது 'திருக்களிற்றுப்படியார்', 'சிவஞான போதம்' தோன்றுதற்கு முன்பே தோன்றியவை இவை!

'திருவுந்தியார்' – 45 பாடல்கள்; திருக்களிற்றுப்படியார் – 100 பாடல்கள். இந்நூல்களின் உரையாசிரியர், ஒவ்வொரு பாடலுக்கும் அதற்குரிய தலைப்பினைத் தந்து, பாடலையடுத்துத் 'தெளிவுரை', 'பதவுரை' என அமைத்துள்ளார்.

''சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று
ஆவி அறாதே என்று உந்தீபற;

அவ்வுரை கேளாதே உந்தீபற"

என்ற பாடலுக்குச் 'சித்தாந்த சைவத்தின் சிறப்பு' எனும் தலைப்புத் தந்து, பாடலையடுத்துப் பின்வருமாறு தெளிவுரை தருகின்றார் உரையாசிரியர்.

"உலகத்தில் நூற்றுக்கணக்கான மதங்கள் உள்ளன. அவற்றின் பெரும்பாலானவற்றின் தத்துவக் கொள்கைகள் தருக்கநெறிமுறைகளில் அமையவில்லை! எனவே, அம்மதங்கள் உயிர்க்கு உறுதிபயப்பனவாக இல்லை. சித்தாந்த சைவ சமயம் ஒன்றே, உயிர்க்குப் பேருதவி புரிந்து வரும் இறை இயல்பையும், அறியாமைக்குட்பட்ட உயிர்களின் இயல்பையும், உயிர்க்கு அறியாமையைச் செய்யும் தளை இயல்பையும், குறித்துக் காரண – காரிய இயைபுபடுத்திப் பகுத்தறிவுக்கு ஏற்ப, கொள்கைகளைக் கொண்டிருக்கிறது. . . . !"

என்பன போன்ற தெளிவுரைகளை இந்நூலில் காணலாம்.

## திருவுந்தியார் – திருக்களிற்றுப்படியார் – உண்மை விளக்கம் (தெளிவுரை)

திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்; திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்; திருவதிகை மனவாசகங்கடந்தார்.

உண்மை விளக்க ஆசிரியர்.

கு. வைத்திய நாதன் (உ.ஆ.)

(1) திருவுந்தியார்; (2) திருக்களிற்றுப்படியார்; (3) உண்மை விளக்கம் – இந்நூல்கள் விளக்கவுரை, முதல் தொகுப்பில் உள்ளது.

இந்நூலில் 'திருவுந்தியார்' – 45 பாடல்; திருக்களிற்றுப்படியார் – 100 பாடல்; உண்மை விளக்கம் – 53 பாடல் – இவற்றிற்கான தெளிவுரை தரப்பட்டுள்ளது.

முதலில் பாடல், அடுத்துத் தெளிவுரை என அமைந்துள்ளது.

"இன்றுஇச் சமயத்தின் அல்லதுமற்(று) ஏழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார்? – இன்றிங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்?
எங்கும்இலை கண்டாய் இது!"

என்பது திருக்களிற்றுப்படியாரில் வரும் ஒரு பாடல். இதற்கு உரையாசிரியர் தரும் தெளிவுரை:–

"பல்வேறு சமயங்களினிடையே, இன்று நின்று நிலவிவரும் சைவசமயம் போன்று சிறந்த சமயம் ஒன்று உண்டா? இல்லை! இதற்கு என்ன சான்று?

தில்லையில் பலரும் கூடிய அவையிலே, இலங்கை புத்தர்களுடன் நிகழ்த்திய

வாதில், ஊமைப் பெண்ணைப் பேசும்படி செய்தருளி புத்தரை வாதில் வென்றருளிய மணிவாசகப் பெருந்தகையைப் போன்று எவரும் உளரா?

திருமயிலைச் சிவநேசரின் மகள் பூம்பாவை, அரவு தீண்டி இறந்ததும், அவளது எலும்பினை ஒரு குடத்தில் சேமித்து வைத்திருந்த போது, ஞானசம்பந்தப் பெருமான், அக்குடத்தில் உள்ள எலும்பு, பூம்பாவையாக உயிர் பெற்று எழும்படி பாடியருளிச் செய்தார். இது போன்ற நிகழ்ச்சி வேறு எந்தச் சமயத்திலாவது நடந்ததுண்டா? எந்தச் சமயத்திலும் இல்லை என்பதைத் தெளிவாக அறிந்து சைவசமயத்தின் சிறப்பை உணர்ந்து ஒழுகுவாயாக!"

– இத்தகைய விளக்கம் அமைந்த நூல்!

**'திருவெம்பாவை' - கதிர்மணி விளக்கம்'**

மாணிக்க வாசகர்

மு. கதிரேசச் செட்டியார் (உ.ஆ.)

'திருவெம்பாவை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. திருவெம்பாவை, யாப்பு வகையில் வெண்தளையால் வந்த எட்டு அடிக் கொச்சகக் கலிப்பாவால் ஆனது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூல்முகம், பண்டிதமணியின் வரலாறு, வாழ்த்துரை, முகவுரை' முதலாயின உள்ளன.

திருவெம்பாவை – 20 பாடல்கள். முதற்கண் 'திருவெம்பாவை' வரலாறு சொல்லப்படுகின்றது. அடுத்துப் 'பாடல் – கருத்துரை – பதவுரை – விளக்கவுரை' என விரிவாக அமைந்துள்ளது.

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின் மேல்நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாளென் னேயென்னே
யீதேயெந் தோழி பரிசேலோர் எம்பாவாய்!"

என்பது திருவெம்பாவையின் முதற்பாடல்.

இப்பாட்டுக்குக் 'குறிப்புரை' எழுதிப் 'பதவுரை' தந்து, விரிவான 'விளக்கவுரை' தருகின்றார் உரையாசிரியர்:–

"பாவை நோன்பு மேற்கொண்ட கன்னியருள், வைகறையில் தாமே துயிலுணர்ந்தெழுந்து, உடற்றூய்மை செய்து கொண்டு, நீராய் போதுவார் சிலர், அந்நோன்பு மேற்கொண்டு நீராடுதற்கு, உடன் வருவதாக முன்னை நாளிற்கூறி, உரிய நேரத்தில் எழாமல் உறங்கும் ஒருத்தியைத் துயிலுணர்த்து– முகமாக

அருளிச் செய்யப்பட்டது இத்திருப்பாட்டு. 'வாட்டடங்கண்' எனக் கண்ணுக்கு அடைமொழி கூறியது, வைகறைப் பொழுதில் ஒளியுடைமையும் அகற்சியும் இயல்பின் அமையுமாறு விழிக்கத்தக்க கண்கள், எதிர்மறையான இருளுடைமையும் சுருக்கமும் அமைய மூடப்பட்டுக் கிடத்தல் தக்கதன்று என்னுங் குறிப்புத் தோன்ற நின்றது. விழிப்பு நிலையில் ஒளியுடைமையும் அகன்றிருத்தலும் துயிலும் நிலையில் ஒளியின்மையும் சுருங்கியிருத்தலும் கண்களுக்கு உளவென்பது எளிதினறியத் தக்கது. . . !"

– இவ்வாறு ஒவ்வொரு சொல்லுக்கும் அரிய பொருள் நயம் கூறும் நூல் இது!

## திருவெம்பாவை

*மாணிக்க வாசகர்*

அ. சீநிவாசராகவன் (உ.ஆ)

திருவாசகத்தில் ஒருபகுதி 'திருவெம்பாவை' – திருவாசகத்தைப் பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், மாணிக்க வாசகர் அருளிய 'திருவெம்பாவை' – 20 பாடல்; 'திருப்பள்ளியெழுச்சி' – 10 பாடல். ஆக 30 பாடல்களுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளன.

முதலில், பாட்டுக்குரிய விளக்கத்தைக் கொடுத்து, அதன்பின் பாடலைத் தருகின்றார் உரையாசிரியர். "இறைவனிடத்தில் அன்பு செலுத்தும் கன்னிப் பெண்கள், உண்மையான களங்கம் அற்ற அடியவர்களுக்கு எடுத்துக் காட்டாக நிற்கும் இவர்கள், அவன் அருளை வேண்டுகிறார்கள். பிறகு அவனைப் போற்றுகிறார்கள். இதுவே, திருவெம்பாவையின் மங்கலப் பொருள் கூறுவது!" என இறுதிப்பாடலுக்கு விளக்கம் தருகின்றார் இவர்!

## திருவெம்பாவை (விளக்கம்)

*மாணிக்கவாசகர்*

சி. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.)

'திருவெம்பாவை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 'திருவெம்பாவை' – 20 பாடல்; திருப்பள்ளியெழுச்சி – 10 பாடல் ஆக 30 பாடல்களுக்கு விரிவான விளக்கம் தரப்பட்டுள்ளது.

இது, வானொலிப் பேச்சு ஆதலின், ஒவ்வொரு பாடலுக்கும் விரிவான விளக்கம் உள்ளது. 'பாடல் – விளக்கம் – மறுபடியும் பாடல்' என்றுள்ளது.

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியை . . . "

என்பது முதற்பாடல். இதற்கு உரையாசிரியர் தரும் விளக்கத்தின் ஒரு பகுதி:–

"எல்லா விளக்கும் விளக்காதா என்பது போல, எல்லாச் சோதியும்

பெருஞ்சோதியாக, அதிலும் அரும்பெருஞ் சோதியாகிவிட முடியுமா? சிறு அகல் விளக்குமுதல் நாம் கண்ணாற் காணுகின்ற 'உலகம் உவப்ப வலனோர்பு திரிதரு, மலர்புகழ் ஞாயிறு' அதாவது சூரியன் வரையிலும், உலகிற்கு ஒளி வழங்கும் எல்லாச் சோதிகளும் ஒருகாலைக் கொருகால் குன்றும் நீர்மையுடையனவாகும். ஆனால் அடிமுடி அறியவொண்ணாமல் திருவண்ணாமலையில் சோதிப் பிழம்பாய் எழுந்தருளிக் காட்சிதந்து கொண்டிருக்கும் தடங்கருணைப் பெருங்கடலாம் சிவபெருமான், என்றும் எக்காலத்தும் குன்றாத ஒளியுடையவன்! . . . ."

– இன்னும் விரிவான விளக்கம் உண்டு!

## திருவெம்பாவை - திருப்பள்ளி யெழுச்சி (மூலமும் உரையும்)

*மாணிக்க வாசகர்*

ரா. சண்முக சுந்தரஞ் செட்டியார் (உ.ஆ.)

திருவாசகத்தின் ஒருபகுதி திருவெம்பாவை – திருப்பள்ளியெழுச்சி. இதன் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில், அரிய பல கருத்துக்களைக் கொண்ட 'தோற்றுவாய்' உள்ளது. அவ்வாறே, 'திருப்பள்ளியெழுச்சி'ப் பகுதிக்கு முன்னும் ஒரு 'தோற்றுவாய்' தரப்பட்டுள்ளது.

*"ஆதியும் அந்தமுமிலா அரும்பெருஞ்சோதியை"*

எனும் முதற்பாடலுக்கு உரைதர வந்த இவ் உரையாசிரியர், பல்வேறு விளக்கமெலாம் தந்து, இறுதியில் இப்படி முடிக்கின்றார்:

"இத்திருப்பாட்டில், கேவல நிலையிலுள்ள உயிர், பாடிக் கேட்டும், துயிலுணராமையான், ஆணவ மலத்தால் கட்டுண்டு இருள்மூடி இறைவனை நினையாது வாளா கிடக்குமெனவும்; சுத்த நிலையிலுள்ள உயிர், இறையருட் பாடலைக் கேட்டஞான்றே அன்பின் பெருக்கினால், தன்னுடலை மறந்து, உலகு நெறி விட்டுச் சிவநெறி புகுந்து சிவானந்தத்தில் மூழ்கித் திளைத்து நிற்கும் பான்மையதெனவும்; இடைப்பட்ட சகலநிலையிலுள்ள உயிர், விரதங்காப்பதும், ஆண்டவனை அருட்பாடல்களாற் துதித்தும் வழிபாடு செய்தும் புண்ணியப் பேற்றினையடைதற்கு முயலுஞ் சிறப்புடைத் தெனவும் உணர்த்தப்பட்டன!"

'திருப்பள்ளியெழுச்சி'க்குரிய 'தோற்றுவாய்' என்ற தலைப்பில், "உயிர்கள் அகவிருணீங்கி அருளோடுங் கூடி நிற்றற்கு விழைந்தனவாய், இறைவனைத் திருப்பள்ளியினின்றும் எழுந்தருள்கவென்று வேண்டுவதே, திருப்பள்ளியெழுச்சியின் கருத்தாகும்!" என்று இவ் உரையாசிரியர் குறிப்பிட்டுப் பின் ஒவ்வொரு பாடலுக்கும் பொருளும் அரிய விளக்கவுரையும் தருகின்றார்.

திருவெம்பாவை – திருப்பள்ளி யெழுச்சி பற்றி விரிவான விளக்கமறிய இந்நூல் பெரிதும் உதவும்.

## திருவையாற்றுச் செம்பொற் சோதியர் வண்ணம்.

*பு.அ. வேங்கடேச நாயகர் (ப.ஆ.)*

'வண்ணம்', விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'புன்னாக வராளி' இராகம், 'ஆதி' தாளத்தில் பாடப்படும் பாட்டு:-

*"கடகரியன் பேற்பிறந்த இளமைபிரி யாக்குழந்தை*
*மதகரி போற்றவழ்ந்து மயில் முதுகில் வீற்றிருந்த*
*தண்டைக்கால் மடியிலேறு மின்பத்தேனளிகளேறு*
*தும்பைப்பூ முடியிலேறு கொன்றைத்தார் புனையுமார்பர்"*

என்று தொடங்கும் இவ்வண்ணப்பாடல், பின்வரும் சந்தம் கொண்டது:

*"தனனதன தாத்ததந்த தனனதன தாத்ததந்த*
*தனனதன தாத்ததந்த தனனதன தாந்ததந்த*
*தந்தத்தா தனனதான தந்தத்தா தனனதான*
*தந்தத்தா தனனதான தந்தத்தா தனனதான*
*தனைதத்த தானதன தந்தனா!"*

## திருவொற்றியூர்த் தியாகராசர் வண்ணம்

*பு.அ. வேங்கடேச நாயகர் (ப.அ)*

'வண்ணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

*"சீருலவுந்திங் களுங்கட்டுங்*
*கடுக்கைப்பூ வுமிக்கானப*
*கீரதி யுஞ்செஞ் சடைக்கற்றை மீதிலணிகர்த்தர்*
*சிறுபாலன்மீது பொருகாலனார்மெய்*
*சிதைவாக மோதி யுதைவீசு பாதர் . . ."*

என்று தொடங்கும் இவ்வண்ணம், 'யமுனா கல்யாணி' இராகம் – 'ஆதி' தாளத்தில் பாடப்படுவது.

*"தானனதந்தந் தனந்தத்தந்*
*தனத்தத்தா தனத்தானன*
*தானனதந்தந் தனத்தத்த தானதனதத்த*
*தனதானதான தனதானதான*
*தனதானதான தனதானதான*
*தனதனதானை தனனதானா"*

என்ற சந்தத்தில் பாடத் தகுவது!

### தில்லை நடராசப் பெருமானின் ஆறுகால் அபிடேக விளக்கம்

*மா. சிவகுருநாதபிள்ளை (ப.ஆ.)*

இந்நூலில், 'ஆறுகால அபிடேக விளக்கம், தேவநாள், திருஉருவம், ஆறுஅபிடேகக் காலங்கள், திருக்கோயில் அமைப்பு, சித்சபையின் தத்துவம், நாற்கோபுரங்களின் சிறப்பு, ஐந்து சபைகள், தலதேவாரப் பதிகங்கள், ஆடல்வல்லான் அஷ்டோத்திர நாமாவளி' ஆகியன உள்ளன.

நடராசப் பெருமானின் 'தூலபஞ்சாக்கர வடிவம், முத்தி பஞ்சாக்கர வடிவம், ஐந்தொழில் ஆற்றும் வடிவம் – ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது.

சிதம்பரத்தைப் பற்றிய திருமுறைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

*"ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள*
*அளப்பெரும் கரணங்கள் நான்கும்*
*சிந்தையே யாக, குணம் ஒரு மூன்றும்*
*திருந்து சாத்துவிகமே ஆக*
*இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த*
*எல்லையில் தனிப்பெருங் கூத்தின்*
*வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து*
*மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்!"*

என்பது இதில் காட்டப்பட்ட பெரிய புராணப் பாடல்!

தில்லையைப் பற்றியும் நடராசதத்துவம் பற்றியும் அறிய விரும்புவார்க்குப் பெரும் பயன்தரும் நூல் இது!

### துர்க்கை அம்மன் பாடல்கள்

*ச. மெய்யப்பன் (ப.ஆ)*

இந்நூலில், 'விநாயகர் ஸ்தோத்திரம்' முதல் 'ஸ்ரீ துர்க்கை அம்மன் பாடல்கள்' வரை உள்ளன. இவற்றில் 'நவராத்திரி பாடல்கள்' ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு பாடல் வீதம் 9 பாடல்கள் உள்ளன.

*"பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை*
*நாலும் கலந்துனக்கு நான்தருவேன் – கோலஞ்செய்*
*துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்*
*சங்கத் தமிழ்மூன்றும் தா!"*

எனும் பாடல் விநாயகர் ஸ்தோத்திரத்தில் வருவது.

### தேவார அருள்முறைத் திரட்டு (விளக்க உரையுடன்)

*சம்பந்தர் முதலானோர்*

ப. இராமநாதபிள்ளை (உ.ஆ)

இந்நூலில் மூவர் தேவாரத்திலிருந்து 99 திருப்பாட்டுக்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. சம்பந்தர்– 23; அப்பர் – 64; சுந்தரர் – 12. உரையாசிரியர், இவற்றுக்குச் சிறந்த பொழிப்புரையும், விளக்கவுரையும் தந்துள்ளார். சில இடங்களில் இலக்கணக் குறிப்புக்களும் காட்டப்பட்டுள்ளன. இவ்விளக்கவுரை, சித்தாந்த நுண் பொருள்களைப் பல்வேறு எடுத்துக்காட்டுக்கள் வாயிலாகவும், ஒப்புமை வாயிலாகவும் நன்கு தெளித்துக் காட்டுகிறது. இவ் உரையாசிரியர் காட்டும் மேற்கோள் பாடல்கள், ஏறத்தாழ 350க்கும் மேலாகும். மேலும் இதன்கண் எடுத்தாளப்பட்ட நூல்கள் 33.

இந்நூலில் வரும் உட்தலைப்புக்கள் : பதி முதுநிலை; உயிரவை நிலை; இருள் மலநிலை; அருளது நிலை; அருளுரு நிலை; அறியு நெறி; உயிர்விளக்கம்; இன்புறு நிலை; அஞ்செழுத்தருணிலை; அணைந்தோர் தன்மை.

'தோடுடைய செவியன்' என்னும் சம்பந்தரின் முதற்பாடலுக்கு விளக்கம் கூறுமிடத்து,

"சம்பந்தப் பெருமானார்க்குச் சிவபெருமானார் அவர்தம் முன்னை வழிபாட்டுக் கிரங்கித் திருவருள் புரிந்ததாவது, தம் ஒப்பில் ஒரு கூறாய மலைக்கொடியைக் கொண்டு திருமுலைப்பால் ஊட்டுவித் தருளினமையாகும். அதனால் உலகம் பெற்ற ஒப்பரிய பெரும் பேறு 'திருநெறிய தமிழாகிய திருமாமறை' யாகும். அம் மாமறையின் முதற்றிருப்பாட்டே இதுவாகும். செந்தமிழ்த் திருமாமறைகள் திருமுறைகள் எனவும் வழங்கப்படும். அத் திருமுறைகள் பன்னிரண்டாகும். செந்தமிழும் சிவனெறியும் முறையே உடலும் உயிருமாகும். செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்கள் நெடிலுங் குறிலுமாகப் பன்னிரண்டாகும். இப்பன்னிரண்டில் நெடில் ஏழாகும். குறில் ஐந்தாகும். இம்முறை போன்று மூவரருளிய திருமுறைகள் ஏழாகும். இவை 'திருத் தேவாரம்' எனவும், 'அடங்கன் முறை' எனவும் வழங்கப்படும். ஏனைய திருமுறைகள் ஐந்தாகும். இவ்ஐந்து திருமுறைகளும் ஆண்டவன் உள்ளிட்டு இருபத்து நால்வரால் பாடியருளப் பட்டனவாகும். எனவே இப் பன்னிரு திருமுறைகளும், உடலும் உயிருமாய்த் திகழும் செந்தமிழ் பொழிக்கும் சிவனெறிக்கும் உயிர்க்குயிராய்த் திகழ்வனவாகும்!" என்கின்றார்.

– இவைபோல் அரிய கருத்துக்கள் இந்நூலில் உள்ளன!

## தேவாரமணி

*ராய. சொ. (தொ. ஆ.)*

'தேவாரம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. சம்பந்தர் பாடியவை 4147; அப்பர் பாடியவை; 3066; சுந்தரர் பாடியவை 1026; ஆகப் பாடல்கள் 8239. இவற்றில் பொறுக்கி எடுத்த 300 பாடல்கள் கொண்டது இந்நூல். சம்பந்தர்

பாடல் – 100; அப்பர் பாடல் – 150; சுந்தரர் பாடல் 50 ஆகும்.

இந்நூலின் தொடக்கத்தில் 'நூன்முகம்' உள்ளது. அதில் மேலே கூறியன சுட்டப்பட்டுள்ளன. முதலில் திருநாவுக்கரசு சுவாமிகள் பாடல். ஒவ்வொரு பாடலுக்கும் அடிக்குறிப்பாக அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது.

*"கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்*
*பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்*
*தனிமு டிகவித் தாளும்அ ரசினும்*
*இனியன் தன்அடைந் தார்க்கு இடை மருதனே!"*

என்பது அப்பர் பாடிய திருக்குறுந்தொகை.

இதற்கு அடிக்குறிப்பாக அமைந்த பொருள் :– கட்டிபட்டகரும்பு – கருப்பஞ் சாற்றில் விளைந்த கட்டி; பனி – குளிர்ச்சி; பாவை நல்லார் – பதுமை போன்ற பெண்கள்; தனி முடி – ஒப்பற்ற கிரீடம்; கவித்து – சூடி; இடைமருதன் – திருவிடை மருதூரை ஆளும் இறைவன்.

– இவ்வாறே பிறவற்றிற்கும் குறிப்பு உள்ளது.

## தேவாரம் அடங்கன் முறை

*சம்பந்தா, அப்பா, சுந்தரா*

மயிலை இளமுருகனார் (தொ. ஆ)

'தேவாரம் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. மூவர் தேவாரங்களைப் பண்முறை, தலமுறை, வரலாற்றுமுறை என மூவகைகளில் அடைவு செய்வர். அதற்கு 'அடங்கல் முறை' என்று பெயர். அடங்கல் – தொகுப்பு.

இந்நூலில், சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தேவாரப் பதிகங்கள் அனைத்தும் – மூலமட்டும் உள்ளன. தொடக்கத்தில், 'அரும் பொருளகராதி' பல பக்கங்களில் சொல்லப்பட்டுள்ளது. மிகமிகப் பயனுடையது.

"அகச் சமயிகள், அகச் சான்றுகள், அகத்துறைப் பாடல்கள், அகப்பூசை, அபிஷேகப் பொருள்கள், இசைக் குழிப்பு, இயற்கை வர்ணனை, இலக்கியச் சுவை" எனப் பல அரிய குறிப்புக்கள் அடங்கியுள்ளன.

அடுத்து, 'முதல் திருமுறை'யிலிருந்து, 'ஏழாம் திருமுறை' வரையிலான பாடல்கள், தொடர் எண்களால் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு திருமுறை இறுதியிலும், பாடப்பட்ட பண்கள் – எந்தெந்தப் பதிகங்களில்; அற்புதத் திருப்பதிகங்கள் எத்தனை என்ற விவரமும் உள்ளது.

நூலின் இறுதியில், சம்பந்தர் சரித்திரம், அப்பர் சரித்திரம், சுந்தரர் சரித்திரம் சொல்லப்பட்டுள்ளன. அடுத்துத் 'தலச் சிறப்பகராதி' விரிவாக இடம்

பெற்றுள்ளது.

*"நாளும் நம்முடை நாள்க ளறிகிலோம்*
*ஆளும் நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்*
*ஏழைமைப் பட்டிருந்து நீர் நையாதே*
*கோளிலி அரன்பதமே கூறுமே!"*

என்பது ஐந்தாம் திருமுறை – திருக்கோளிலி – அப்பர் பெருமான் பாடியது. இது, தொடர்வரிசை எண்ணில் 5802 ஆகக் குறிக்கப்பட்டுள்ளது.

மூவர் தேவாரத்தை முழுதும் அறியப் பயன்படும் அரிய நூல் இது!

# 'ந'

## நடராசபதி மாலை

*இராமலிங்க அடிகளார்*

'மாலை' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று!

மாலைபோலத் தொடுக்கப்பட்டுப் பாடப்படுவது. நடராசபதி – தில்லை நடராசப் பெருமான். அவர்மீது பாடப்பட்டது.

இது, திருவருட்பாவில் ஆறாம் திருமுறையில் உள்ளது. பன்னிருசீர்க்கழிநெடி ஆசிரிய விருத்தப்பாவால் அமைந்தது. 34 பாடல்கள் கொண்டது.

இந்நூலில் நடராசப் பெருமானின் பல்வேறு இயல்புகள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. பாடலின் இறுதி, 'நடராச பதியே' என்று முடிகின்றது. சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பல இடம்பெற்றுள்ளன.

*"அருள்நிலை விளங்குசிற் றம்பலம் எனுஞ்சிவ சுகாதீத வெளிநடுவிலே*
*அண்டபகிர் அண்டகோ டிகளும் சராசரம்*
*அனைத்தும்அவை ஆக்கல் முதலாம் பொருள்நிலைச் சத்தரொடு சத்திகள்*
*அனந்தமும்பொற்பொருவி ளங்கிலங்கப்*
*புறப்புறம் அகப்புறம் புறம்அகம் இவற்றின்மேல்*
*பூரணா காரமாகி . . . !"*

என்பது அவற்றில் ஒன்று!

## நடராசர் சதகம்

*ஸ்ரீ சிதம்பர நாத முனிவர்*

சதகம் = நூறு. தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று!

'கோயில்' எனச் சிறப்பிக்கப்படும் சிதம்பரம் நடராசர் மீது பாடப்பட்டது.

இந்நூலின் தொடக்கத்தில் 'காப்புச் செய்யுள் – 1; அவையடக்கம் – 1; நீங்கலாக மொத்தம் 103 செய்யுட்கள் உள்ளன. பாடல்கள் அனைத்தும் பதினான்கு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவால் ஆனவை.

இதன்கண், கோயில் அமைப்பு, நாள் வழிபாடு, வேள்விகள், குடமுழுக்குகள், நைவேத்திய அமைப்புகள், அபிடேகம், ஆராதனை, பஞ்சபூதத்தலம், அட்டமூர்த்தி தலங்கள், ஆகமங்கள், புராணங்கள், திருநீறு அணிதல் முதலிய பல்வேறு செய்திகளும் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

"இந்துதர நம்சமய விரதம்எழு மூன்றதில் எழிற்சோ மதின மாதிரை
ஏர்தரும் உமாமகேச்சுரவிரத மணவிரதம்
இடபவிர தம்சி வநிசி. . .!

என்பது சிவபெருமானுக்குரிய விரதங்களைக் கூறும் பாடல். இவ்வாறே பிறவும்!

## நந்தனார் கீர்த்தனை

கோபால கிருஷ்ண பாரதி

'கீர்த்தனை' என்பது பண்ணோடு பாடக்கூடியது.

'நந்தனார்', சைவ சமய நாயன்மார் அறுபத்து மூவரில் ஒருவர். அவரது வரலாறு, பெரிய புராணத்தில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. அவரது பெருமையை விளக்கும் வகையில் கீர்த்தனையாக அமைந்த நூல் இது.

இந்நூலில் நந்தானாரின் வரலாறு, கீர்த்தனை அதாவது 'பல்லவி - அநுல்லவி - சரணங்கள்' என்ற முறையில் சொல்லப்பட்டதோடன்றி, ஆங்காங்கு இடையிடையே கதைத் தொடர்பு கொண்ட 'வசனமு'ம் சொல்லப்பட்டுள்ளது.

பெரிய புராணச் செய்யுட்களும் தக்க இடங்களில் இடம்பெற்றுள்ளன. நாடகமாக நடிப்பதற்கு ஏற்றது.

"தில்லைச் சிதம்பரத்தை யொருதர மாகிலும்
தெரிசித்து வாவென் றுத்தாரம் தாருமையா!"

என்பது 'பல்லவி'.

"தில்லைச் சிதம்பரத்தைக் கண்டால் பிறவிப்பிணி
இல்லையென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன்!"

என்பது 'அநுபல்லவி'.

இதன் இராகம் : நாதநாமக் கிரியை; தாளம் : ரூபகதாளம். இவ்வாறே கீர்த்தனைகள் அமைந்துள்ளன.

## நவரச மஞ்சரி

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

நவம் + ரசம் + மஞ்சரி – நவரசமஞ்சரி. நவம் – ஒன்பது; ரசம் – சுவை; மஞ்சரி – தொகுப்பு. 'வீரம், அருவருப்பு, பெருநகை, அச்சம், கோரம், கருணை, சாந்தம், அற்புதம், சிங்காரம்' என்ற 9ம் 'நவரசம்' எனப்படும். இவை, ஒவ்வொரு பகுதிக்கும் 9 கவி வீதம் 9 பகுதிக்கும் (9 x 9) 81 பாடல்கள் உள்ளன. அவ்வப்

பகுதிக்கேற்ற சுவைகளை நூலாசிரியர் தம் கருத்தோடும், செந்தில் முருகப் பெருமான் தொடர்போடும் பொருந்தக் கூறியுள்ளார்.

இந்நூலில், தன்னலம் பேணாமை, மக்கள் மீது இரக்கம் கொண்டு காத்தல், இறையருட் பேற்றை விளக்குதல் ஆகியன சொல்லப்பட்டுள்ளன. திருவருட்பேறு பெற்றவர்கள் உலக நன்மையைப் பேணாமல், தாம் மட்டும் முத்தியடைய வேண்டும் என்று எண்ணக் கூடாது; திருஞான சம்பந்தர், சைவசமயத்தைப் போற்றித் திருநீற்றின் பெருமையை வளர்த்ததுபோல, மக்கட் சமுதாயம் உய்வதற்குப் பாடுபடவேண்டும் என்பன போன்ற கருத்துக்கள் உள்ளன.

இந்நூலில் 81 பாடல்கள் தவிரத் தொடக்கத்தில் 1ம்; இறுதியில் 1ம் ஆக 2 செய்யுட்கள் உள்ளன.

“பத்திநன் னெறியை விட்டுப்
பலவிதம் பகர்ந்து ஞான
சித்தியை இகழும் தீயர்
திரட்படைச் செந்நீர் ஆறு
தத்தவெங் களத்திற் போர்செய்
தனிப்பெருந் தகைசான் றுள்ளார்
சத்திவேற் குமரன் செந்திற்
றலத்துயர் வுணர்கின் றோரே!”

என்பன போன்ற பாடல்களைக் காணலாம்.

## நவவீரர் நவரத்தினக் கலிவிருத்தம்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

முருகப் பெருமானின் 9 வீரர்களாகிய 'வீரவாகுதேவர், வீரகேசரி தேவர், வீரமகேந்திரதேவர், வீரமகேசதேவர், வீரபுரந்தரதேவர், வீரராக்கத தேவர், வீரமார்த்தாண்டதேவர், வீராந்தக தேவர், வீரதீர தேவர்' என்ற தலைப்பில், முறையே நவரத்தினங்களான 'மாணிக்கம், தரளம், புட்பராகம், கோமேதகம், வைடூரியம், வயிரம், மரகதம், பவளம், நீலம்' என்பன அமையக் கலி விருத்தப்பாவால் பாடப்பட்டது. 9 பாடல்கள் கொண்டது.

“சீர றாமுருக வேளுறை செழுமை
ஆரறா நிலய வாரியி லமரேண்
நாரறா வுழுவ லேறிடு நலிவில்
வீரவா குவெனும் வீரனை விழைவாம்!”

என்பன போன்ற பாடல்கள் உள்ளன.

## நால்வர் அருண்மாலை

இராமலிங்க அடிகளார்

'மாலை' என்பது மாலைபோலத் தொடர்ந்து பாடப்படுவது. சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

'நால்வர்' என்பது சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனும் நால்வரைக் குறிக்கும்.

அருள் + மாலை = அருண்மாலை. நால்வரின் அருளைப் பெற நினைந்து பாடப்பட்ட பாமாலை.

இது, திருவருட்பாவில் ஐந்தாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது.

(1) ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை – 11 பாடல்கள்,

(2) ஆளுடைய அரசுகள் அருண்மாலை – 10 பாடல்கள்

(3) ஆளுடைய நம்பிகள் அருண்மாலை – 10 பாடல்கள்

(4) ஆளுடைய அடிகள் அருண்மாலை – 10 பாடல்கள்

'ஆளுடைய பிள்ளையார்' என்பது திருஞானசம்பந்தரைக் குறிக்கும். கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆனது. ஞானசம்பந்தரைத் தம் குருவாகக் கருதிய அடிகளார், அவரைச் 'சற்குரு மணியே' என்று போற்றுகின்றார்.

சம்பந்தர் இறையருளால் செய்த விந்தைகளைப் பற்றியும் எடுத்துரைக்கின்றார். சைவசித்தாந்தக் கருத்துக்களும் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

"பொத்திய மூல மலப்பிணி தவிர்க்கும்
 பொருள்அரு ளனுபவம் அதற்குப்
பத்தியம் உயிரின் அனுபவம் இதனைப்
 பற்றறப் பற்றுதி இதுவே
சத்தியம் எனஎன் தனக்கருள் புரிந்த
 தனிப்பெருங் கருணைஎன் புகல்வேன்
முந்தியற் சிவிகை இவர்ந்தருள் நெறியின்
 முதலர சியற்றிய துரையே!"

என்பது சம்பந்தரைப் பற்றியது.

இவ்வாறே 'ஆளுடைய அரசுகள்' எனப்படும் திருநாவுக்கரசைப் பற்றியும்; 'ஆளுடைய நம்பிகள்' எனப்படும். சுந்தரரைப் பற்றியும், 'ஆளுடைய அடிகள்' எனப்படும் மாணிக்க வாசகரைப் பற்றியும் பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொருவர், வாழ்விலும் நிகழ்ந்த அதிஅற்புதச் செயல்கள் அழகுறச் சொல்லப்பட்டுள்ளன.

பார்க்க:–

திருவருட்பா

## நால்வர் நான்மணிமாலை

சிவப்பிரகாச சுவாமிகள்

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் 1.

நால்வர் – சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர். நான்மணிமாலை – நான்குவித மாணிக்கங்களால் ஆன மாலை. ஈண்டு, 'வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல்' எனும் நால்வகை யாப்பினால் பாடப்பட்டு அந்தாதியாகத் தொடுக்கப் பட்டதால் இப்பெயர் பெற்றது.

நூலின் தொடக்கத்தில் 'மங்கல வாழ்த்து'ச் செய்யுள் 1 தவிரச் சம்பந்தருக்கு – 10; அப்பருக்கு – 10, சுந்தரருக்கு – 10; மாணிக்க வாசகருக்கு – 10 என 40 பாடல்கள் உள்ளன.

'சம்பந்தர்' பற்றிய பாடல்களில், அவன் 'ஞானப்பால் உண்டது' முதல், அவர் நிகழ்த்திய பல அற்புதச் செயல்கள் வரை இயம்பப்படுகின்றன.

அப்பரைப் பற்றிய 10 பாக்களில், இறைவன் அருளால் குடல் நோயால் துன்புற்றது, கல்லையே புணையாகக் கொண்டு கடல் கடந்தது எனப் பல்வேறு நிகழ்ச்சிகள் சொல்லப்பட்டுள்ளன.

சுந்தரரைப் பற்றிய 10 பாக்களில், இறைவன் தடுத்தாட் கொண்டது, தூது சென்றது முதலான பல்வேறு வரலாற்றுச் செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

மாணிக்கவாசகரைப் பற்றிய 10 பாக்களில், 'வடமொழி மறையைவிடத் திருவாசகம் பலவகையிலும் உயர்ந்தது' போன்ற அரிய செய்திகள் இயம்பப்பட்டுள்ளன.

பக்திக்கு வித்தாகவும், கற்பனைக்கு ஒரு களஞ்சியமாகவும் விளங்கும் நூல் இது.

"வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகம்இங்(கு) ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொருமணற் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்(பு) எய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே!"

என்பன போன்ற கருத்துக்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

## நெஞ்சுவிடு தூது

உமாபதி சிவாசாரியார்

தமிழில் உள்ள 96வகைச் சிற்றிலக்கியங்களில் 'தூது'ம் ஒன்று. இந்நூலாசிரியர் தம்மைத் தலைவியாகவும், தம் குருமூர்த்தியாம் மறைஞான சம்பந்தரைத் தலைவராகவும், அவர் திருவுலாப் போதரக்கண்டு, தாம் அவரிடத்து ஈடுபட்டதாகவும், ஈடுபடுதற்குக் காரணமாய அத் தலைவரது மாலையை வாங்கி வரத் தன் நெஞ்சினைத் தூதாக விடுத்திருப்பதாகவும் இந்நூலை அருளியுள்ளார். சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கில் இதுவும் ஒன்று.

இந்நூல் 129 கண்ணிகளை உடையது; கலிவெண்பாவால் ஆனது.

இந்நூல் கூறும் பொருளை 6 வகையாகப் பிரிக்கலாம்: (1) தலைவனது பெருமை; (2) தமது சிறுமை; (3) திருஉலாப் போதல்; (4) தாம் பெற்ற பேறு; (5) தகவும் அணுகும் நெறியும்; (6) போற்றலும் புகலலும்.

இந்நூலில் திருக்குறள், திருவுந்தியார் முதலான நூற்கருத்துக்கள் பல இடம்பெற்றுள்ளன.

"... தான் என்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லாம்
நீத்தான் நினைவுவே றாக்கினான்...!"

என்பன போன்ற சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பல உள்ளன.

## நெஞ்சுறுத்த திருநேரிசை

இராமலிங்க அடிகளார்

நெஞ்சினை நோக்கிக் கூறுவதாக அமைந்தது; 'நேரிசை வெண்பா' என்ற யாப்பில் பாடப்பட்டது.

திருவொற்றியூர் இறைவன் மீது பாடப்பட்டது.

திருவருட்பா, இரண்டாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. இதன்கண் 26 வெண்பாக்கள் உள்ளன. அந்தாதித் தொடையில் அமைந்தது.

"நாடும் சிவாயநம என்று நாடுகின்றேன்
கூடும் தவநெறியில் கூடியே – நீடும்அன்பர்
சித்தமனைத் தீபகமாம் சிற்பரனை ஒற்றியூர்
உத்தமனை நெஞ்சமே ஓது!"

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:–

திருவருட்பா

## நெஞ்சொடு புலம்பல்

பட்டினத்தார் (பிற்காலத்தவர்)

அக இலக்கியத்தில் 'நெஞ்சொடு கிளத்தல்' என்ற துறை உண்டு. அதுபோல ஈண்டு, 'நெஞ்சொடு புலம்பல்' அமைந்துள்ளது. அஃதாவது, தன் நெஞ்சுக்குக் கூறுவது போல் அமைத்துப் பாடுவது.

இதன்கண் 4 அடிப்பாடல்கள் 37 உள்ளன.

"தித்திக்கும் தேனைத் தெவிட்டாத தெள்ளமுதை
முத்திக்கு வித்தான முப்பாழைப் போற்றாமல்
பற்றிப் பிடித்து இயமன் பாசத்தால் கட்டும் வண்ணம்
சுற்றி இருக்கும்வினை சூழ்ந்தனையே நெஞ்சமே!"

என்பது அவற்றில் ஒன்று!

## நெஞ்சொடு மகிழ்தல்

பட்டினத்தார் (பிற்காலத்தவர்)

இறைவன்பால் தன்னைச் செலுத்திய நெஞ்சின் செயல்பாடு குறித்து மகிழ்ந்து பாடியது.

இதில், ஈரடி கொண்ட 32 பாடல்கள் உள்ளன. பாடல்தோறும் 'நெஞ்சமே' என முடிவது.

"மேலாகி எங்கும் விளங்கும் பரம்பொருளில்
பாலூறும் மென்சுவைபோல் பற்றினையே நெஞ்சமே!"

என்பது அவற்றில் ஒன்று!

# 'ப'

## பக்திவச ஞானப்பாடல்

வெ. சிவகுருநாதன்

இதில், 'சித்தி விநாயகர் தோத்திரம்' முதல் 'வையகம் வாழ்க' வரை பல பகுதிகள் உள்ளன.

'மெய்ச் சைவன் யார்?' எனும் பகுதியில்,

"இரவும் பகலும் அஞ்செழுத்தோதி இதயமாவான்!"

"உண்மை தவறான் உலகெலாம் உய்யப் பணிபுரிவான்!" என்பது இவ் ஆசிரியர் கூற்று. இவை போல் பல உள்ளன.

## பஞ்சதிகார விளக்கம்

சிதம்பர சுவாமிகள்

பஞ்சதிகாரம் – ஐந்து அதிகாரம்.

அதிகாரம் 1க்குப் 10 பாடல் வீதம் 50 பாடல் கொண்டது.

ஆனால், 'விநாயகர் காப்பு'ச் செய்யுள் 1 தவிர, இந்நூலில் 51 பாடல்கள் உள்ளன. இவற்றில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன.

"மாயையுங்,கன் மமும், அந்தச் சகலத்தோ டொழியும்
வழுத்தியகே வலத்துடன் ஆணவமாயு மிவைதாம்
ஆயஅசுத் தம்மிவைக ளகன்றதுவே சுத்தம் . . . !"

என்பன போன்ற கருத்துக்கள் உண்டு!

## பஞ்சாக்கரப் பஃறொடை

பேரூர் ஸ்ரீ வேலப்ப தேசிகர்

பண்டார சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. வெண்பாவின் ஒருவகையான பஃறொடை வெண்பா யாப்பில் பாடப்பட்டது. 12 அடிக்கு மேற்பட்டதால் 'கலிவெண்பா' யாப்பு எனப்படும். 42 கண்ணிகள் கொண்டது. பஞ்சாக்கரம் – திருவைந்தெழுத்து.

பெத்தம், முத்தி இரண்டு நிலைக்கும் பயன்படும் திருவைந்தெழுத்தின்

வகைகளையும், அதனுடைய உட்பொருளையும் உணர்த்தி, அவை ஓதுமுறையே நிற்குமுறையாவதையும் ஐந்தவத்தைகளும் தசகாரியங்களும் ஆக அவை அனுபவிக்கப் பெறுதலையும் அறிவித்த பெருமைக்காக ஆசிரியர் திருவடிகளை வணங்குமுறையில் அமைந்துள்ளது.

உயிர்களுடைய மூவகை நிலைகளையும், அவை மலம் மாயை கன்மங்களிலிருந்து வீடுபெற வேண்டியதன் இன்றியமையாத் தன்மையையும், அதற்குரிய ஒரே சாதனம் ஐந்தெழுத்தை நெஞ்சத்து அழுத்துதலே என்பதையும், அவ் ஐந்தெழுத்தையும் எப்படி ஓதவேண்டும், எங்ஙனம் நிற்க வேண்டும் என்பதையும், ஓதலுக்கும் நிற்றலுக்கும் உள்ள இயைபு எப்படிப்பட்டது, அதனால் பெறும் பயன் யாது என்பதையும் அறிவிப்பது.

"அறியாமை யானீங்கி அன்புருவ மாகப்
பிறியாதே நிற்கும் பெரிய – அறிவே!"

என்பன போன்ற தத்துவக் கருத்துக்கள் உள்ளன.

## பட்டினத்தார் பாடல்கள்

பட்டினத்தார் (பிற்காலத்தவர்)

பட்டினத்தார் தம் சீடர் பத்திரகிரியார் முத்தியடைந்தபின், திருத்தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பாடினார். அப்படி அவர் சென்ற திருத்தலங்கள்:–

திருத்தில்லை; திருச்செங்கோடு, திருவிடைமருதூர், திருவொற்றியூர், திருக்கழுக்குன்றம், திருக்காளத்தி, திருக்கைலாயம், மதுரை, திருவெண்காடு, திருவாரூர், திரு இரும்பையூர், திருவையாறு, திருக்குற்றாலம் முதலியனவாகும். இத்தலங்களில் பாடிய பாடல்கள் பல!

தம் அன்னையார் இறந்தபோது, 'ஐயிரண்டு திங்களாய்' எனத் தொடங்கும் 10 பாடல்கள் பாடியுள்ளார்.

"காலன் வருமுன்னே கண்பஞ்சடை முன்னே
பாலுண் கடைவாய்ப் படுமுன்னே – மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு!"

என்பது திருக்குற்றால நாதரைப் பற்றியது!

## பண்டார சாத்திரம் : அனுபோக வெண்பா (உரையுடன்)

ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள்

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.)

'பண்டார சாத்திரங்கள்' பதினான்கில் ஒன்று. 'அனுபோக வெண்பா'.

'அனுபோகம்' என்பது ஒன்றின் தோய்ந்து ஒன்றிய காலத்து உளதாம்

பயிற்சியின் மிகுதி. ஈண்டுச் சிவதன்மத்திலும் சிவானுபவத்திலும் திளைத்து விளைந்த பயிற்சி நிலைகளைக் கூறுவதாக, வெண்பா யாப்பால் அமைந்துள்ளமையின் 'அனுபோக வெண்பா' எனப் பெயர் பெற்றது.

இது, 218 வெண்பாக்கள் கொண்டது. இச் செய்யுட்கள், தம் நெஞ்சுக்கும், பரிபாகமுற்ற சீடர்களுக்கும், உலகத்தவர்களுக்கும் உரைக்கும் பாங்கில் அமைந்துள்ளன. சிவஞான போதம் முதலிய ஞான சாத்திரங்களை அனுபவத்திற்குக் கொண்டு வரும் போது விளையும் ஐயங்களை அகற்றும் முறையிலும் அமைந்துள்ளன.

*"அரற்கோ சறுவிக் கினமாகு மாவி*
*நரற்கோ சிறிதறிவை நண்ணும் – பரக்குமருள்*
*ஆவியே யங்கத்தைப் பற்றியறி யரவேல்*
*தேவையே யில்லையங்கந் தேர்" (111)*

எனும் இப்பாடலுக்கு, உரையாசிரியர் தரும் பொருள்:–

"சிவபரம் பொருளோ எல்லாம் அறியும் இயல்பினதாம். ஆன்மாக்களாகிய மக்களோ சிற்றறிவுடையவர்களாவர். சர்வ வியாபகமான திருவருளை உயிர் உடலைப் பற்றி நிற்கும் போதே நீ அறிய மாட்டாயாயின் இவ்வுடல் உனக்குத் தேவையேயில்லை எனத் தெளிவாயாக?"

இதன் கருத்துரையாக "உடலெடுத்ததன் பயன், எங்கும் பரந்துள்ள திருவருளைப் பெற்றுணர்தலேயாம்!" என்று குறிப்பிடுகின்றார் இவ்உரையாசிரியர்.

இவ்வாறே பிறபாடல்களுக்கும் விளக்கம் உள்ளது.

**பண்டார சாத்திரம் : சித்தாந்தப் பஃறொடை (உரை)**

*ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள்*

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ)

'சித்தாந்தப் பஃறொடை' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல் 'முகவுரை'யில், 'நூல் அமைப்பு, தனிச்சிறப்பு' சொல்லப்பட்டுள்ளன. பாடல், பகுதிபகுதியாகப் பிரிக்கப்பட்டுப் பொருளும் விளக்கமும் தரப்பட்டுள்ளன.

*". . . . . . . . . . . . . . பூண்பாலாம்*
*மெய்யா மடந்தை யெனவிரும்பி மோகமாய்ச்*
*செய்யா நலங்களெல்லாஞ் செய்வித்து – மையறுருங்*
*காய மொருவருமே காணாமல் ஆலயத்தில்*
*ஏயு நெறியு மியற்றாமல் . . . . மலத்துட்டனன்றோ?"*

எனும் பகுதிக்கு இந்நூல் உரையாசிரியர் பின்வருமாறு உரைதருகின்றார்:

"பூணப்பெறும் பகுதியாகிய உடம்பேயாகும் இம்மடந்தை என்று விரும்பி மோகித்து, பிறர் செய்ய இயலாத அழகுகளையெல்லாம் செய்வித்து, மயக்கத்தை விளைவிக்கும் உடலை ஒருவருமே காணாமலும், சிவாலயத்தில் செய்யத்தக்க சரியையாதி நெறிகளைச் செய்ய முடியாமலும், குற்றமும் வஞ்சனையுமற்ற சிவனடியார்கள் ஏவலையும் இயற்றமுடியாமலும், குருகாணிக்கையாகச் செல்வத்தைச் செலுத்திக் கொள்ள இயலாமலும் ஆன்மாவின் குற்றம் நீங்க, பழைய வரலாறுகளைச் சொல்லும் புராணங்களின் சுவைகளை உணராமலும், நாம் முடிவாகச் செல்லுதற்குரிய சிவபெருமானிடம் அன்பு செய்யாமலும், வல்லமையுள்ளபடி வாசற்காவலுள்ள மனையில் அடக்கிவைத்து, மிகவும் ஆசை பொருந்த எல்லா வசதிகளையும் அவ்வீடாகிய சிறைக்குள்ளே வைத்து, நேசம் மிகும் வண்ணம் தூக்கிக் காமலீலைகளாகிய மையல் முழுதும் செய்து, மலவாதனையால் வந்த இவ்வுடலுக்குக் காவலிட்ட, மலவாதனை நீங்காத துட்டனல்லனோ கணவன் என்பாள்!"

– இத்தகைய விளக்கம் பலவுள்ள நூல் இது!

**பண்டார சாத்திரம்**

## (1) உபதேசப் பஃறொடை; (2) பஞ்சாக்கரப் பஃறொடை; (உரையுடன்)

*ஸ்ரீ தட்சிணாமூர்த்தி தேசிகர்; பேரூர் ஸ்ரீ வேலப்ப தேசிகர்.*

ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ)

உபதேசப் பஃறொடை, பஞ்சாக்காப் பஃறொடை – நூல்களின் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் 'முகவுரை'யில், உபதேசப் பஃறொடை பற்றியும், பஞ்சாக்கரப் பஃறொடை பற்றியும் சிறுவிளக்கம் தரப்பட்டுள்ளது.

பாடலைப் பொருளுக்கு ஏற்பப் பகுதி பகுதியாகப் பிரித்து, பொருளும் விளக்கமும் தந்துள்ளார் உரையாசிரியர்,

உபதேசப் பஃறொடையில்,

*". . . . . . . . . . நேசமுடன்*
*ஈன்ற முட்டைக் கெய்து மிரும்பருவங் கண்டுகடல்*
*தோன்றிக் கமடங் குடக்குரம்பை – கீன்றுபோய்த்*
*தன்னை யடையத் தழைத்தருளால் கூவுதல் போல் . . ."*

என்ற பகுதியை, இவ் உரையாசிரியர் விளக்கும் முறை :–

"ஆமை தானிட்ட முட்டை முழுவளர்ச்சியடைந்து வெளிப்படும் பருவம் எய்தியமையறிந்து கடலிலே அந்த முட்டையைக் கீன்று ஆமையழைத்துத் தன்னிடம் வைத்துக் கொள்வது போல, சிவமும் மலமாகிய கூட்டுள், அடைபட்டு

வருந்துகின்ற ஆன்மாவை, பலக்கூட்டைக் கிழித்துப் பேரொளி காட்டித் தானாக்கியுாட் கொள்கின்றது என்பது கருத்து!"

– இத்தகைய எளிய விளக்கங்களை இந்நூலில் காணலாம்.

## பண்டார மும்மணிக்கோவை

*குமரகுருபர அடிகள்*

'கோவை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. மூவகை மணிகளால் சேர்த்த கோவை போல, 'வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியப்பா' எனும் மூவகை யாப்பில் அமைந்ததால் 'மும்மணிக்கோவை' எனப்பட்டது.

'பண்டாரம்' என்பது, குமரகுருபரரின் ஞானகுருவாக விளங்கிய மாசிலாமணி தேசிகரைக் குறிக்கும். அவர்மீது பாடப்பட்டது இது.

இந்நூலில் மொத்தம் 34 பாடல்களும், இறுதியில் நேரிசை ஆசிரியப்பா – 1; வஞ்சித்துறை – 1 என்ற 2 பாடல்களும் உள்ளன.

மாசிலாமணி தேசிகரின் பெருமைகளை இனிது எடுத்துச் சொல்லும் நூல்.

*"இன்றோர் வியப்புன தான்மாசி லாமணி யென்றிருப்ப*
*தொன்றோர் மணிகண் டவர்பல ராலதற் கோர்மருங்காய்*
*நின்றோர் பலபல பேதங்க ளாச்சொல்வர் நீக்கமறச்*
*சென்றோர்மற் றிம்மணி செம்மணி யேயென்று செப்புவரே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## பதினொராந் திருமுறை (2ஆம் தொகுதி)

*நக்கீர தேவ நாயனார் முதலியோர்*

*மு. சுந்தரேசம்பிள்ளை (ப.ஆ)*

'திருமுறை' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் 'முன்னுரை' யில், 'கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி' முதல் 'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' வரை 10 நூல் பற்றிய குறிப்பு உள்ளது.

இதில், (1) நக்கீர தேவ நாயனார் அருளிய, 'கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி' – 100 பாடல்; (2) திருவீங்கோய் மலை எழுபது – 70 பாடல்; (3) திருவலஞ்சுழி மும்மணிக்கோவை – 15 பாடல்; (4) திருவெழுகூற்றிருக்கை – 55 அடி கொண்ட – 1 பாடல், வெண்பா – 1; (5) பெருந் தேவபாணி – 47 அடி கொண்ட 1 பாடல், வெண்பா – 1; (6) கோபப் பிரசாதம் – 99 அடி கொண்ட 1 பாடல்; (7) கார்எட்டு – 8 பாடல்; (9) போற்றித் திருக்கலி வெண்பா – 45 கண்ணிகள்; (10) திருமுருகாற்றுப்படை 6 படை வீடுகள் : 317 அடிகள், வெண்பா – 10; (11) திருக் கண்ணப்ப தேவர் திருமறம் – 157 அடிகொண்ட 1 பாடல், வெண்பா – 1.

அனைத்தும் மூல பாடங்கள். பாராயணம் செய்வோருக்குப் பயன்படும்.

## பதினோராந் திருமுறை (3ஆம் தொகுதி)

*கல்லாட தேவ நாயனார் முதலியோர்*

மு. சுந்தரேசம் பிள்ளை (ப.ஆ.)

சைவத்திருமுறை 12ல் 11ஆம் திருமுறையைச் சார்ந்த (1) திருக்கண்ணப்ப தேவர் திருமறம்; (2) மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை; (3) சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை; (4) சிவபெருமான் திருவந்தாதி; (கபில தேவ நாயனார்); (5) சிவபெருமான் திருவந்தாதி (பரண தேவ நாயனார்); (6) சிவபெருமான் திருமும்மணிக்கோவை (7) மூத்த பிள்ளையார் திருமும்மணிக் கோவை என்னும் 7 நூல்கள் இந்நூலில் உள்ளன.

இவற்றைப் பற்றிய நூல்விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், கல்லாட தேவ நாயனார் அருளிச் செய்த, 'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' (மூலம் மட்டும்) – 38 அடிகள்; கபிலதேவ நாயனார் அருளிச் செய்த 'மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை' (மூலம்) – 20 பாடல்; (3) கபில தேவ நாயனார் அருளிச் செய்த சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை' (மூலம்) – 37 பாடல்; கபில தேவ நாயனார் அருளிச்செய்த 'சிவபெருமான் திருவந்தாதி (மூலம்) – 100 பாடல்; பரணதேவ நாயனார் அருளிச் செய்த 'சிவபெருமான் திருவந்தாதி (மூலம்) – 101 பாடல்கள்; இளம்பெருமான் அடிகள் அருளிச் செய்த சிவபெருமான் திருமும்மணிக் கோவை' (மூலம்) – 30 பாடல்கள்; அதிராவடிகள் அருளிச் செய்த 'மூத்த பிள்ளையார் திருமும்மணிக் கோவை' (மூலம்) – 23 பாடல்கள் உள்ளன.

மூலத்தை மட்டும் படிப்பவர்க்கு இது உதவும்.

## பதினோராம் திருமுறை : பட்டினத்தார் பாடல்கள் (4ஆம் தொகுதி)

*பட்டினத்தார் .*

*மு. சுந்தரேசம் பிள்ளை (ப.ஆ.)*

'பதினோராம் திருமுறை' – 'திருமுறைகள்' என்ற தலைப்பில், முதல் தொகுதியில் நூல் விளக்கம் உள்ளது. 'பட்டினத்தார் பாடல்கள்' – நூல் விளக்கமும் முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் 'நூல் குறிப்புக்கள்' என்ற தலைப்பில், 'பட்டினத்தடிகள் பனுவல்கள், பட்டினத்தடிகள் வாக்கு, பட்டினத்தடிகள் வாழ்வு, கோயில் நான்மணிமாலை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபஃது' ஆகியன சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

அடுத்து (1) கோயில் நான்மணிமாலை (மூலம்) – 40 பாட்டு; (2) திருக்கழுமல மும்மணிக்கோவை (மூலம்) – 30 பாட்டு; (3) திருவிடைமருதூர் மும்மணிக்

கோவை (மூலம்) – 30 பாட்டு; (4) திருவேகம்பமுடையார் திருவந்தாதி (மூலம்) – 100 பாட்டு; (5) திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது (மூலம்) – 10 பாட்டு ஆகியன உள்ளன.

இப்பாடல்களைப் பாராயணம் செய்ய விரும்புவோர்க்கு இந்நூல் பயன்படும்.

## பதினொராந் திருமுறை (நம்பியாண்டார் திருப்பாடல்கள்) (5ஆம் தொகுதி)

*நம்பியாண்டார் நம்பி.*

*மு. சுந்தரேசம் பிள்ளை (ப.ஆ)*

'திருமுறை' பற்றிய விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'நூல் குறிப்புக்கள்' உள்ளது. இதில் 'நம்பியாண்டார் நம்பியின் பெருமை, வரலாறு, திருமுறை விண்ணப்பம், பிள்ளையார் அருளல், தில்லைவாழந்தணர்களை வேண்டல், அநபாயன் வேண்டல், பத்துப் பனுவல்கள்' முதலியன பற்றிய குறிப்புக்கள் உள்ளன.

இதில், (1) விநாயகர் திருவிரட்டைமணி மாலை – 20 பாட்டு; (2) கோயில் திருப்பண்ணியர் விருத்தம் – 70 பாட்டு; (3) திருத்தொண்டர் திருவந்தாதி – 89 பாடல்; (4) ஆளுடைய பிளளையார் திருவந்தாதி – 101 பாடல்; (5) ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் – 11 பாடல்; (6) ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை – 30 பாட்டு; (7) ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை – 143 கண்ணி; (8) ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் – 49 பாட்டு; (9) ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை – 65 அடி கொண்ட 1 பாட்டு; (10) திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை – 11 பாட்டு.

– இவை அனைத்தும் மூல பாடங்கள்.

## பதினொன்றாந் திருமுறை (தெளிவுரை, குறிப்புரை)

*திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர்*

*சி. அருணை வடிவேலு முதலியார் (உ.ஆ)*

'பதினொன்றாம் திருமுறை' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு' உள்ளது. அடுத்து 'ஆசியுரை', 'உரையாசிரியர் முன்னுரை', 'ஆராய்ச்சி முன்னுரை', 'நூலாசிரியர்கள் வரலாறு', 'உரைமாட்சி' எனப் பலவும், விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

'திருவாலவாயுடையார் அருளிச் செய்த திருமுகப் பாசுரம்' முதல் 'திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதசமாலை' வரை 40 நூல்கள். 'மூலம் – குறிப்புரை' எனும் அமைப்பில் உள்ளது. இடையிடையே படங்களும் உள்ளன.

*“வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்*
*கேளார்கொல்; அந்தோ! கிறிப்பட்டார் – கீளாடை*
*அண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுள்நின்ற*
*கண்ணப்ப ராவார் கதை!”*

– இது, நக்கீரதேவநாயனார் அருளிய, ‘கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி’ நூலில் வருவது. இதற்கு உரையாசிரியர் தரும் குறிப்புரை:–

“மானுடவர் என்பதை முதலிற் கொள்க. பொழுது – கிடைக்கப் பெற்றுள்ள காலம்; ‘அதனை வாளாகழிக்கின்றார், அந்தோ, கிறிப்பட்டார், கண்ணப்பராவகர் கதை கேளார்கொல்’ என இயைத்து முடிக்க, காலம் இல்லாமற் போகவில்லை; கேட்டலைச் செய்தல் அரிதன்று; ஆயினும் கேட்டுப் பயனடைகின்றிலர். கிறி – பொய், உலக வாழ்க்கை. ‘கிறிக்கண் பட்டார்’ என ஏழாவது விரிக்க. அந்தோ – இரக்க இடைச்சொல்; ‘ஆவார்’ என்பது ஏழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. ‘ஆவார்’ என்ற எதிர்காலம், முக்காலத்திற்கும் பொதுவாய் நின்றது. ‘ஒரு போதும் கேளார் போலும்’ எனப் பொருள் தந்து நிற்றலின், ஐயப் பொருட்டு! கண்ணப்பர் கதையைக் கேட்டலாகிய சிறுமுயற்சியைச் செய்து பெரும் பயன் பெறலாய் இருக்க, ஆறறிவு படைத்த மக்களிற் பலர், அதனைச் செய்யாது காலத்தை வீணே கழிக்கின்றனர்’ என இரங்கியவாறு. கீள் – அரை நாண் அளவாகக் கட்டும் சீலை. ‘கீளாகிய ஆடை’ என்க!”

– இத்தகைய விளக்கம் எல்லாப் பாடல்களுக்கும் உள்ளது.

## பரஞ்சுடர்க்கண்ணி

*பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்*

‘கண்ணி’ என்பது இரண்டு அடிகளால் ஆவது.

பரஞ்சுடர் – மேலான சுடராகவிளங்கும் முருகப் பெருமான்.

ஒவ்வொரு பாடல் இறுதியிலும் ‘பரஞ்சுடரே’ என்று முடிவது. சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல இதன்கண் இடம்பெற்றுள்ளன.

இந்நூலில் 190 கண்ணிகள் உள்ளன.

*“இருவினைக் கட்டொழிந்த வேகாந்த மோன*
*குருபர மாய,சிவக் குன்றே பரஞ்சுடரே!*
*பிருந்த மலப்பிணியைப் பேதித்துப் போக்கும்*
*மருந்தீ மருத்து மலையே பரஞ்சுடரே!”*

என்பன போன்ற கண்ணிகள் உள்ளன.

## பராபரக்கண்ணி

*தாயுமான சுவாமிகள்.*

*இந்து சமய வழிபாட்டுக் கழகம் (ப.ஆ.)*

'தாயுமாணவர் பாடல்கள்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. தாயுமானவர் அருளிய பாடல்களில், 'பராபரக்கண்ணி' என்பதும் ஒன்று.

இந்நூலில் 389 கண்ணிகள் முதலில் தரப்பட்டுள்ளன. அடுத்து, அவற்றிற்கான கருத்துரைகள் உள்ளன. பராபரக் கண்ணிப் பாடல் கருத்துக்களைச் சுருக்கமாக அறிந்து கொள்ள இந்நூல் உதவும்!

## பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்

*பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்*

பஞ்சாமிர்த வண்ணம் = ஐந்து அமிழ்த சந்தப்பா. பரிபூஜனம் – சிறந்த ஆராதனை. எனவே, 'சிறந்த ஆராதனைக் குரிய ஐந்து அமிழ்த சந்தப்பா' என்று பொருள்.

இதில் உள்ள பாக்கள் 5ம், வெவ்வேறு சந்தங்களில் அமைந்தவை.

பால், தயிர், நெய், சருக்கரை, தேன் ஆகிய ஐந்துவகை அபிடேகப் பொருளால் இறை மூர்த்தங்களுக்கு அபிடேகம் செய்யும் போது பாடத்தக்கவை இப்பாடல்கள்.

தனியே இருந்து ஒருமுறையோ பன்முறையோ ஓதினாலும் அவ் அபிடேகப் பலனையடையலாம்.

பாடல்களின் தலைப்பும் 'பால் வண்ணம், தயிர் வண்ணம், நெய் வண்ணம், சருக்கரை வண்ணம், தேன் வண்ணம்' என்றே அமைந்துள்ளன. ஒவ்வோர் பாடலும் 4 அடி கொண்டது. ஓர் அடிக்கு 64 சீர்கள் உள்ளன. பாடலின் இறுதி 'முருகோனே' என முடிவது.

*"சூலதர னாராட வோதிமக ளாடநனி*
*தொழுபூத கணமாட வரியாட வயனோடு*
*தூயகலை மாதாட மாநளினி யாடவுயர்*
*சுரரோடு சுரலோக பதியாட வெலியேறு*
*சூகைமுக னாராட மூரிமுக னாடவொரு*
*தொடர்ஞாளி மிசையூரு மழவாட வசுவீர*
*சூலிபதி தானாட நீலநம னாடநிறை*
*சுசிநார விறையாட வலிசானி ருதியாட – அரிகரமகனோடே . . ."*

– இஃது ஓர் அடி. இவ்வாறே பிறவும் சந்தத்தில் அமைந்த பாடல்களே!

## பரிபூரணத் திருப்பதிகம் (அடியார் அகம்)

*பாம்பம் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்.*

அறிவும் அறியாமையும் கடந்த அறிவே திருமேனியாக உள்ள முருகப்பெருமானைத் தத்துவப் பின்னணியில் ஞான பூசையாகப் பூசிப்பதற்கு

என்றே அமைந்துள்ள விசேடமான தோத்திரம் இது!

இதன்கண் 10 பாடல்கள் உள்ளன.

முருகப் பெருமானின் திருவுருவத்தை இதயத்தே நிறுத்தித் தியானிக்கும் முறையையும் துதிக்கும் முறையையும் வெளிப்படுத்தும் நூல் இது!

*"மண்ணுலகும் விண்ணுலகும் நண்ணிநண்ணி*
*உன்னஒரு மன்என இருந்தும் ஒருவர்*
*எண்ணிடவும் பன்னிடவும் உள்ளகுறி ஒன்றுமின்றி*
*எவ்வுயிர்த் திரட்டும் உயிராம்*
*அண்ணல்எனும் விண்என நிலாவியுள்ள சோதி*
*அடியார் அகம்இருக்கும் முருகா!*
*புண்ணியர் விரும்புசுக சின்மய அகண்டபரி*
*பூரணம் எனக்கு அருள்தியே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## பரிபூரணானந்த போதம்

*பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்*

போதம் – அறிவு. பரிபூரணம் + ஆனந்தம் = பரிபூரணானந்தம்.

எவற்றினும் மேம்பட்டதொரு பிரமானந்தம் பல, 'பரிபூரணம்' ஆதலின், அது திருவாசகத்தில் 'பந்தம் பறியப் பரிமேற் கொண்டான்றந்த – அந்தமிலா ஆனந்தம்' என்று கூறப்படுதலின், அதனைப் போதிக்கும் இந்நூலும் 'பரிபூரணானந்தபோதம்' எனப்பட்டது.

இந்நூலின் தொடக்கத்தில் 'பாயிரம்' முதலான 13 பாடல்கள்; அடுத்துப் 'பதிபசுபாசயதார்த்த விளக்கப் படலம்' 'துறவற விளக்கப் படலம்' என 2 படலங்கள்; மொத்தப் பாடல்கள் 230 உள்ளன.

இதற்குச் 'சிவசூரியப் பிரகாசம்' என்ற ஓர் உரையும் உண்டு.

இந்நூலுக்குத் தவறுகாட்டத் துணிந்த ஒருவருக்குப் பாம்பன் சுவாமிகள், தம் சீடர் மூலம் 'சுத்தாத்வைத நிர்ணயம்' என்ற நூலின் மூலம் தமது நூலின் நுண் பொருளைத் தெளிவுபடுத்தியுள்ளார். அதுவும் இந்த நூலின் பிற்சேர்க்கையில் உள்ளது.

இதன்கண் சொற்சுவை, பொருட்சுவை, தொனிச்சுவை, உவமையணிகள் உள்ளன. வைதிக நுண்மொழிகள், ஆகமமொழிகள் ஆகியன செவ்வனே உரைக்கப்பட்டுள்ளன. சைவ சித்தாந்த நுண்பொருள் இனிதெடுத்துக் கூறப்பட்டுள்ளது.

*"தண்டுலத் தனாதி யாகத் தவிடுமி முளையுண் டேனும்*
*விண்டிடுந் துவைக்குங் காலவ் விதமல மனாதி யேனுங்*

கொண்டிடு மருளால் வீயுங் குயின்றது சரத மெண்ணிற்
கெண்டிகை யேத்த வுள்ள விகலரு ளாளர் சான்றால்!”

என்பது அவற்றில் ஒன்று!

## பழமலையந்தாதி

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்.

'அந்தாதி' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் 1. அந்தம் + ஆதி = அந்தாதி. அந்தம் – முடிவு; ஆதி – முதல். ஒரு செய்யுளின் இறுதி, அடுத்த செய்யுளுக்கு முதலாவதாக அமையப் பாடுவது.

'பழமலை' என்பது 'திருமுதுகுன்றம்'. 'விருத்தாசலம்' என்று இன்று வழங்கும். இறைவன் பெயர்: பழமலை நாதர், இறைவி : பெரிய நாயகி.

தொடக்கத்தில் 'காப்பு'ச் செய்யுள் 1 தவிர 100 பாடல்கள் உள்ளன. 'கட்டளைக் கலித்துறை' என்ற யாப்பில் அமைந்தது. சிவபெருமானின் சிறப்புக்களைக் கூறுவது.

“தடுக்க மலத்தி னொடுங்குதல் வோலநின் றாளிலுறு
மொடுக்க மலத்தி னிகழ்வால் வளையின மூர்ந்திடச்சேன்
மடுக்க மலத்தி லுகள்வயல் சூழ்குன்றை மாநகரோ
யடுக்க மலத்தி புனையலங் கார வருளுகவே!”

என்பன போன்ற பாடல்களைக் காணலாம்.

## பழனிப் பிள்ளைத்தமிழ்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

'பிள்ளைத் தமிழ்' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ்; பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும்.

கடவுளையோ, அடியார்களையோ, வள்ளல்களையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, 10 பருவங்களில், பருவம் 1க்குப் பாடல் 10 வீதம் 100 பாடல்களால் பாடப்படுவது. கடைசி 3 பருவ மட்டும் ஒன்றுக்கொன்று வேறுபடும்.

பழனியில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான் மீது பாடப்பட்டது இது.

இந்நூலின்கண், சொல்நயம், பொருள்நயம், பக்திச்சுவை ஆகியனவும், முருகனின் அருட்செயல்கள் பலவும் இயம்பப் பட்டுள்ளன.

அம்புலிப் பருவத்தில், 'சாம, பேத, தான, தண்டம்' என நால்வகை உபாயங்களும் பாடப்படும் மரபும் இந்நூலில் அமைந்துள்ளது.

“இழைத்த மணிப்பொற் பணிக்கரத்தால்

இவன்உன் றனையீண்(டு) அழைப்பதனுக்(கு)
என்ன தவமுற் செய்தனையோ?
எய்தாது இருக்கை முறைதானோ?
குழைத்த அமுதே நிகர்மொழியார்
கூறும் வசைத்தீக் கொளும் செவிக்(கு)என்
கோலா கலச்செந் தமிழ்ச்சந்தக்
கொழும்பாட் டொலிகைத் துளதேயோ?. . .”

என்பது ‘தானம்’ என்னும் உபாயத்தைக் கூறுவது. இவ்வாறே பிறவும் வருவன காணலாம்.

## பழனிப் பிள்ளைத் தமிழ்

விசயகிரிவேலச் சின்னோவையன் என்கிற சின்னப்ப நாயக்கர்

தமிழில் உள்ள 96 வகைச் சிற்றிலக்கியங்களில் ஒன்று. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என 10 பருவம் உடையது. பருவம் 1க்குப் பத்துப்பாடல் வீதம் பாடுவது இலக்கணமரபு. ஆனால் இந்நூலில், ‘சிவனடியார் வணக்கம்’ 1 பாடல் தவிரப் பருவம் 1க்கு மூன்று பாடல்களே உள்ளன.

“கந்தா வருக! கயவனிதை கணவா வருக! வனமடந்தை காந்தா வருக. . .”

என்பன போன்ற பாடல்கள் உள்ளன.

## பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்

பாம்பாட்டிச் சித்தர்

‘ஆடுபாம்பே’ எனப் பாம்பை ஆட்டுவித்துப் பாடுவதால் ‘பாம்பாட்டிச் சித்தர்’ எனப் பெயர்பெற்றார்.

இவர் இயற்றியன 4 அடிகொண்ட பாடல்கள் 129. இவை எளியநடை, சொல்நயம், உவமையணி முதலாயின கொண்டுள்ளன. ஆழ்ந்த தத்துவங்களைக் கூறுவன.

‘பாம்பு’ வடிவாக மண்டலித்துள்ள ‘குண்டலினி’ சக்தியை எழுப்பி, அதன்மூலம் ஆன்ம தரிசனம் செய்வதை இப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

“எள்ளில் எண்ணெய் போல உயிர்எங்கும் நிறைந்த
ஈசன்பத வாசமலர் எண்ணி யெண்ணியே
உள்ளபடி அன்புபத்தி ஓங்கி நிற்கவே
ஒடுங்கி யடங்கித் தெளிந்து ஆடுபாம்பே!”

என்பது அவற்றில் ஒன்று!

## பால்வண்ணநாதர் வண்ணம்

திருமலை வேற்கவிராயர்

'வண்ணம்' என்பது 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் அடங்காதவொன்று. பிற்காலத்துத் தோன்றியது. 'ஆசுகவலவர்க்கு வண்ணம் புலியாம்' என்பது ஔவையார் வாக்கு. தொல்காப்பியர் கூறும் 'வண்ணம்' வேறு; இது வேறு.

திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் புயவகுப்பு, வேல் வகுப்பு, செருக்களத்தலகை வகுப்பு முதலிய பாடல்களே, பிற்காலத்தார் 'வண்ணம்' பாடவழிவகுத்தன என்பர் அறிஞர்.

'வண்ணம்' என்பது 8 கலையுடையது; 2 கலை முடிந்தபின் எதுகை வரும்; ஒவ்வொரு கலைக்கும் 3 கண்ணி அமைந்திருக்கும். ஒரு 'கலை' முடிந்ததும் ஒரு 'தொங்கல்' வரும்.

நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த 'கருவை நல்லூர்' (இக்காலத்தில் கரிவலம் வந்த நல்லூர்) என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன் பால்வண்ண நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டது. இதில் ஒருவகையான சந்தம் அமைந்துள்ளது.

இந்நூலில், முதற்கண் 'பிள்ளையார், கலைமகள் காப்பு' – 2 வெண்பாக்கள் உள்ளன. அடுத்து,

"தனன தந்தன தானதந் தனனா – தனந்தன . . ."

என்ற 'சந்தக் குழிப்பு' உள்ளது. இதன் பின்பு, 'தொங்கல்' உள்ளது. இது 'தனத் தனன தான தந்த தந்தனா' என்ற சந்தக்குழிப்பில்,

"மதமு டன்புகர் கோபம்வெங் கொலைதீர் கருஞ்சிலை
யுருவ மைந்திடு யானையுந் தனியே – கரும்புண
வைத்த நாயக ரெங்கு நிறைதரு
மெய்த்த யாபர ரங்கை மழுவினர்
வரத ருயர்திசை யரவும் வெருவிட
வுலவு மரகத மயிலின் மிசைவரு
வார ணக்கொடி வேலவ னோடிப
மாமு கத்தனை யேபெறு தூயவர். . .!"

என்று தொடங்குகின்றது. இவ்வாறு மொத்தம் 24 உள்ளன.

## பிச்சாடன நவமணிமாலை

சிவப்பிரகாச சுவாமிகள்

'மாலை' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

நவம் – ஒன்பது. மாணிக்கங்களால் தொடுக்கப்பட்ட மாலை போல ஒன்பது

பாடல்களால் தொடுக்கப்பட்டது.

சிவபெருமான், பிச்சை ஏற்கும் மூர்த்தியாக எழுந்தருளியவன். எனவே 'பிச்சாடன மூர்த்தி' எனப்படுவான். அந்த அழகினை வியந்து பாடப்பட்டது.

இறைவனின் பேரழகு, சுந்தரேசப் பெருமானிடம் விளங்குவதாயினும், பிச்சைக் கோலத்தினும் பேரழகு பெற்றவன் என்பதைக் கூறும் நூல் இது!

முதற்கண் 'சிறப்புப் பாயிரம்' –1 போக, ஆசிரிய விருத்தப் பாக்கள் 9 கொண்டது.

"குன்றா முதுகுன்று உடையான் இலாதவெண் கோவணத்தான்
தன்தா மரைக்கை விரல்மூன்று காட்டித் தனம்குறித்து
நன்றாக இத்தனை பிச்சைஉண் டோசொல் நறுநுதலாய்
என்றான் இரண்டு அத் தனைஉள கோடி என்று இட்டனளே!"

என்பது அவற்றில் ஒன்று!

## பிரபுலிங்க லீலை

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

பிரபு – எல்லாமாய், அல்லவுமாய் இருக்கும் தன்மை.

லிங்கம் – ஆன்மா. லீலை – திருவிளையாடல்

அஃதாவது ஆன்மாவினது திருவிளையாட்டை உணர்த்தும் நூல் என்பதாம்.

இந்நூலில் 'துதி கதி' முதல் 'மான்மிய கதி' ஈறாக 25 கதிகள்; 1158 திருவிருத்தங்கள் உள்ளன.

"மாயையை யகன்றால் நடக்கக், கால் எழுமோ
வாயிடை மாற்றமொன் றுண்டோ?
போயொரு விடயம் உணமனம் வருமோ
பொருந்துறும் பகலிர வுணவோ?
காயமும் உயிரும் கலந்துவாழ் வுறுமோ
கண்டனம் எனஎனை ஒருவர்
நீயறி வுறவிங் குரைப்பவ ருளரோ?
நேரிழாய் என்றனன் அண்ணல்?"

என்பது 'மாயை' பற்றியது. இவ்வாறே பிறவும் வரும்.

## பிரமோத்தர காண்டம்

வரதுங்கராம பாண்டியன்

சூதமுனிவர் வடமொழியில் இயற்றதைத் தமிழில் பாடியவர் வரதுங்கராம பாண்டியன்.

சிவபெருமானைப் பற்றியது.

இத்தமிழ்நூலில் 'பாயிரம்' நீங்கலாக, 'பஞ்சாட்சரமகிமை யுரைத்த அத்தியாயம்' முதல் 'வஞ்சுளை முத்தி பெற்றது' வரை 22 அத்தியாயங்கள் உள்ளன. கடவுள் வாழ்த்து – 13 செய்யுள் தவிர 1310 செய்யுட்கள் கொண்டது.

இந்நூலில், சிவராத்திரி மகிமை, சனிப்பிரதோச மகிமை, சோமவார விரதச்சிறப்பு எனப்பலவும் விரிவாகச் சொல்லப் பட்டுள்ளன.

"கண்ணுதலா லய நோக்குங் கண்களே கண்கள்!
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்!
பெண்ணொரு பாகனைப் பணியுந் தலைகளே தலைகள்!
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்!
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவே நன்னா!
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்!
அண்ணல் பொலங் கழனினைக்கு நெஞ்சமே நெஞ்சம்!
அவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை!"

என்பன போன்ற பாடல்கள் உள்ளன!

## பிரார்த்தனை மாலை

இராமலிங்க அடிகளார்

'மாலை' என்பது தமிழிலுள்ள சிற்றிலக்கியவகை 96ல் ஒன்று. மாலைபோலத் தொடர்ந்து பாடப்படுவது. பிரார்த்தனை – வழிபாடு.

இது, திருவருட்பா – முதல் திருமுறையில், 'திருத்தணிகைப் பதிகங்கள்' என்ற தலைப்பில் அமைந்துள்ளது.

இராமலிங்க அடிகளார், தம் இல்லத்து மாடி அறையில் உள்ள கண்ணாடியில் ஆறுமுகப் பெருமான் காட்சியளித்த போது பாடியது. 'கட்டளைக் கலித்துறை' என்ற யாப்பில் அமைந்துள்ளது. 30 பாடல்கள் கொண்டது.

திருத்தணி முருகப் பெருமானின் திருத்தோற்றப் பொலிவை அழகுறச் சித்திரிப்பது.

"கண் மூன்றுறு செங்கரும்பின் முத்தே!
பதம்கண் டிடுவான்
மண் மூன் றுலகும் வழுத்தும் பவள
மணிக்குன்றே!
திண்மூன்று நான்கு புயங்கொண்டொளிர்
வச்சிர மணியே!
வண்மூன் றலர்மலைவாழ் மயில்
ஏறிய மாணிக்கமே!"

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:–

திருவருட்பா

## பிள்ளைச் சிறுவிண்ணப்பம்

இராமலிங்க அடிகளார்

பிள்ளையாக இருந்தபோது மனத்தில் எழுந்த விழைவு வெறுப்புச் சிலவற்றை எடுத்துக்கூறி இறைவனிடம் விண்ணப்பம் செய்தலாகும்.

இது, திருவருட்பாவில் 6ஆம் திருமுறையில் உள்ளது. எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தப்பாவால் ஆனது. 24 பாடல்கள் உள்ளன.

"தடித்தஓர் மகனைத் தந்தைஈண் டடித்தால்
தாயுடன் அணைப்பள்,தாய் அடித்தால்
பிடித்தொரு தந்தை அணைப்பன்,இங் கெனக்குப்
பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத் தாடும்
புனிதநீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
அம்மைஅப் பா!இனி ஆற்றேன்!"

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:–

திருஅருட்பா

## பிள்ளைப் பெருவிண்ணப்பம்

இராமலிங்க அடிகளார்.

பிள்ளைமைப் பருவத்துக் கள்ளம் இல்லாத எண்ணங்களையும், இன்பதுன்பங்களையும் எடுத்துக் கூறி, மனத்தால் தூயவராய் விண்ணப்பிப்பதாம்

இது, திருவருட்பாவில் 6ஆம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தப் பாவால் அமைந்தது. 133 பாடல்கள் கொண்டது.

"கற்றவர் உளத்தே கரும்பினில் இனிக்கும்
கண்ணுதற் கடவுளே! என்னைப்
பெற்றதாய் நேயர் உறவினர் துணைவர்
பெருகிய பழக்கமிக் குடையோர்
மற்றவர் இங்கே தனித்தனி பிரிந்து
மறைந்திட்ட தோறும்அப் பிரிவை
உற்றுநான் நினைக்குந் தோறும்உள் நடுங்கி

உடைந்தனன் உடைகின்றேன் எந்தாய்!"

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:-

திருஅருட்பா

## புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்

இராமலிங்க அடிகளார்

புணராவிரகு - புணராது ஒழுகும் சூழ்ச்சி.

பொருந்துறு வேட்கை - (புணராமையால்) உள்ளத்தில் தோன்றி மிகும் வேட்கை

இறைவன் புணர்ந்து இன்பம் செய்வார் போன்று புணராமல் ஒழுகும் சூழ்ச்சியை இறைவன் மேற்கொள்வதால், தலைவி ஒருத்தி வேட்கை மிக்கு ஆற்றாமையால் தோழிக்குக் கூறி வருந்துதல்.

அகப்பொருட் சுவை அமைந்த இப்பகுதி, திருவருட்பா இரண்டாம் திருமுறையில் அடங்கியுள்ளது. அறுசீர்க் கழிநெடி ஆசிரிய விருத்தத்தால் அமைந்தது. 30 பாடல்கள் கொண்டது.

திருவொற்றியூர் இறைவனே - தலைவன்.

இராமலிங்க அடிகளார், தம்மைத் தலைவியாகக் கருதி, வேட்கை மிகுதியால் ஆற்றாமல் தோழிக்குக் கூறியதாக அமைந்தது இது.

"பொய்யர் உளத்துப் புகுந்தறியார்
போத னொடுமால் காண்பரிதாம்
ஐயர் திருவாழ் ஒற்றிநகர்
அமர்ந்தார் இன்னும் அணைந்திலரே!
வைய மடவார் நகைக்கின்றார்
மாரன் கணையால் திகைக்கின்றேன்!
செய்ய முகத்தாய் என்னடிநான்
செய்வ தொன்றும் தெரிந்திலனே!"

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:-

திருவருட்பா

## புதுவைத் தலபுராணம்

வில்லிப்புத்தூர் முத்துசாமி

புராணம் - பழைய வரலாறு.

'புதுவை' என்பது திருவில்லிபுத்தூருக்கு அருகில் உள்ள 'மடவார் வளாகம்'.

ஆங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பெயர் : வயித்திய நாதர்; அம்பிகை: சிவகாமி.

இந்நூலில், 'விநாயகர் வணக்கம், வாழ்த்து' முதலாயின கொண்ட 'பாயிரம்' 35 பாடல்கள் கொண்டது. அடுத்து, 'நாட்டுச் சிறப்பு' முதல் 'காயக்குடி நதி மான்மியம்' வரை 32 பகுதிகள் கொண்டது; 1731 செய்யுட்கள் கொண்டது.

இதன்கண், சூரியன் பூசித்தது, அகத்தியர் பூசித்தது. மூர்த்தி – தல – தீர்த்தச் சிறப்பு எனப் பலவும் சொல்லப்பட்டுள்ளன.

"கட்டுண்ட பாச நீக்குங் கண்ணுத லினக்கு நித்த
மிட்டுண்டு பகர்ந்து நேச மிசைந்திடும் வந்திக் காளாய்ப்
பிட்டுண்டு முயலும் வேலை பிரம்பினா லடித்து மாறன்
றட்டுண்டு நிற்பக் காத்த சங்கரா போற்றி போற்றி!"

என்பது அவற்றில் ஒன்று!

## புவியாரே

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

புவி – உலகம்; புவியாரே – உலகத்தவரே!

உலகில் வாழும் மக்களைப் பார்த்து, "இவற்றையெல்லாம் செய்க; இவற்றையெல்லாம் செய்யாதொழிக!" என்று கூறும் நூல் இது.

இந்நூலின் தொடக்கத்தில், ஞாயிற்றுக்கிழமை' முதல் 'சனிக்கிழமை' வரை ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு பாடலாக 7 பாடல்கள்; அடுத்துக் 'கொலை செய்க, பொய் கூறுக, களவு புரிக, கள்ளருந்துக, குரு நிந்தை செய்க கொள்ளை; சுத்த வீரம், சம்பிரதாயம், உத்தியோகம், காய சிற்பம், சித்தி, நல்லநாள், பண்டிகை நாள்' எனப் பல தலைப்புக்களில் ஆன்மீகக் கருத்துக்கள், நயம் தோன்றச் சொல்லப்பட்டுள்ளன. 'கொலை செய்க' என்ற தலைப்பைப் பார்த்ததும் 'இப்படிக் கூறலாமா?' என்று கேட்கத் தோன்றும். பாடலைப் படித்தால்,

"மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனப்படும் அந்தக் கரணங்கள் செயல்கள் போகும்படி அவற்றைக் கொல்லும் தன்மை கொள்ளுங்கள்!" என்று பொருள்படும்படிப் பாடல் அமைந்துள்ளது.

"விரியும் தரணிவதி மாக்கள்விலங்கு பறவை ஊர்வனநீர்
திரியும் பிராணிகளை இம்பர்த் தீழ்ப்பாய் எண்ணிக் கொலைசெய் யாது
அரிய பேறு பெறுவதற்கா அந்தக்கரண விருத்திகளைப்
பிரியும் படியே கொலைசெய்யப் பெற்றிகொள்ளும் புவியாரே!"

என்பது பாடல்! இவ்வாறே பிறவும் வரும்.

## பூந்துறைப் புராணம்

*காளியண்ணப் புலவர்*

புராணம் – பழைய வரலாறு.

கொங்குநாட்டைச் சேர்ந்த ஊர்களில் 'பூந்துறை' என்பதும் ஒன்று. இவ்வூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பற்றியது. இந்நூலில் 228 பாடல்கள் உள்ளன.

'பாயிரம்' முதல் 'குமாரச் சருக்கம்' வரை 10 பகுதிகள் உள்ளன.

*"கும்பமுனி காலமதின் கொள்கையினை ஓர்ந்தே*
*அம்புவியில் தேவர்மொழி யால்விளம்பு காதை*
*நம்பன்அருள் மேவுசிவ வாலையருக் காக*
*உம்பர்மகிழ் நல்தமிழி னால்உரைகள் செய்தார்!"*

என்பன போன்ற பாடல்கள் உண்டு.

## பூரணமாலை

*பட்டினத்தார். (பிற்காலத்தவர்)*

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று! மாலை போலத் தொடுத்துப் பாடுவதால் இப்பெயர் ஏற்பட்டது. பூரணம் – முழுநிறைவு. முழுநிறைவு கொண்ட இறைவனைக் குறிக்கும். 'பரிபூரணானந்தமே' என்பார் தாயுமானவர்.

இதில் ஈரடி கொண்ட 102 பாடல்கள் உள்ளன. பாடல் தோறும் 'பூரணமே' என்று முடிவது.

*"சரியை கிரியா யோகம்தான் ஞானம்பா ராமல்*
*பரிதிகண்ட மதியதுபோல் பயனழிந் தேன் பூரணமே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## பெரியசாமி

*பாம்பன் ஸ்ரீமத் குமரகுருபர தாச சுவாமிகள்*

'ஸ்வாமி' என்றும் வடசொல், தமிழில் 'சாமி' எனப்படும். ஸ்வம் – சம்பத்து. அதனையுடையவன் 'ஸ்வாமி'. ஆறுமுகன் ஒருவனுக்கே 'சாமி' என்ற பெயர் உரியது. பெரியசாமி – பரமகுரு.

இதன்கண் 10 பாடல்கள் உள்ளன. பாடல்தோறும் 'பெரியசாமியே' என முடிவது. கழிநெடிலடி ஆசிரியப்பாவால் ஆனது. இதன்கண் முருகப் பெருமானின் பெருமை சொல்லப்படுகின்றது.

*"ஈச போற்றி நன்நேச போற்றி! எம்இறைவ போற்றி சூர்*

*நாச போற்றி . . . . !" எம்பெரும போற்றி!*

என்பன போல் வரும்!

### பெரியநாயகி அம்மை கலித்துறை

*சிவப்பிரகாச சுவாமிகள்*

'கலித்துறை' என்பது யாப்பு வகைகளில் ஒன்று.

திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் அம்பாளின் பெயர் பெரியநாயகி அவ் அம்மைமீது பாடப்பட்டது. 'கட்டளைக் கலித்துறை' என்ற யாப்பில் 19 பாடல்கள் கொண்டது.

இதில், அம்பிகையின் அருட்செயலும், இறைவனின் இயல்பும் உரைக்கப்பட்டுள்ளன.

*"ஆறாத் துயர்கொண்டு அடியேன்*
*சலிப்ப அதுசெவியில்*
*ஏறாம லேஇருந் தால்என்செய்*
*வேன்எங்கள் ஈசற்குஒரு*
*கூறாகி அண்ட முதலா*
*இளமை குலவுதவப்*
*பேறாகி வாழ்பவ ளேகுன்றை*
*வாழும் பெரியம்மையே!"*

என்பது அவற்றில் ஒன்று!

### பெரியநாயகி அம்மை நெடுங்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

*சிவப்பிரகாச சுவாமிகள்*

'நெடுங்கழிலடி ஆசிரிய விருத்தம்' என்பது யாப்பு வகைகளில் ஒன்று. திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பெரிய நாயகி அம்மை மீது பாடப்பட்டது.

இதில் 14 சீர்கள் கொண்ட ஆசிரிய விருத்தம் உள்ளது. ஆதலின் 'நெடுங் கழிநெடில்' எனப்பட்டது. 10 பாடல்கள் உள்ளன.

இறைவியின் பல்வேறு சிறப்புக்கள் உரைக்கப்பட்டுள்ளன.

*"உள்ளம்என் மனையில் விருப்பொடு வெறுப்பாம்*
*உறுகுழி மேடுகள் நிரவி*
*ஒழிவிலா வாய்மை மெழுக்கினால் பூசி*
*உயர்தரு மனம்எனப் படும்ஓர்*
*பள்ளிமென் தவிசில் இருத்திநின் பதியைப்*
*பழுதில்யான் எனப்படும் நெல்லைப்*

*பழமல மாயைத் தவிடுஉமி போக்கிப்*
*பாகம் செய்து என்றுஅருத் திடுவாய் . . . !"*

ஈன்பன போன்ற பாடல்கள் உண்டு!

## பெரிய நாயகி பிள்ளைத்தமிழ்

*நா. கனகராஜய்யர்*

'பிள்ளைத்தமிழ்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

புதுக்கோட்டைத் தமிழ்மன்னர் குலத்துக்கு வழிபடு தெய்வமாகிய பெரியநாயகியையும், கோகன்ன நாதனையும் தன்னகம் கொண்ட திருத்தலம், திருக்கோகர்ணம்'. 'பிரஹதம்பிகை' என்ற பெரிய நாயகி மீது பாடப்பட்டது இப் பிள்ளைத்தமிழ்.

தொடக்கத்தில் 'பாயிரம்' முதலாயின – 6 பாடல்; அடுத்துக் 'காப்பு' முதல் பொன்னூசற் பருவம்' வரை 108 பாடல்கள். மூலம் மட்டுமே உள்ளது.

*"கனியு முளத்தாற் சிவக்குறிக்குக்*
*காதாற் புனலாட் டுதல்புரிந்து*
*கருணை பொழியு மதனருகே*
*காவல் புரிந்து பணிபூண்ட*
*இனியகுணத்துக் கபிலைசெயும்*
*எழிலார் வழிபா டேற்றருளி*
*இறைமை சான்ற பதமதனுக்*
*கியைபா லருளுங் கோகனத்தான்*
*தனிமை தவிர்க்க வருமிறைவீ*
*தமிழைப் புரக்கும் புதுவையிறை*
*தலைமீ தொளிரு முடியெனவே*
*சரணமலரை யளித்துவப்பாய்!*
*முனிவர் வழிபா டுவந்தருளும்*
*முதல்வீ தருக முத்தமே!*
*முழங்கு மறைதேர் கோகன்ன*
*முதல்வீ தருக முத்தமே!"*

ஈன்பது முத்தப் பருவப் பாடல்!

## பெரிய புராணம்

*சேக்கிழார்*

பெருமை + புராணம் = பெரிய புராணம். புராணம் – பழைய வரலாறு. பெருமை பெற்ற சிவனடியார்களின் வரலாறு.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் இது, பன்னிரண்டாவது திருமுறை. தனியடியார் 63 பேர்; தொகையடியார் – 9 பேர் பற்றிப் பாடப்பட்டது. 'உலகெலாம்' எனத் தில்லை நடராசப் பெருமானே அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழாரால் அருளிச் செய்யப்பட்டது.

'தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' எனச் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய 'திருத்தொண்டத் தொகை'யை அடியொற்றி நாயன்மார் வரலாறு உரைப்பது. சைவ சமயக் காப்பியம். இதன் பாட்டுடைத் தலைவர், சுந்தரமூர்த்தி நாயனார். இந்நூலின் தொடக்கமும் முடிவும் இவரைப் பற்றியதே. இந்நூல் 2 காண்டங்கள் கொண்டது. 'திருமலைச் சருக்கம்' முதல் 'வெள்ளானைச் சருக்கம்' ஈறாக 13 சருக்கங்கள் உடையது.

இக்காப்பியத்தின் செய்யுட்கள் 4253 எனச் 'சேக்கிழார் புராணம்' கூறுகிறது. ஆனால் சில நூல்களில் 4286 செய்யுட்கள் உள்ளன. எனவே 33 பாடல்கள் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்பர்.

சந்தமலி செந்தமிழ்ப் பனுவலாகிய மூவர் தேவாரத் திருப்பதிகங்களின் இயலிசைப் பண்ணமைதியின் அடியொற்றியனவாக இப் பெரிய புராணக் காப்பியத்தில், ஏறக்குறைய 48 கட்டளை விகற்பங்கள் காணப்படுகின்றன. தமிழகத்தின் வரலாற்றுக் காப்பியமாக அமைந்த இந்நூல், இளங்கோவடிகள் அருளிய இயலிசை நாடகப் பொருள் தொடர் நிலையாகிய சிலப்பதிகாரத்தினைப் போலவே முத்தமிழ்க் காப்பியமாக அமைந்துள்ளமை தமிழ்மக்கள் செய்த தவப் பயனே யாகும் என்பர் அறிஞர்.

இந்நூலின்கண் சைவசித்தாந்தக் கருத்துக்கள் ஆங்காங்கு இயம்பப்பட்டுள்ளன.

'திண்ணனார்' என்னும் பெயர் தாங்கிய கண்ணப்ப நாயனார், முதன்முதல் வேட்டைக்குச் சென்றபோது, திருக் காளத்தி மலையைக் கண்டு, அம்மலைமேல் எழுந்தருளிய இறைவனாம் குடுமித் தேவரை வழிபடவேண்டும் என்னும் பெருவேட்கையுடன், நாணன் என்பவனைத் துணையாகக் கொண்டு மலைமேல் ஏறிச் சென்ற அன்பின் திறத்தைச் சொல்லவந்த சேக்கிழார்,

*"நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்*
*பேணு, தத் துவங்கள் என்னும் பெருகு சோபானம் ஏறி*
*ஆணையாம் சிவத்தைச் சாரஅணைபவர் போல ஐயர்*
*நீணிலை மலையை ஏறி, நேர்படச் செல்லும் போதில்"*

என்பார். இதில் சைவ சித்தாந்தக் கருத்து அமைந்துள்ளது. காப்பியத்திற்குரிய பல்வகை இலக்கணமும் அமைந்த நூல் இது.

சைவசமய குரவர் நால்வரில், சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரைப் பற்றி முழுமையான வரலாற்றை முதன்முதல் தெரிவிக்கும் நூல் இதுவே! இவற்றில் சம்பந்தருக்கு மட்டுமே 1256 பாடல்கள் உள்ளன.

சைவத்திருமுறைகள் பாடிய இம்மூவரைத் தவிரக் காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகியோரது வரலாறும இந்நூலில் சொல்லப்பட்டது. 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய நூல்' இது என்பர் புலவர்.

இப்பெரிய புராணம் அருளிய சேக்கிழாரைப் பற்றியே சிலநூல்கள் எழுந்துள்ளன. அவை:– உமாபதி சிவாசாரியார் அருளிய 'சேக்கிழார் புராணம்' எனப்படும் 'திருத்தொண்டர் புராண வரலாறு'; மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய 'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' என்பன.

## பெரியபுராணம் - முதற்காண்டம் : இரண்டாம் பாகம்

*சேக்கிழார்*

ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் (உ.ஆ)

பெரிய புராணம் – நூல் விளக்கவுரை, முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்' முதல் 'நமிநந்தியடிகள் நாயனார் புராணம்' வரை 7 நாயனார் புராணங்கள் உள்ளன.

மூலபாடத்தையடுத்து அதன் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் புராணத்தில், இடையிடையே அந்தந்தத் தலத்தில் அவர் பாடிய தேவாரப் பாக்கள் கொடுக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இறுதியில், காரைக்காலம்மையார் அருளிச் செய்த 'திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்'; 'திருவிரட்டை மணிமாலை'; 'அற்புதத் திருவந்தாதி' ஆகியனவும், இவற்றிற்கான உரையும் கொடுக்கப்பட்டுள்ளன.

## பெரிய புராணம் : முதற்காண்ட மூலமும் பொழிப்புரையும்

*சேக்கிழார்*

சு. சுப்பராய நாயகர் (உ.ஆ)

பெரியபுராணம் – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், 'பாயிரம்' முதல் 'நமிநந்தியடிகள் நாயனார் புராணம்' வரை உள்ளது. பாடல்கள் : 1903.

ஒவ்வொரு பாடலையடுத்தும் பொழிப்புரை தரப்பட்டுள்ளது. இதனையடுத்து, (1) சேக்கிழார் சுவாமிகள் புராணம்; (2) திருமுறை கண்ட புராணம்; (3) திருத்தொண்டர் புராணசாரம், (4) திருத்தொண்டர் திருநாமக் கோவை; (5)அறுபத்து மூன்று நாயன்மார் திருநட்சத்திரம்; (6) திருப்பதிக் கோவை; (7) திருப்பதிகக் கோவை; (8) நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி ஆகியன தரப்பட்டுள்ளன. இவையனைத்திற்கும் பொழிப்புரை உள்ளது!

## பெரியபுராணம் என்று வழங்குகின்ற திருத்தொண்டர் புராணம்

*சேக்கிழார்*

கே. சுப்பிரமணிய பிள்ளை (ப. ஆ.)

'பெரியபுராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. நூலின் தொடக்கத்தில், சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழுதிய 'பெரிய புராண வரலாறு' உள்ளது. அடுத்து, தி. பட்டுச்சாமி ஓதுவார் எழுதிய 'வரலாற்றுக்குறிப்பு' இடம் பெற்றுள்ளது. பின்பு, 'அறுபத்து மூவர் வரலாற்றுச் சுருக்கம்' தரப்பட்டுள்ளது. இதில், 'நாயன்மார் பெயர், குலம், நாடு, ஊர், வழிபாடு, திருநட்சத்திரம்' ஆகியன சொல்லப்பட்டுள்ளன.

பின்னர், 4286 பெரிய புராணப் பாடல்கள் மூலமட்டும் தரப்பட்டுள்ளன. நூலின் இறுதியில், 'வாழ்த்து, சமய குரவர் திருநட்சத்திரம், சமய குரவர் நால்வர் வயது' பற்றிய 3 பாடல்கள் உள்ளன.

அடுத்து, உமாபதி சிவாசாரியர் பாடிய, 'நம்பியாண்டார் நம்பி புராணம்' எனப்படும் 'திருமுறை கண்ட புராணம்' (46 திருவிருத்தம்), 'திருத்தொண்டர் புராண வரலாறு' எனப்படும் 'சேக்கிழார் சுவாமிகள் புராணம்' (103 திருவிருத்தம்); ஆகியன அமைந்துள்ளன.

பெரியபுராணம் மூலத்தைப் படிக்க விரும்புவார்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

## பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் - முதற்பகுதி (படங்களுடன்)

*சேக்கிழார் சுவாமிகள்*

திருமலைச் சருக்கம், தில்லை வாழந்தணர் சருக்கம்.

சி. கே. சுப்பிரமணிய முதலியார் (உ.ஆ.)

'பெரிய புராணம்' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், பல்வேறு அறிஞர்களின் 'மதிப்புரைகள்', 'சிறப்புப் பாயிரம்', 'துதி' முதலியன உள்ளன.

உரையாசிரியர், 'முகவுரைக்கு முன்னுரை' எனும் தலைப்பில் இவ்வுரை நூல் எழுந்த வரலாற்றை விரிவாக எழுதியுள்ளார். அடுத்து, 'அறுபான் மும்மை நாயன்மார் திருநட்சத்திரங்கள், சருக்க வரிசையில் நாயன்மார் திருநட்சத்திரங்கள், மாத வரிசையில் திருநட்சத்திரங்கள், அகர வரிசையில் எனப் பலவகையில் கொடுக்கப்பட்டுள்ளன. பின்னர், உமாபதி சிவாசாரியார் அருளிய 'திருப்பதிக் கோவை' (14 பாடல்); 'திருப்பதிக் கோவை'; (14 பாடல்); கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் அருளிய 'திருமுறை கண்ட புராணம்'

(46 பாடல்); 'திருத்தொண்டர் புராண சாரம்' (78 பாடல்); 'சேக்கிழார் புராணம்' என வழங்கும் 'திருத்தொண்டர் புராண வரலாறு' (104 பாடல்) என வரிசையாக அமைந்துள்ளன.

அடுத்துத், 'திருத்தொண்டர் புராண வரலாற்றுச் சுருக்கமும் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகளது சரித ஆராய்ச்சிக் குறிப்புக்களும்' விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவர் அருளிய 'திருத்தொண்டர் திருநாமக் கோவை' (2 + 44 = 46 அடிகள்) இதறகான 'உரைக்குறிப்புக்கள்' தரப்பட்டுள்ளன. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய 'சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத் தமிழ்த் திரட்டு' என்ற தலைப்பில் 10 பாடல்கள்;

'சேக்கிழார் செய்யுளணிக் குறிப்புக்கள்' எனும் தலைப்பில், சொல்லணிகள், பொருளணிகள் ஆகியன இத் திருத்தொண்டர் புராணத்தில் எங்கெங்கு வருகின்றன என்பது சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. பின்பு, 'திருமலைச் சருக்கம், தில்லை வாழந்தணர் சருக்கம் – இவைகளிற் கண்ட பெயர் விளக்கம்' மிக விரிவாக அமைந்துள்ளது.

'பாயிரம்' முதல், 'அமர் நீதி நாயனார் புராணம்' முடிய 549 செய்யுட்கள், பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் துதி – 1 செய்யுளுடன் இம்முதல் தொகுதி உரை விளக்கம் முடிகின்றது.

*"ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்*
*'தருமைந்தன் வழிச்செல்கை கட'னென்று தன்மைந்தன்*
*மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்*
*அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்!"*

என்பது, திருநகரச் சிறப்பில் வரும் மனுநீதிச் சோழனைப் பற்றிய பாடல்.

ஒவ்வொரு பாடலுக்கும் 'சொற்பொருள், விளக்கவுரை' என அமைந்துள்ளது. இப்பாடலுக்கு உரையாசிரியர் தரும் சொற்பொருளின் தொகுப்பு :–

"(அவ்வாறு அவ்வீதி அணைந்தானாகிய) மனுவேந்தன், தனது குலத்தை வளர்த்து வழிவழிச் செலுத்தற்குரியவனாய்த் தனக்கு மகனாயுள்ளான் இவ் ஒருவனே என்ற செய்தியையும் மனத்திலே உணராதவனாகி, தருமம் தன் வழியிலே செல்வதே கடமை என்ற ஒரே எண்ணத்தை யுடையவனாய்த் தன் மகனை அவ்வீதியிலே கிடத்தி, அவனுடைய மார்பிலே தனது தேர்ச்சக்கரம் ஏறிச் செல்லும்படித் தனது தேரை ஊர்ந்தனன்; உலகத்துக்கு அருமருந்து போன்ற அரசாட்சி செய்வதுதான், செய்தற்கு, அரியதோ எளியதோ என்பது சிந்தித்தற்குரியது"

இதற்கு உரையாசிரியர் தரும் விளக்கம் அருமையானது. அதில் ஒரு சிறுபகுதி :–

'ஊர்ந்தான் மனுவேந்தன்' – செய்கையின் முடிவை முன்னர் அறிவித்தற்காகப் பயனிலையை முன்னர் வைத்தார். அரசன் துணிந்ததும், அணைந்ததும், ஊர்ந்ததும் ஒன்றன்பின் ஒன்றாய் அடுத்து விரைவில் தொடர்ந்து முடிவு பெற்றன என்பார், 127 வது பாட்டில் 'துணிந்தான்' எனவும்; 128 வது பாட்டில் 'மறுகு அணைந்தான்' எனவும்; இப்பாட்டில் 'ஊர்ந்தான்' எனவும் தொடர்ந்து கூறினார். அன்றியும், வாக்கியத்தின் இலக்கணப்படி இங்கு எழுவாயாகிய மனுவேந்தனை, வாக்கியத் தொடக்கத்தில் வைத்தால், அதற்குரிய பயனிலையாகிய வினைமுற்றுக்கும் அதற்கும் இடையுறுவன பலவாம்; செல்வினையும் அரசனும் பிரிவு பெறாமல் ஒன்றாகவே நின்றார்கள் என்பார். 'ஊர்ந்தான் மனுவேந்தன்' என வினையை முதலிற் கூறி அடுத்துச் செய்வோனைக் கூறினார். . . . !

இடையிடையே படங்களும் உள்ளன. நூலின் இறுதியில் 'சரித ஆராய்ச்சியுரை' உள்ளது. அந்தந்த நாயன்மார் வாழ்ந்த இடம் சென்று, ஆய்வு செய்து, வெளியிட்ட அரிய 'பெரியபுராண உரைக் கருவூலம்' எனலாம்.

– இவ்வாறே மேலும் 6 தொகுதிகள் உள்ளன.

### பெரியபுராண விளக்கம் - பகுதி 6

*(திருநாவுக்கரசு நாயனார் புராணம் – பாகம் 1)*

*சேக்கிழார்.*

கி. வா. ஜகந்நாதன் (உ.ஆ.)

'பெரிய புராணம்' – விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில், பெரிய புராணப் பாடல்கள் – 210 உள்ளன. ஒவ்வொரு பாட்டிற்கும் சொற் பொருள், பாடற்கருத்து; ஆங்காங்கே இலக்கணக்குறிப்பு;

*"ஆண்டஅர செழுந்தருளக் கோலக் காவை*
*அவரோடும் சென்றிறைஞ்சி அன்பு கொண்டு . . ."*

என்ற பாடலுக்கு விளக்கம் சொல்லவந்த உரையாசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"திருக்கோலக்கா :– இது, சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் 'சத்த புரீசுவரர்'; அம்பிகை, 'ஓசை கொடுத்த நாயகி'. இந்தச் சிவத்தலம், இந்தக் காலத்தில் 'திருத்தாள முடையார் கோயில்' என வழங்கும். இது, சீகாழிக்குத் தெற்குத் திசையில் அரைமைல் தூரத்தில் உள்ளது. சீகாழிக்கும் திருக்கோலக்காவுக்கும் இடையில், கழுமல வாய்க்கால் என்னும் கால்வாய் ஓடுகிறது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், பொற்றாளம் பெற்ற தலம் இது! இதைப்பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:–

"நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்தவன் . . . . கொண்டேனே!"

திருக்கோலக்காவைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய திருப்பதிகம் இப்போது கிடைக்கவில்லை. மறைந்த திருப்பதிகங்களில் அதுவும் ஒன்று போலும்!"

– இத்தகைய அரிய விளக்கவுரை நூல் இது!

**பெரிய புராண விளக்கம் - பகுதி 7**

(திருநாவுக்கரசு நாயனார் புராணம் – பாகம் 2)

சேக்கிழார்

கி. வா. ஜகந்நாதன் (உ.ஆ.)

'பெரிய புராணம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல், பாகம் 1ன் தொடர்ச்சி. திருநாவுக்கரசு நாயனார் புராணம், 211ஆம் பாடலிலிருந்து தொடங்குகிறது. இந்நூலில் மட்டும் 321 பாடல்கள் உள்ளன. (211 + 321 = 532)

"எழும் பணியும் இளம்பிறையும்
அணிந்தவரை எம்மருங்கும் . . . !"

என்ற திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில், 'திருச்சோற்றுத்துறை' என்ற திருத்தலம் சொல்லப்பட்டுள்ளது. இதற்கு இந்நூல் உரையாசிரியர் பின்வருமாறு எழுதுகின்றார்:–

"திருச்சோற்றுத்துறை : இது, சோழநாட்டில், காவிரியாற்றின் தென்கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் 'தொலையாச் செல்வ ஈசுவரர், ஓதவனேசுவரர்' என்பவை. அம்பிகையின் திருநாமங்கள், 'ஒப்பிலா அம்பிகை அம்மை, அன்னபூரணி' என்பவை. இது, திருக்கண்டியூருக்குத் தென்கிழக்குத் திசையில் ஒன்றரை மைல் தூரத்தில் உள்ளது. இந்தத் தலம், சப்த ஸ்தானத் தலங்களுக்குள் மூன்றாவது தலம். ஓதவனேசுவரர் சிவபெருமானுடைய பக்தனாகிய அருளாளன் என்னும் வேதியன், பசியால் வருந்தியபோது எடுக்க எடுக்கக் குறையாமல் இருக்கும் தன்மையைப் பெற்ற சோற்றை வழங்கியருளிய தலம் இது! இந்திரன் முதலியோர்கள் வழிபட்ட தலம் இது. இந்தத் தலத்துக்குத் தெற்குத் திசையில் 'சோறுடையான் வாய்க்கால்' என்ற பெயரைப் பெற்ற ஒரு கால்வாய் உள்ளது. 'அன்னம் படைத்த வயல்' என்ற ஒருவயலும் இந்தத் தலத்தில் உண்டு என்று ஆன்றோர் கூறுவர்!"

என்பன போன்ற விளக்கங்களை ஒவ்வொரு பாடலிலும் காணலாம்!

### பெருந் தேவபாணி

நக்கீர தேவ நாயனார்.

சைவத் திருமுறை பன்னிரண்டில் 11ஆவது திருமுறையைச் சார்ந்தது.

'தேவபாணி' என்பது இசைப்பா வகைகளில் ஒன்று. இது, 'பெருந்தேவபாணி', 'சிறுதேவபாணி' என இருவகைப்படும்.

இப் 'பெருந்தேவபாணி' 67 அடிகள் கொண்டது. முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானை முன்னிலைப்படுத்தி அப்பெருமானின் திருவருள் திறத்தைப் பண் பொருந்தப் பரவிப் போற்றுவதால், 'பெருந் தேவபாணி' எனப்பட்டது.

நூலின் இறுதியில் வெண்பா 1ம் உள்ளது.

"வேதமும் நீயே! வேள்வியும் நீயே!
நீதியும் நீயே! நிமலன் நீயே!
புண்ணியம் நீயே! புனிதன் நீயே!
பண்ணியன் நீயே! பழம்பொருள் நீயே!

என்பன போன்ற பகுதிகள் கொண்டது.

### பெரு வேண்டுகோள்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

பெருவேண்டுகோள் – மிகப்பெரிய வேண்டுகோள்.

முருகப் பெருமானிடம், 'மறவேல், எனை மறவேல்!' என அடிதோறும் முடிவதால், இது, 'பெருவேண்டுகோள்' எனப்பட்டது.

10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொன்றிலும் முருகப் பெருமான், அடியார்க்கு வந்து உதவிய நிகழ்ச்சி சொல்லப்பட்டுள்ளது.

"முழுநாரொடு புகழ்பாடிய முனிவற்கரு ரேசெய்
தொழுநோயற வேசெய்தொரு சுகநல்கிய துரையே!
கழுகோதியி லமர்வேலவ கருணாகர முருகா!
வழுவாவழி முதல்வா வெனை மறவே லெனை மறவேல்!"

என்பது அருணகிரி நாதருக்கு முருகன் அருள் செய்ததைக் கூறுவது. இவ்வாறே பிறவும் வரும்!

### பேரூர்ப் புராணம்

ஸ்ரீகச்சியப்ப முனிவர்

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (உ.ஆ)

'புராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. 'பேரூர்' என்பது கொங்குநாட்டில் உள்ள தேவார வைப்புத்தலம். இங்கு எழுந்தருளியுள்ள

இறைவனின் திருப்பெயர். பட்டீசர், அரசம்பலவாணர். இறைவி :– மரகத வல்லி.

இந்நூலின் தொடக்கத்தில், 'கச்சியப்ப முனிவர் சரித்திரச் சுருக்கம்' உள்ளது. இதில், 'திருநாட்டுப் படலம்' முதல் 'விசேட பூசைப் படலம்' முடிய 36 படலங்கள் – 2220 திருவித்தங்கள் உள்ளன.

அடிக்குறிப்பாகப் பொழிப்புரையும், பதவுரையும் கொடுக்கப்பட்டுள்ளன.

"மனையினுறும் பயன்பசுக்கோட் டத்தொருப தாநதியின் மருங்கு நூறாந்
தனைநிகரா லயத்துளொரா யிரம்வனத்தி லிலக்கம்வரை தன்னிற் கோடி
நனையொழுகு மலர்த்தொடையாய் நமதுதிரு முன்னிடத்தி னவில வொண்ணா
தனையமணி வடமெடுத்து முறையுளிமந் திரங்கணிப்போர்க் ககிலத் தம்மா?"

எனும் உபதேசப் பாடலுக்கு உரைகாரர் பின்வருமாறு எழுதுவர்:–

"உருத்திராக்க மணிமாலையைக் கையிலேந்திக் கொண்டு வீட்டிலிருந்து செபிக்கின் ஒரு மடங்கு பலமும்; பசுக்கோட்டத்திலிருந்து செபிக்கின் பத்து மடங்கும், நதியின் பக்கத்திலே நூறு மடங்கும்; ஆலயத்துளிருந்து செபிக்கின் ஆயிரமடங்கும், வனத்தில் இலக்கம் மடங்கும்; மலையில் கோடி மடங்கும், தேன் ஒழுகும் மலர்மாலையணிந்த கூந்தலையுடைய உமையே! நமது சந்நிதியிலிருந்து செபிக்கின் சொல்ல வொண்ணாத மடங்கு பலமும் உண்டாகும்; அத்தகைய உருத்திராக்க மணியாலமைந்த செபவடத்தைக் கொண்டு உலகத்திலே விதிப்படி மந்திரம் செபிப்போருக்கு!"

– இத்தகைய விளக்கங்கள் உள்ள அரிய நூல் இது!

## பொன்மயிற் கண்ணி

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

'கண்ணி' என்பது இரண்டு அடிகள் கொண்டது. பொன்மயில் – பொன்போல் அழகான மயில். ஈண்டு மயில் மீது அமர்ந்துள்ள முருகப் பெருமானைக் குறிக்கும்.

இதன்கண் 40 கண்ணிகள் உள்ளன.

"சொல்லரிய சின்மயமாச் சொல்லவுள்ள பூரணமாம்
வல்லவனை நான்கூடி வாழ்வேனோ பொன்மயிலே!"

என அடிதோறும் 'பொன்மயிலே' என முடிவது!

## பொன் வண்ணத்து அந்தாதி

சேரமான் பெருமாள் நாயனார். (அறுபத்து மூன்று நாயன்மார்களின் ஒருவர்)

சைவத் திருமுறை பன்னிரண்டில் 11ஆவது திருமுறையைச் சார்ந்தது.

'அந்தாதி' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. அந்தம் + ஆதி = அந்தாதி. அந்தம் – முடிவு; ஆதி – முதல். ஒரு செய்யுளின் முடிவு, அடுத்த செய்யுளின் முதலாவதாக வருமாறு பாடப்படுவது. அவ்வாறே இறுதிப் பாடலின் கடைசி, தொடக்கத்தில் உள்ள முதற்பாடலின் முதலாவதாகவும் பாடப்படும். அவ்வாறு பாடப்படுவது 'மண்டலித்தல்' எனப்படும்.

இந்நூல், 'கட்டளைக் கலித்துறை' என்ற யாப்பில் அமைந்துள்ளது. இறைவனின் திருமேனி 'பொன்நிறம்' ஆதலின் இந்நூலுக்குப் 'பொன் வண்ணத்து அந்தாதி' எனும் பெயர் அமைவதாயிற்று. 100 பாடல்களும், நூலின் இறுதியில் 'ஆக்கியோன் பெயர்' கூறும் 1 பாடலும் உள்ளன.

இந்நூலில் தொல்காப்பியர் கூறும், 'கடவுள் பாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' எனும் துறையில் அமைந்த பாடல்கள் நாற்பதிற்கு மேல் உள்ளன.

இந்நூலில் 'தொடை நயம், அணிநயம், பொருள்கோள்' முதலாயின அமைந்து, கற்போர்க்கு இன்பம் பயப்பன.

அகப்பொருட் பாடல்களும் உள்ளன. சிவபெருமானின் சிறப்புக்கள் சொல்லப்பட்டுள்ளன.

"பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே!"

என்பன போன்ற பாடல்கள் உண்டு!

### போற்றித் திருக் கலிவெண்பா

நக்கீர தேவ நாயனார்.

சைவத் திருமுறை பன்னிரண்டில் 11ஆம் திருமுறையைச் சார்ந்தது.

'கலிவெண்பா' என்னும் யாப்பில் அமைந்தது.

சிவபெருமான், உலகில் உள்ள உயிர்கட்கு அருள் புரிதற் பொருட்டு, அவ்வக்காலங்களில் செய்தருளிய அருட்செயல்கள் போற்றப்படுகின்றனவாதலின் 'போற்றித் திருக்கலிவெண்பா' எனப்பட்டது.

இந்நூல், 45 கண்ணிகள் கொண்டது.

". . . நேசத்தால்
வாயில்நீர் கொண்டு மகுடந் துமிழ்ந்திறைஞ்சி

ஆயசீர் போனகமா அங்கமைத்து – தூயசீர்க்
கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து
விண்ணுலகம் ஈந்த விறல் போற்றி!''

என்பன போன்ற பகுதிகள் உண்டு!

## போற்றித் திருப்பஞ்ச தசி

ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள்

இது, சிவார்ச்சனைக்குரியது. மகா கணபதி வணக்கப் பாடல் ஒன்று தவிர, 15 பாடல்கள் உள்ளன.

''சிவமெனும் எந்தாய் போற்றி!
சின்மயப் பொருளே போற்றி''

எனப் 'போற்றி' உரைப்பது இந்நூல்.

## போற்றிப் பதிகம்

கும. பழ. பழநியப்பச் செட்டியார்.

உலகநகர் ஞானியார் மடத்தில் உள்ள தெண்டாயுத பாணி மீது பாடப்பட்டது. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆனது. 10 பாடல்கள் கொண்டது.

'ஞானியார் மடத்தில் வளர் நாதா போற்றி'

என ஒவ்வொரு பாடல் இறுதியிலும் வருவது.

## போற்றிப் பஃறொடை

உமாபதி சிவாசாரியார்.

சைவ சித்தாந்த சாத்திர நூல் பதினான்கில் ஒன்று.

திருவருளையும் குருவருளையும் நினைந்து நினைந்து போற்றி உரைக்கப் படுதலாலும், பஃறொடை வெண்பா யாப்பில் அமைந்துள்ளமையாலும், இந்நூல் 'போற்றிப் பஃறொடை' எனப் பெயர் பெற்றது.

பல் + தொடை = பஃறொடை, பாவகைகளில் பஃறொடை வெண்பா என்பதும் ஒன்று. 'தொடை' என்பது 2 அடிகள் அமையக் கூறுவதோர் யாப்பமைதி ஆகும். இவ்வாறு பல இரண்டடிகள் கொண்ட பாவகையைப் 'பஃறொடை' என்பர். இது, 94 கண்ணிகள் கொண்டது.

கலை எல்லைக்கு அப்பாற்பட்டு விளங்கும் இறைவன், உயிர்களின் தகுதிக்கு ஏற்ப அருள் நலத்தை வழங்கியருளுவன். இறைவனே தமக்குக் குருவாக வந்து ஆட்கொண்டான் என்பதையும், அவ்வாறு ஆட்கொண்டருளிய திறம் படிப்படியாக எண்ணிப் போற்றற்குரிய தொன்று என்பதையும் இந்நூலாசிரியர் இந்நூலில் கூறுகின்றார். தன் நிலையிலிருந்த உயிர், கட்டுநிலைக்கு ஆளாகியும், அதன்பின்

தூயநிலைக்கு ஆளாகியும் விளங்கும் திறனும், அவ்வவ் நிலையிலும் இறைவன் ஆற்றிவரும் பேருதவியும் இந்நூல் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

"..... ஆணவத்தின்
ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலை போற்றி!"

என்பன போன்ற சைவ சித்தாந்தக் கருத்துக்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

# 'ம'

## மகாதேவ மாலை

இராமலிங்க அடிகளார்.

'மாலை' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று! மாலை போலத் தொடுக்கப்படுவதால் இப்பெயர் ஏற்பட்டது. மகாதேவன்–பெருந்தேவன். தேவர்களுக்கெல்லாம் தேவன் ஆன பரம்பொருள்.

திருவருட்பா–3ஆம் திருமுறையில் உள்ளது. இந்நூலில், 'காப்புச் செய்யுள்' தவிர, 100 செய்யுட்கள் உள்ளன. 'எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்' தால் ஆனது.

இறைவனின் பல்வேறு சிறப்புக்களையும், சைவசித்தாந்தக் கருத்துக்களையும் இனிது எடுத்துரைக்கும் நூல் இது!

"பற்றறியா முத்தர்தமை, எல்லாம் வாழைப்
பழம்போல விழுங்குகின்ற பரமே மாசு
பெற்றறியாப் பெரும்பதமே பதத்தைக் காட்டும்
பெருமானே ஆனந்தப் பேற்றின் வாழ்வே
உற்றறியா தின்னுமின்னும் மறைக ளெல்லாம்
ஓலமிட்டுத் தேடநின்ற ஒன்றே ஒன்றும்!
கற்றறியாப் பேதையேன் தனக்கும் இன்பம்
கனிந்தளித்த அருட்கடலே கருணைத் தேவே!"

என்பன போன்ற பாடல்கள் உள்ளன.

பார்க்க:–

திருவருட்பா

## மதுராபுரி அம்பிகை மாலை

ஆசிரியர் பெயர் தெரியவில்லை!

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலிக்கிய வகை 96ல் ஒன்று!

மாலை போலத் தொடுத்துப் பாடப்படுவது.

மதுராபுரி அம்பிகை–மதுரை அங்கயற்கண்ணம்மை மீது பாடப்பட்டது.

தொடக்கத்தில் 'விநாயகர் காப்பு' 1ம்; இறுதியில் 'நூற்பயன்' 2ம் ஆக 2 நீங்கலாக, 30 பாடல்கள் உள்ளன.

அம்பாளிடம் தம் குறை கூறி வேண்டுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

"இணங்கேன் ஒருவரைநின் னிருதாளன்றி எப்பொழுதும்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகிலேன் வஞ்சநெஞ்சருடன்
பிணங்கே னமுதம் பெருகுஞ் செம்பாதிப் பிறைமுடித்த
அணங்கே சரணம் கண்டாய் மதுராபுரி அம்பிகையே!"

என்பது இவற்றில் ஒன்று!

## மதுரைக் கலம்பகம்

குமரகுருபர அடிகள்.

'கலம்பகம்' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

பலவகை மலர்கள் கலந்தமைத்த மாலை 'கலம்பக மாலை!' போலப் பலவகை உறுப்புக்களும் கலந்து பாடப்படுவது 'கலம்பகம்' ஆகும். தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

'மதுரைக் கலம்பகத்' தில், பலவகைப் பொருள்களும், அகப்புறத்துறைகளிற் பலவும், பலவகை யாப்புக்களும் விரவி வந்துள்ளன.

சிலவகை மகளிரைக் கண்டு காமுற்ற இளைஞர்கள், தம் காமக் குறிப்புத் தோன்ற, அவர்களோடு பேசும் உலகியல்பைத் தழுவி, 'மதங்கியார், பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார்' என்னும் உறுப்புக்கள் சொல்லப்படும்.

இம் 'மதுரைக் கலம்பகம்' நூலில், முதற்கண் 'காப்புச்' செய்யுள்–1 சேர்த்து 103 பாடல்கள் உள்ளன.

இந்நூலில், அம்பிகை மீனாட்சியின் அருட்டன்மை, சொக்கநாதர் செய்த திருவிளையாடல்கள், தலைவி, தோழி கூற்றில் வரும் அகத்துறைச் செய்திகள், தமிழின் மேன்மை ஆகியன இயம்பப்பட்டுள்ளன.

"கரைபொரு திரங்கு கழிதொறு மிருந்து
கயல்வர வுறங்கு புள்ளீரே!
பருவமு மிழந்தென் மகடுய ருழந்து
படுவிர கமொன்று முள்ளீரே!
அருமையொ டுமெங்கள் பெருமையை யறிந்து
வருள்புரி யவிங்கு வல்லீரே!
மருவிய கடம்ப வனமது புகுந்தெ
மதுரைய ரன்முன்பு சொல்லீரே!"

என்பது அவற்றில் ஒன்று!

## மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடு தூது

*ஆசிரியர் பெயர் தெரியவில்லை!*

'தூது' என்பது, தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் 1.

தலைவன், தலைவியருள் விரகத்தால் துன்புற்ற ஒருவர், மற்றொருவர்பால் தமது வருத்தத்தைத் தெரிவிக்கும்படி உயர்திணைப் பொருளையோ, அஃறிணைப் பொருளையோ, தூதாக விடுப்பது.

'கலிவெண்பா' யாப்பில் பாடப் படவேண்டும் என்பது இதற்குரிய இலக்கணம்.

'தமிழ்விடு தூது' என்பது, மதுரைச் சொக்கநாதக் கடவுள்பால் காதல் கொண்ட ஒரு தலைவி, விரகத்தால் துன்புற்றுத் தமிழை அவர்பால் தூது விடுத்ததாகப் பாடப்பட்டது.

இது, புறத்திணைத் துறைகளில், 'கடவுள்மாட்டு' மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' எனப்படும்.

இந்நூல், 268 கண்ணிகள் கொண்டது.

இந்நூலின் தொடக்கத்தில், சொக்கநாதப் பெருமான், சைவ சமயகுரவர் நால்வர், தொல்காப்பியம், அகத்தியர் எனப் பலரின் பெருமை கூறப்பட்டுள்ளது. பின்பு, தமிழை அரசனாக உருவகித்து, எழுத்திலக்கணம் கூறி, தமிழுக்குரிய பல்வேறு அழகுகளையும் நூலாசிரியர் விளக்குகின்றார்.

தேவார, திருவாசகங்கள், பிற திருமுறைகள் பற்றிய கருத்துக்களும் இடம் பெற்றுள்ளன.

தலைவி, "எனது ஆற்றாமையால் தூது சொல்ல வா என்பேன்" என்று கூறுபவள், "ஆண்பனையைப் பெண்பனையாக ஆக்கியும்; காரைக்காலம்மையாரும் ஔவையாருமாகத் தோன்றியும்; திலகவதியாருடன் அவதரித்தும்; மங்கையர்க்கரசியாருக்கு ஆசிரியராக எழுந்தருளியும்; இசைஞானியார்க்கு மகவாகத் தோன்றிச் சிங்கடியார்க்கும் வனப்பகையார்க்கும் தந்தையாக விளங்கியும், நீ பெண்களெலாம் வாழப் பிறந்தமையால் என் மனத்தில புண்கள் எல்லாம் மாறப் புரிகண்டாய்!" என்று தலைவி வேண்டுவதாக அமைந்துள்ளது.

## மதுரைத் திருப்பதிகங்கள் (தலச்சிறப்புடன்)

*ச. தண்டபாணி தேசிகர் (ப.ஆ.)*

நூலின் தொடக்கத்தில் 'தொன்னூல் முன்னுரை' உள்ளது. இதில், 'பரிபாடல்' முதல் 'திருவிளையாடற்புராணம்' ஈறாகப் பதினொரு நூல்களிலிருந்தும் மதுரையைப் பற்றிய கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன. அடுத்துத் 'திருஞான சம்பந்தரும் மதுரையும், மூர்த்திநாயனாரும் மதுரையும், குருஞான சம்பந்தரும்

மதுரையும், குமரகுருபரரும் மதுரையும்' என்ற தலைப்புக்களில் இவர்களுக்கும் மதுரைத் திருக்கோயிலுக்கும் உண்டான தொடர்புகள் விளக்கப்பட்டுள்ளன.

'ஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்' பற்றிய கருத்து; மதுரையைப் பற்றிய நூல்கள், குறிப்புக்கள், வரலாற்றுத் தொடர்புள்ள ஊர்கள், பாண்டிய நாட்டு அரசியல் ஆகிய தலைப்புக்களில் அரிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

அடுத்துத் 'திருஞான சம்பந்தர் திருப்பதிகம்' முதல், மதுரையைப் பற்றிய திருப்புகழ்' வரையிலான பாடல்கள் உள்ளன.

'வரலாற்றுத் தொடர்புள்ள ஊர்கள்' என்ற பகுதியில், 'ஆளுடையார் கோயில், இருஞ்சிறை, கட்டுநல்லூர், கழுவேறுமடை, மேலைக்கால், காவரைநல்லூர், தனிச்சயம், திருவேடகம், நரிக்குடி, நாம்முன்னூர், ஓரிரவு இருக்கை, பட்டமங்கலம், பெருங்கிராமம்' முதலான ஊர்களின் பெயர்க்காரணம் சொல்லப்பட்டுள்ளது.

## மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை

*குமரகுருபர அடிகள்*

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96 ல் ஒன்று. மாலைபோலத் தொடுத்துப் பாடுவதால் 'மாலை' எனப்பட்டது. இரட்டை- இரண்டு. கட்டளைக் கலித்துறை, நேரிசைவெண்பா எனும் இருவகை யாப்பினால் ஆன நூல் என்பதாம்.

மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள மீனாட்சியம்மை மீது பாடப்பட்டது.

நேரிசைவெண்பா - 10; கட்டளைக் கலித்துறை 10 என 20 பாடல்கள் கொண்டது.

மதுரை அங்கயற்கண்ணம்மையின் திருவருட் செயலும், திருவிளையாடற் கருத்துக்களும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

*"நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி*
*ழுண்டு நயந்த சில*
*பாவுண் டினங்கள் பலவுமுண்*
*டேபங்கிற் கொண்டிருந்தோர்*
*தேவுண் டுவக்குங் கடம்பா*
*டவிப்பசுந் தேனின் பைந்தாட்*
*பூவுண்டு நாரொன் றிலையாந்*
*தொடுத்துப் புனைவதற்கே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## மதுரை மீனாட்சியம்மை கலிவெண்பா

*சிதம்பர சுவாமிகள்*

மதுரையில் கோயில்கொண்டு எழுந்தருளிய மீனாட்சியம்மை மீது பாடப்பட்டது. 'கலிவெண்பா' என்ற யாப்பில் அமைந்தது. இதன்கண், 'காப்பு' ச் செய்யுள்' 1 தவிர 91 கண்ணிகள் உள்ளன.

திருவிளையாடற் புராணத்தில் வரும் பல செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

*"ஆறுசம யங்களுக்குள் அவ்வர்க்கும் வெவ்வேறாய்*
*வேறு பலரூப விகற்பமதாய்க் – கூறரிதாய்*
*அங்கங்குத் தானாய் அமர்ந்தவளே! ......"*

என்பன போன்ற பாடல்கள் உண்டு!

## மதுரை மீனாட்சியம்மை குறம்

*குமரகுருபர அடிகள்.*

'குறம்' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. 'குறவஞ்சி' யின் ஒரு பிரிவு 'குறம்' !

மீனாட்சியம்மைக்குக் குறத்தி ஒருத்தி குறிகூறுவதாக அமைத்துப் பாடப்பட்டது. முதலில் அவள், தன்மலை வளம் கூறிப் பின்பு 'நீ நினைத்த குறி இனிக் கேள் அம்மே" என்பாள்.

இந்நூலில் 'காப்பு' ச் செய்யுள் 1 தவிர, 51 பாடல்கள் உண்டு. இதனைப் பாடியவர் குமரகுருபரர் அல்லர், வேறுஒருவர் என்றும் கூறுவர்.

*"திங்கள் முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை*
*தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை*
*அங்கயற்க ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்*
*பொங்கருவி தூங்குமலை பொதியமலை என்மலையே?"*

என்பது அவற்றில் ஒன்று!

## மதுரை மீனாட்சியம்மை திருவடிப்பத்து

*அரசஞ்சண்முகனார்.*

மதுரையில் எழுந்தருளியுள்ள மீனாட்சியம்மை மீது பாடப்பட்டது. 10 நேரிசை வெண்பாக்கள் கொண்டது.

*'ஆலவா யண்ண லருந்திய வாலத்தை*
*வாலமுத மாக்கியஎன் மாதா....."*

போன்ற பாடல்கள் உள்ளன.

## மயில்விடு தூது

*கு. நடேசக் கவுண்டர்.*

'தூது' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

தூதுப் பொருள்களில் மயிலு;ம ஒன்று. முருகப் பெருமானின் ஊர்தியாக விளங்குவது—மயில். எனவே, பழநி முருகன் மீது பாடப்பட்டது இது!

பழனியில், தண்டாயுதபாணியைத் தரிசிக்கப் பெற்று, இன்ப அனுபவம் சிறிதே பெற்று, அது மறைய, மீண்டும் அவ் அனுபவம் பெறும் பொருட்டு, முருகனை அழைத்து வருமாறு மயிலைத் தூது விடுப்பதாக அமைந்த நூல்! 'கலி வெண்பா' யாப்பில் பாடப்பட்டது.

நூலின் தொடக்கத்தில் 'விநாயகர் காப்பு' முதலாக 3 பாடல்கள், இறுதியில் 2 வெண்பாக்கள் உள்ளன.

நூல், 2 அடிகொண்ட 'கண்ணி' 397 கொண்டது.

இதன்கண், முருகப் பெருமானின் ஒப்பிலாப் பெருமை, அவனின் படைவீடுகள், பழனிமலைச் சிறப்புக்கள், தண்டபாணியின் மெய்க் கோலம், பூசனைச் சிறப்பு, முருகன் திருவுலாக் காட்சி, மயிலைத் தூதனுப்பல் எனப் பல்வேறு சிறப்புக்கள் உள்ளன.

"....

*நீலக் கடன்முகட்டின் நேரே எழுந்தென்னக்*
*கோலக் கலாபக் குதிரையின்—மேலமர்ந்து*
*பேரழகுக் கீடழிந்த பெற்றிமையாற் றன்குடையை*
*மாரன் றிறைகொடுத்தால் மானவொளி.....!"*

என்பனபோன்ற பகுதிகளைக் காணலாம்!

## மயூரகிரிக் கோவை

*சாந்துப்புலவர்*

'கோவை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று, 'காட்சி' முதலிய துறைகளை நிரல்படக் கோக்கப் பெறுவதால் " கோவை" எனப்பட்டது.

'மயூரகிரி' என்பது, மதுரைக்கு அருகேயுள்ள திருப்புத்தூருக்கு அண்மையில் உள்ள 'குன்றக்குடி'யாகும். இங்கு எழுந்தருளியுள்ள ஆறுமுகக் கடவுள் மீது பாடப்பட்ட நூல், 'கட்டளைக் கலித்துறை' யாப்பில் அமைந்தது.

நூலின் தொடக்கத்தில் 'காப்பு'ச் செய்யுள் —1; இறுதியில் வாழ்த்து—1 நீங்கலாக 535 செய்யுட்கள் உள்ளன.

சொல் நயம், பொருள் நயம், சிலேடை, உள்ளுறை உவமை, முரண், யமகம், திரிபு, மடக்கு, சித்திரகவி எனப் பலவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

## மரணமிலாப் பெருவாழ்வு

*இராமலிங்க அடிகளார்.*

'மரணமிலாப் பெரு வாழ்வு' என்பது, 'இறப்பு அச்சம் இல்லாத இன்ப வாழ்வை'க் குறித்தது.

இது, திருவருட்பாவில் ஆறாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவால் ஆனாது. 28 செய்யுட்கள் உடையது.

*"நினைந்து நினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந் தன்பே*
*நிறைந்து நிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு*
*நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான*
*நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று*
*வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின் உல கியலீர்!*
*மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!*
*புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்!*
*பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே!*

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:–

திருவருட்பா

## மாமறை முனிவர்

*(திருநாளைப் போவார் நாயனார் புராணம் மூலமும் பொழிப்புரையும்)*

*சேக்கிழார்,*

*ச. சாம்பசிவனார் (உ.ஆ)*

பெரிய புராணத்தில் வருவது, 'திருநாளைப் போவார்' நாயனார் புராணம்'. 'பெரியபுராணம்' – நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது.

'மாமறை முனிவர்' எனும் தொடர், 'நந்தனார்' எனப் பிற்காலத்தில் வழங்கப்படும் 'திருநாளைப் போவார் நாயனாரை'க் குறிக்கும். பெரியபுராணத்தில், இவரைப் பற்றிய பாடல்கள் 37 ஆகும்.

இந்நூலின் தொடக்கத்தில், 'நூற் சிறப்பும் ஆசிரியர் குறிப்பும்' உள்ளது. அடுத்துப் பெரியபுராணப் பாடல் ஒவ்வொன்றிற்கும் பொழிப்புரை, சொற்பொருள், பாநயம், அணிநலன்கள் ஆகியன தரப்பட்டுள்ளன.

இப்புராணத்தில் வரும்,

*"கைதொழுது நடமாடுங் கழலுன்னி . . . இம்மாயப்*

*பொய்தகையும் உரு ஒழித்து . . .”*

எனும் பாடலுக்கு, உரையாசிரியர் தரும் நயவுரை :–

“மாயமான பொய்த்தன்மை கொண்ட உருவத்தை நீக்கி, இவ்வுலகில் அனைத்துப் பொருள்களும் நிலையில்லாதவை; மாயமானவை; பொய்ம்மையானவை. ‘நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவாண்மை கடை’ என்றார் வள்ளுவரும், உடம்பே நிலையற்றது. இவ்வுடம்புள்ளும் இது ‘புலை உடம்பு, இது நற்குல உடம்பு’ எனச் சாதி, குலம் இவற்றால் பிரித்து வேறுபாடு காட்டல் அறிவற்றது என்னுங் கருத்துக்களை உள்ளடக்கியே சேக்கிழார், ‘மாயப்பொய் தகையும் உரு’ என்றார்!”

– இத்தகைய அரிய விளக்கங்களைத் தன்னகத்தே கொண்ட நூல் இது!

## மாலை மாற்று மாலை

*அரசஞ் சண்முகனார்*

‘மாலை’ என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. மாலை போலத் தொடுத்துப் பாடுவது.

‘மாலை மாற்று’ என்பது ‘சித்திரகவி’ வகையைச் சார்ந்தது. ஒரு செய்யுளை முதலிலிருந்து படித்தாலும் இறுதியிலிந்து படித்தாலும் அதே செய்யுளாக எழுத்து ஒத்து அமையும்படி பாடப்படுவது.

இந்நூலில், வெண்பாவும் ஆறு எழுத்து அடிகள் கொண்டது, ஏழெழுத்து அடிகள் கொண்டது, எட்டெழுத்து அடிகள் கொண்டது, பதினோரெழுத்து அடிகள் கொண்டது பதினாறெழுத்து அடிகள் கொண்டது என 6 வகைச் செய்யுட்கள் உள்ளன.

முதலில் காப்புச் செய்யுள்–2; இறுதியில் 1ம் தவிர 30 செய்யுட்கள் உள்ளன. சொல்லணி, பொருளணிகள் உண்டு. முருகனைப் பற்றிய பாடல்கள் உண்டு.

*“வாலகன மானீயா மாவல வேனீத*<br>
*நீலன நேசாயா நீயல–மாலய*<br>
*னீயாசா னேநல னீதனீ வேலவ*<br>
*மாயாநீ மானகல வா!”*

என்பது இவற்றில் வரும் ஒரு வெண்பா. இவ்வாறே பிறவும் உள்ளன.

## மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்

*குமரகுருபர அடிகள்.*

‘பிள்ளைத் தமிழ்’ என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. மதுரை மீனாட்சியம்மை மீது பாடப்பட்டது.

கடவுளையோ, ஆசிரியரையோ, வள்ளலையோ, குழந்தையாகக் கருதிக் 'காப்பு' முதலிய 10 பருவங்களால் பருவம் 1க்குப் பத்து பாடல்வீதம் 100 பாடல்களால் பாடப்படுவது. இஃது (1) ஆண்பாற் பிள்ளைத் தமிழ்; (2) பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும். 10 பருவங்களில் கடைசி 3 பருவமட்டும் மாறிவரும்.

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' பெண்பாற் பிள்ளைத் தமிழ். (1) காப்புப் பருவம் : திருமால் முதலிய தெய்வங்கள், பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்க வேண்டுமாறு அமைப்பது. குழந்தை பிறந்து 2ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும்.

குழந்தை பிறந்த ஏழாவதுநாள் 'காப்பிடல்' என்ற வழக்கம் ஒன்று உண்டு. அதனையொட்டி, இலக்கியத்தில் இஃது இடம்பெற்றதாகக் கருதுவர். 2ஆவது 'செங்கீரைப் பருவம்' பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது. இளங்குழந்தை 'ங்க்' 'ங்க்' எனக் கூறக் கேட்ட தாய்மார் உவக்கும் பருவம் இது. இவ்ஒலி, மழலையைக் காட்டிலும் இளம்பருவத்தையுடையது. சொல்லுக்குரிய அமைதியில்லாததைச் 'செங்கீர்' என்றனர். 'கீர்–சொல்', செங்கீரையை ஒரு 'நிருத்த விசேஷம்' என்பர் பெரிய வாச்சான் பிள்ளை; 'செங்கீரை ஆடுக' என்பது ஆடல் விசேடம். இது, குழந்தை பிறந்த 5–ஆவது மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும்.

3 ஆவது 'தாலப்பருவம்'. 'தாலாட்டு' என்பது 'தால்' என மருவியது. குழந்தையைத் துயிலச் செய்வார், தம் நாவை அசைத்துத் 'தாலே தாலேலோ' எனப் பாடுவர். இது 7ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும்.

4வது 'சப்பாணி'ப் பருவம். சப்பாணி=கையோடு கை சேர்த்துக் கொட்டுதல்! 'சப்பாணி கொட்டுக' எனக் குழந்தையிடம் கூறுவதாக அமைப்பது. இது, குழந்தை பிறந்த 9ஆம் மாதத்தில் பாடப்படும்.

5ஆவது 'முத்தப் பருவம்'. குழந்தையிடம் 'முத்தம்தா' எனத் தாய்மாரும் பிறரும் வேண்டுவதாகப் பாடுவது. இது 11ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும்.

6ஆவது 'வருகைப் பருவம்', தளர்நடையிட்டு வரும் குழந்தையை 'வா' என்று அழைப்பதாகக் கூறுவது. இது 12ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும். இது, 'வாரானைப்பருவம்', என்றும் கூறப்படும்.

7ஆவது 'அம்புலிப் பருவம்'. அம்புலி–சந்திரன். அம்புலியைக் குழந்தையோடு விளையாட வா என்று அழைப்பது. இது 15ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும். அவ்வாறு அழைக்கையில் 'சாம,பேத,தான, தாண்டம்' என 4 வகை உபாயங்களைக் கூறுதல் மரபு. அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவருக்கும் ஒப்புக் கூறுவது – 'சாமம்'. வேற்றுமை கூறுதல் – பேதம்; அம்புலிக்கு நன்மை கூறுதல்–தானம்; வராவிடில் அம்புலிக்குத் துன்பம் நேரும் எனல்–தண்டம்.

இவ் 7 பருவமும் இருபாலாருக்கும் பொது. ஆண்பாற் பிள்ளைத் தமிழில், 'சிற்றில், சிறுபறை, சிறுதேர்' எனப்பருவம் அமையும். இம் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில், 'அம்மானைப் பருவம், நீராடற் பருவம், ஊசற் பருவம்' வந்துள்ளன.

8ஆவது அம்மானைப் பருவம்– பாட்டுடைத் தலைவியை அம்மானை ஆடும்படி கூறுவது. இது 17–ஆம் மாதத்தில் நிகழ்வதாகக் கூறுவது மரபு.

9ஆவது நீராடற் பருவம்–பாட்டுடைத் தலைவியை நீராட வரவேண்டும் என வேண்டிக் கொள்ளுதல். இது 19ஆம் மாதத்தின் நிகழ்வதாகப் பாடப்படும்.

10ஆவது ஊசற் பருவம்– பாட்டுடைத் தலைவியை ஊஞ்சலாட வருக என அழைத்தல். இது 21ஆம் மாதத்தில் நிகழ்வதாகப் பாடப்படும்.

(ஆண்பாற் பிள்ளைத் தமிழில் 8ஆவதாக வருவது சிற்றிற் பருவம்; சிற்றில் விளையாடும் சிறுமியர், பாட்டுடைத் தலைவர், தம் சிற்றிலை அழிக்கும் போது, 'எம் சிற்றிலை அழியாதே!' என வேண்டுவது. 9ஆவது சிறுபறைப் பருவம்; பாட்டுடைத் தலைவரை நோக்கிச் 'சிறுபறை முழக்குக' என வேண்டுவது; 10ஆவது, 'சிறுதேர்ப் பருவம்' – பாட்டுடைத் தலைவரைச் 'சிறுதேர் உருட்டு' என வேண்டுதல்)

இம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில், முதலில் விநாயகக் கடவுள் துதி – 1 பாட்டு நீங்கலாக 101 பாடல்கள் உள்ளன. ஆசிரிய விருத்தப்பாவில் அமைந்தவை.

இந்நூலில், இறைவன் இறைவியின் அருட்செயல்கள், பல்வேறு அணிநயங்கள், கற்பனை, திருவிளையாடற் புராணச் செய்திகள், தமிழின் சிறப்பு எனப் பலவும் அமைந்து கற்பார்க்குக் களிபேருவகை தருவனவாம்.

இதன்கண், வருகைப் பருவத்தில் இடம்பெற்ற பின்வரும் பாடலைக் குமரகுருபர அடிகள் பாடியபோது, அம்பாள் சிறுகுழந்தையாக வந்து, ஆங்கே அமர்ந்திருந்த திருமலை நாயக்கரது கழுத்திலிருந்த முத்துமாலையை எடுத்துக் குமரகுருபரருக்கு அணிவித்துவிட்டு மறைந்தாள் என்பது வரலாறு:–

*"தொடுக்குக் கடவுட் பழம்பாடற்*
*றொடையின் பயனே நறைபழுத்த*
*துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்*
*சுவையே அகந்தைக் கிழங்கை அகழ்ந்(து)*
*எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்*
*கேற்றும் விளக்கே!....."*

இத்தகைய பக்திச்சுவை ததும்பும் பாடல்கள் உள்ளன!

## முதல்வன் முறையீடு

*பட்டினத்தார். (பிற்காலத்தவர்)*

முதல்வனாகிய சிவபெருமானிடம் முறையீடு செய்வதாகப் பாடப்பட்டது.

'கன்னி வனநாதா! கன்னி வனநாதா!'

என்று தொடங்கும் இப்பாடல் ஈரடிகொண்ட 72 பாடல்களால் ஆனது.

கன்னி–மீனாட்சி; கன்னிவனம்–மதுரை.

கன்னிவன நாதன்–சிவபெருமான்.

"முத்தி அளித்தையிலை! மோனம் கொடுத்தையிலை!
சித்தி அளித்தையிலை! சீராட்டிக் கொண்டையிலை"

என்பன போன்ற பாடல்கள் உண்டு!

## முதுமொழிமேல் வைப்பு

வெள்ளியம்பல வாண முனிவர்

முதுமொழி–திருக்குறள். திருக்குறளின் சீரிய கருத்துக்களைக் கற்பவர்கள் விளக்கமுற உணர்தற்பொருட்டுப் பல வரலாறுகள் பொருத்தமுற அமைத்துப் பாடப்பட்டது.

தொடக்கத்தில், 'சிறப்புப்பாயிரம், காப்பு' ச் செய்யுள் 2 தவிர, அறத்துப்பாலில் –63 வெண்பா, பொருட்பாவில் 96 வெண்பா; காமத்துப்பாலில் –27 வெண்பா; வீட்டின்பாலில் 10 வெண்பா என மொத்தம் 196 வெண்பாக்கள் உள்ளன.

திருத்தொண்டத் தொகையில் வரும் தனி மெய்யடியார்கள் –63 பேர் எனவே, அறத்துப்பாலில் 63 வெண்பா; மெய்கள் எனப்படும் தத்துவம் 96; எனவே பொருட்பாலில் 96 வெண்பா; காரைக்காலம்மையார் முதலாகச் சொல்லப்படும் கன்னித் தமிழ்த் திருமுறை 12ன் முதல்வர் 27 பேர். எனவே காமத்துப் பாலில் –27 வெண்பா; சைவ சித்தாந்த சாத்திர நூலாகிய 'திருவருட் பயன்' என்ற நூலில் 'பதிமுதுநிலை' முதல் 'அணைந்தோர் தன்மை' ஈறாகச் சொல்லப்படும் பகுதிகள்–10. எனவே வீட்டின்பால் –10 வெண்பா எனும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது.

"தென்னை னிறைவரருள் சேர்ந்துசெங் கோல்செலுத்த
மன்னு குலச்சிறையே மந்திரியாம்–என்னை
அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை!"

என்னும் வெண்பா, பெரியபுராணத்தில் சொல்லப்படும் குலச்சிறை நாயனாரைக் குறித்தது.

இவ்வாறே பிறவும் வரும்!

## முத்தலநாயக மும்மணிக் கோவை

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார்.

'காப்பு' ச் செய்யுள் தவிர 30 பாக்கள் கொண்டது.

ஆசிரியப்பா, நேரிசை வெண்பா, கலித்துறை எனம் மூவகை யாப்பில் ஆனது. கடம்பந்துறை, இரத்தினகிரி, ஈங்கோய்மலை என்னும் தலைப்புக்களில் கவிதைகள் உள்ளன.

'கோவை' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

மூன்று மணிகளைக் கோத்ததுபோல், 'ஆசிரியப்பா, நேரிசை வெண்பா, கலித்துறை' என்ற மூவகை யாப்பு அமையப் பாடுவது. 'மும்மணிக் கோவை' 'முத்தலம்' என்பது மூன்று தலங்கள்; அவை: கடம்பந்துறை, இரத்தினகிரி, ஈங்கோய் மலை. இம் மூன்று தலங்களிலும் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவன்மீது பாடப்பட்டது.

இதன்கண் 'காப்புச் செய்யுள்' 1 தவிர 30 பாடல்கள் உள்ளன.

"வீடரு டாதா சிவனன் றிலையென வேதமெல்லா
மாடலி னான்முத்தி காமிக டாமுத்த காபிமுகங்
கூடுற நோற்றடை கென்றோர்த் தருள்குணங் கொல்கடப்பங்
காடனவ் வாசை முகனா யமர்ந்தருள் காரணமே!"

என்பது அவற்றில் ஒன்று!

## முத்திநெறி இலக்கணம்

தமிழ்வேத நாவலர் சண்முகநாதபிள்ளை.

'விநாயகர் காப்பு' முதலான7 பாடல்கள் தவிர 'ஆன்ம இயல்பு', 'இயமநியம விபரம்' பற்றிய 31 பாடல்களும் அடுத்துக் 'கலிவெண்பா' வில் 139 கண்ணிகளும் உள்ளன.

"பத்தரா யென்றும் பணிவார் சிவபூசை
நித்தமுஞ் செய்யு நியமமுள..."

என்பனபோல் வரும் பாடல்களைக் காணலாம்.

## முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்

குமரகுருபர அடிகள்

'பிள்ளைத் தமிழ்' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

கடவுளையோ, அடியவரையோ, வள்ளல்களையோ, பிள்ளையாகக் கருதிப் பருவம் 1க்குப் 10 பாடல் வீதம் 10 பருவத்திற்கு 100 பாடல்கள் பாடப்படும். இஃது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என 2 வகைப்படும். கடைசி 3 பருவம் வேறுபட்டுவரும்.

இந்நூலுக்கு 'முத்தையன் பிள்ளைத் தமிழ், புள்ளிருக்கு வேளூர்ச் சேனாபதிப் பெருமாள் பிள்ளைத் தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் குமார தேவர் பிள்ளைக் கவி'

என வேறு பெயர்களும் உண்டு!

வைத்தீசுவரன் கோயிலுக்குப் 'புள்ளிருக்குவேளூர்' என்ற வேறுபெயர் உண்டு. இவ்வூர் சீகாழிக்கு அருகில் உள்ளது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் மீது பாடப்பட்டது.

இதில் முருகக் கடவுளின் வீரச் செயல்கள், அருட்டன்மைகள், பல்வேறு அணிநயங்கள் ஆகியன அழகிய தமிழில் சொல்லப்பட்டுள்ளன. சந்தப் பாக்கள் பலவுள்ளன.

"வடிவி னழகு யெழுத வரிய
புயமு நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின்
மணியு மணிகொள் கச்சையும்....!"

என்பன போன்ற சந்தப்பாக்களைக் காணலாம்.

## முருகன் நான்மணி மாலை

சுப. ஆறுமுகன் செட்டியார்.

'காப்பு', குரு வணக்கம் தவிர 40 பாடல்கள் கொண்டது. 'நேரிசை வெண்பா', கட்டளைக் கலித்துறை, விருத்தம், நேரிசையாசிரியப்பா' எனும் நான்கு வகை யாப்பில் பாடப்பட்டது.

"பாரிற் பிறந்துபல பாசமெனும் பந்தத்தின்
வாரிற் கிடக்குமெனை வந்தடைவாய்....!"

முதலான பகுதிகள் உள்ளன.

## மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை

அதிரா அடிகள்

சைவத் திருமுறை பன்னிரண்டில் 11 ஆவது திருமுறையைச் சார்ந்தது. 'மூத்தபிள்ளையார்' என்பது விநாயகப் பெருமானைக் குறிக்கும். 'அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை' என்னும் மூவகையாப்பால் ஆனது. இவை கோவையாகத் தொகுத்துப் பாடப்பட்டிருத்தலின் 'மும்மணிக்கோவை' எனப்பட்டது. தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

'மூத்த பிள்ளையார்' என்பது முருகப்பெருமானுக்கு மூத்தவராகிய விநாயகக் கடவுளைக் குறிக்கும். இவர்மீது பாடப்பட்ட நூல்.

இதன்கண் 30 பாடல்கள் இருக்க வேண்டும். ஆனால் கிடைத்தவை 23 மட்டுமே.

இந்நூலில், "தம்மை அன்பால் வழிபடும் மெய்யபடியார்களின் பிணியைப் போக்க வல்லவர்; அவருடைய திருவடிகளை எண்ணி வழிபடுவார்க்கு மனக்

கவலை இல்லை" என்பன போன்ற செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

"....

நெடும்பொற் சரணம் ஒத்த

இடும்மைப் பௌவம் இனிநீங் கலமே!"

என்பன போன்ற பாடல்களைக் காணலாம்.

## மூத்த நாயனார் இரட்டை மணிமாலை

கபில தேவநாயனார்.

சைவத் திருமுறை பன்னிரண்டில் 11ஆம் திருமுறையைச் சார்ந்தது. 'மாலை' என்பது, தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

'வெண்பா, கட்டளைக் கலித்துறை' என்னும் இரண்டு வகை யாப்பினால் ஆனதால் 'இரட்டை மணிமாலை' எனப் பட்டது. சங்ககாலத்துக் 'கபிலர்', கபிலதேவநாயனாரின் வேறானவர்!

மூத்த நாயனார்–விநாயகக் கடவுள். இவர்மீது பாடப்பட்ட 20 செய்யுட்களால் ஆனது; அந்தாதித் தொடையில் அமைந்தது. இந்நூலில், " ஆனைமுகக்கடவுளான விநாயகரைத் தேவர்களும் வழிபடுகின்றனர். தீவினைகளை வேரோடு களைபவர் இவரே! இவரைப் போற்றி வழிபடுபவர்களிடம் திருமகள் தங்குவாள்!" என்பபோன்ற கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன.

"திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கம் பீடும் பெருக்கும்–உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை!"

என்பது இந்நூலில் வரும் பாடல். இத்தகைய கருத்துக்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

## மெய்கண்ட சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும் (முதற்பகுதி)

மெய்கண்டார் முதலானோர்

திருவுந்தியார்; திருக்களிற்றுப்படியார்; சிவஞான போதம்; சிவஞான சித்தியார் – பரபக்கம், சுபக்கம்.

ப. இராமநாத பிள்ளை (ப.ஆ.)

இந்நூல்களின் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூல்களில், 'சிவஞான போதம்' நூலுக்குச் சிவஞான முனிவர் அருளிச் செய்த 'சிற்றுரை'யும் இடம்பெற்றுள்ளது. முதலில் மூலபாடம், அடுத்துப் 'பொழிப்புரை', 'விளக்கம்' என அமைந்துள்ளது.

"அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற!"

என்னும் பாடலுக்கு இந்நூல் உரையாசிரியர் தரும், பொழிப்புரையும் விளக்கமும் வருமாறு:–

"(பொ–ரை) நிட்களமாய் ஒருவராலும் அறிதற்கரிதாகிய சிவம், ஆசாரிய மூர்த்தமாகி வந்ததென்று கருதி, உம்முடைய குற்றத்தினின்று நீங்குவீராக! ஞானத்தைத் தான் விரும்பாமல் தானே வலியக் கொடுத்ததென்று கருதி உம்முடைய குற்றத்தினின்று நீங்குவீராக!

'உந்தீபற' என்பதற்கு மேற்செய்யுள்களுக்கும் இப்படிப் பொருளுரைக்க. 'பற' என்றது ஒருமை பன்மை மயக்கம். இப்படியன்றிப் 'பறக்க' என்னும் வியங்கோளைப் 'பற' என்று விகாரமாக்கிக் கர்த்திடுவாலே உம்முடைய தீமைகளெல்லாம் பறக்கக் கடவ தெனினும் அமையும். இதற்கும் அப்படியன்றிப் 'பறக்க' என்னும் எச்சத்தைப் 'பற' என விகாரமாக்கி 'உம்முடைய தீமைகளெல்லாம் பறந்துபோம் படிக்குக் கருதி நிற்பீர்' எனினும் அமையும். இதற்கு 'நிற்பீர்' என்பது வருவிக்க. இம் மூவகையுமன்றிப் பொருள் உண்டாயினும் காண்க.

(விளக்கம்) இறைவன், நடப்பாற்றலின் வழியாக எல்லாமாய்க் கலந்து நிற்கும் நிலை, 'அத்துவா மூர்த்தி' என்பர். நடப்பாற்றல். திரோதான சத்தி, மறைப்பாற்றல். அவன் வேறாய் நிற்கும் நிலை 'நவந்தரு பேதமாய்' நிற்கும் நிலை – 'சிவஞ்சத்தி' சித்தியார், (2–4–2). ஆட்கொள்ளும் பொருட்டு சிவகுருவாய் வருதல் சகளமாகும. சகளம் – வடிவம். தானாக – சிவமாக; சஞ்சிதம் – எஞ்சுவினை; பிராரத்தம் – ஏற்றவினை; ஊழ்வினை. ஆகாமியம் – ஏறுவினை.

ஒத்த கருத்துடைய திருக்களிற்றுப்படியாரின் செய்யுட்கள் – 'அகளமாய்' – (4); 'ஆகமங்கள்' – (5).

– இவ்வாறு அரிய பொருள், விளக்கம், இலக்கணக்குறிப்பு மேற்கோள் எனப் பலவும் அமைந்த நூல் இது!

## மெய்கண்ட சாத்திரம்

மெய்கண்டார் முதலானோர்.

சுவாமிநாதத் தம்பிரான் (ப.ஆ.)

இந்நூலின் தொடக்கத்தில், 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு'; கு. சுந்தரமூர்த்தி எழுதிய 'ஆராய்ச்சி முன்னுரை' முதலியன உள்ளன. இம் முன்னுரையில், "சைவ சமயம், சாய நூல்கள், மெய்கண்ட நூல்கள், அருளிய

அருளாளர்கள்' முதலாயின இடம் பெற்றுள்ளன. மேலும் 14 சாத்திர நூல்களைப் பற்றியும், பாடிய அருளாளர்களைப் பற்றியும் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.

'திருவுந்தியார்' முதல், 'சங்கற்ப நிராகரணம்' வரை 14 சாத்திரங்கள் (மூல மட்டும்) உள்ளன. அடுத்துத் 'துகளறு போதப் பொருள் வைப்பு முறை, சிவப்பிரகாசக் கருத்து' முதலாயினவும் இடம் பெற்றுள்ளன.

## மெய்கண்ட சாத்திரம் (சித்தாந்த சாத்திரம்)

மெய்கண்டார் முதலானோர்

சைவசித்தாந்த மகாசமாஜம் (ப.ஆ)

'சிவஞான போதம்' முதலானவற்றின் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் ஆங்கில முன்னுரை உள்ளது. 'திருவுந்தியார்' முதல் 'சங்கற்ப நிராகரணம்' முடிய 14 சாத்திரங்கள் – இறுதியில் 'சீகாழிச் சிற்றம்பல நாடிகள்' அருளிய 'துகளறு போதம்' உள்ளன. அனைத்தும் மூலபாடங்கள்! இறுதியில் 'சந்தான குரவர் தோத்திரங்கள்' 5 பாடல்கள் உள்ளன.

"அடியார்க் கெளியன் எனத் தில்லை
யண்ணல் அருளுந் திருமுகத்தின்
படியே பெற்றான் சாம்பாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலுங் கரைவுற் றடைந்திடுவான்
உயர்தீக் கையினை அருள்நோக்காற்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல் போற்றி!"

என்பது உமாபதி சிவம் பற்றிய துதிப்பாடல்.

## மெய்கண்ட நூல்களுள் ஏழு (தெளிவுரை)

இருபா இருபஃது; வினா வெண்பா; போற்றிப் பஃறொடை; கொடிக்கவி; நெஞ்சுவிடு தூது; உண்மை நெறி விளக்கம்; சங்கற்ப நிராகரணம்.

அருணந்தி தேவ நாயனார் முதலியோர்

சி. சு. மணி (உ.ஆ)

மேற்கண்ட 7 நூல்கள் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இதில் ஒவ்வொரு நூலின் தொடக்கத்திலும், அந்நூலைப் பற்றிய விளக்கம் தரப்பட்டுப் பாடலம் தெளிவுரையுமாக எழுதப்பட்டுள்ளன. இதே உரையாசிரியர் தனித்தனியாக எழுதியுள்ளமை ஈண்டுத் தொகுக்கப்பட்டுள்ளன.

## மெய்கண்டாரும் சிவஞானபோதமும்

கா. சுப்பிரமணியபிள்ளை (உ.ஆ)

'சிவஞான போதம்' நூல் விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலின் தொடக்கத்தில், 'திருவெண்ணெய் நல்லூரின் பெருமை சொல்லப்பட்டுள்ளது. இதில், கல்வெட்டுக்கள், திருப்புகழ், திருவெண்ணெய்க் கலம்பகம், மெய்கண்ட தேவர் கல்வெட்டும் காலமும்' இடம்பெற்றுள்ளன.

நூலில், 'மெய்கண்டார் வரலாறு', 'சிவஞான போதம் தமிழ் முதல் நூலே' ஆகியன விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அடுத்து 12 சூத்திரங்கள்; 'சிவஞான பாடிய சாரம்' விளக்கப்பட்டுள்ளது; 'சிவஞான போதப் பொழிப்புரை' என்ற தலைப்பில் ஒவ்வொரு சூத்திரமாகச் சொல்லி, அதற்கான பொழிப்புரையைத் தருகின்றார் இதன் உரையாசிரியர்

"இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய்! உளவாமால் நீர்நிழல்போல் – இல்லா
அருவாகி நின்றானை யார்அறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று!"

எனும் பாடலுக்குப் பின்வருமாறு உரைதருகின்றார் இவ்வுரையாசிரியர்:-

"நல்ல மாணவனே! ஏந்திய அணிகளையுடைய நங்கைக்கு; (ப் பிள்ளையைக் காணாமுன்) சுரக்காத முலைப்பாலும் கண்ணீரும், பிள்ளையைக் கண்டவுடனே தோன்றுகின்றன. அவ்வாறே நீரில் மறைந்த நிழல்போல, உயிர்களொடு கலந்து புலப்படாது நின்ற முதல்வனை, அவன் குருவடிவாய் உருவெடுத்துத் தோன்றாவிடின், யார்தாம் அறிதல் கூடும்?"

– இவ்வாறே எளிய பொழிப்புரை கொண்ட நூல் இது!

## மெய்ஞ்ஞானப் புலம்பல்

பத்திரகிரியார்.

உண்மையான ஞானத்தைப் பெறுவது குறித்துப் புலம்பிப் பாடியது.

இதில், முதற்கண் 'காப்பு'ச் செய்யுள் 1 தவிர, 2 அடி கொண்ட பாடல் 232 உள்ளது.

"ஆங்காரம் உள்ளடக்கிய ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்?"

என்று தொடங்கி,

"ஐந்து கரத்தானை அடிஇணையைப் போற்றிசெய்து
நெஞ்சில் பொருத்தி நிலைபெறுவ தெக்காலம்?"

என்று முடிகிறது.

# ‘வ’

## வஞ்சியியல்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்.

யாப்பு வகைகளில் ‘வஞ்சிப்பா’ என்பதும் ஒன்று! இதில், வஞ்சிப்பா வகைகளும், இனங்களும் வந்துள்ளன. அனைத்துமே முருகனைப் பற்றியன.

‘மாலை மாற்று’, ‘தமருகபந்தம்’, ‘மடக்கு’, ‘கோமுந்திரி’ எனப் பலவும் இதன்கண் இடம்பெற்றுள்ளன.

மொத்தம் 84 பாடல்கள்.

“ஈராயிர மோர்நாவனும்
ஓராயிர மோங்குன்பெயர்
மாண்போதிடு வானோவவை
நான்பேசவு நண்ணுங்கொலை
ஏனற்பர ணேழைக்கினி
தாநட்புடை யாதீயளி – யருளால்
கயிலைக் கபாடந் திறக்கச்
செயுமற் புதவருட் சிவசே யவனே!”

என்பது அவற்றில் ஒன்று!

## வடதிருமுல்லை வாயில் குருபரர் வண்ணம்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

வண்ணம் – சந்தம்.

‘வடதிருமுல்லை வாயில்’ என்பது, தொண்டை நாட்டுத் தலம்; சென்னைக்கு அருகில் உள்ளது. சோழநாட்டில், தஞ்சை மாவட்டத்தில் ‘தென் திருமுல்லை வாயில்’ உள்ளதால், இது ‘வடதிருமுல்லை வாயில்’ எனப்பட்டது.

‘குருபரர்’ என்பது முருகப் பெருமானைக் குறிக்கும். இஃது ஒரே ஒரு பாடல் கொண்டது; 4 அடிகள் ஓரடிக்கு 144 சீர்கள் உள்ளன.

“தையத் தனன தத்தந் தந்தத்த தானை . . .” எனும் சந்த அமைப்பில் அமைந்துள்ளது.

*"சொல்லிற் பெரிய சித்தங் கொண்டச்ச நூறிய*
*மெய்யர்க் கினிய கந்தன் . . ."*

ன்று தொடங்குவது.

## டபழநி ஆண்டவர் அந்தாதி

*எருஸ். எரு. அருணகிரி நாதர்*

சென்னையில் உள்ள வடபழநி ஆண்டவராம் முருகப் பெருமான்மீது ாடப்பட்டது. விநாயகர் வணக்கம் தவிர 101 பாடல்கள்; இறுதியில் 'நூற்பயன்'.

*"விடுமே எம்மைத் தீவினைகள்*
*வேலா! நினது அருளுண்டேல் . . ."*

ன்பன போல் வரும் பாடல்கள் உள்ளன.

## டபழனிச் சண்முகக் கடவுள் பதிகம்

*எரு.எரு. அருணகிரிநாதர்.*

சென்னை வடபழனி முருகன் மீது பாடப்பட்டது. 10 பாடல்கள் கொண்டது. ாடல்தோறும் 'காக்க வருவாயே' என வருவது.

*"பேரார் எங்கள் சண்முகனே!*
*பெருமை மிக்க சிவக்கொழுந்தே!*
*பிறக்கச் செய்தாய் எங்களையே*
*பெம்மான்! காக்க வருவாயே!"*

ன்பதும் ஒன்று!

## டிவுடை மாணிக்க மாலை

*இராமலிங்க அடிகளார்*

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று!

மாலைபோலத் தொடர்ந்து பாடப்படுவதால் இப்பெயர் ஏற்பட்டது. ாணிக்கத்தாலான மாலை போன்றது என்பது கருத்து.

திருவொற்றியூர்க் கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் ிருப்பெயர் வடிவாம்பிகை. அந்த அம்பாள் மீது பாடப்பட்டது.

இது, திருவருட்பா, இரண்டாம் திருமுறையில் உள்ளது. தொடக்கத்தில் ாப்புச் செய்யுள்' 1 உள்ளது. அது தவிர 100 பாக்கள் கொண்டது. 'கட்டளைக் லித்துறை' என்ற யாப்பில் அமைந்துள்ளது.

பாடல்தோறும் 'வடிவுடை மாணிக்கமே!' என்று முடிவது.

இந்நூலில் இறைவன், இறைவி இயல்புகள் இனிதெடுத்து மொழியப்பட்டுள்ளன.

*"புரநோக்கி னால்பொடி தேக்கிய*
*ஒற்றிப் புனிதர்களக்*
*கரநோக்கி நல்லமு தாக்கிநிற்*
*போற்றுங் கருத்தினர்ஆ*
*தரநோக்கி உள்ளிருள் நீக்கிமெய்ஞ்*
*ஞானத் தனிச்சுகந்தான்*
*வரநோக்கி ஆள்விழி மானேஸ்*
*வடிவுடை மாணிக்கமே!"*

என்பது அவற்றில் ஒன்று!

பார்க்க:-

திருவருட்பா

## வண்ணப் பதிகம்

*வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.*

வண்ணம் – சந்தம்; பதிகம் – 10 பாடல்கள் கொண்டது.

முருகன் அன்புக்கிசைய, பன்னிருதோள்கட்கும் உரியதாகப் பன்னிரு பாடல்களைப் பாடியுள்ளார் ஆசிரியர்.

நூலின் தொடக்கத்தில் 1 காப்புச் செய்யுள்; இறுதியில் 1 நூற்பயன் கூறும் பாடல் உள்ளது.

*"அருள்பெருகு மனமுடைய பெரியவரை யிகழ்கொடியர்*
*அகிலமகள் அழுதுழல மலியாமல் ஈகைதான்*
*அணுவிலணு வளவும்ஒரு பொழுது(ம்)முயல் வறுகயவர்*
*அளகையதி பனைமனைய திருமேவி டாமல்மா. . . !"*

என்பது இவற்றில் ஒன்று. இது, பதினாறு சீர் வண்ண விருத்தப் பாடல்.

*"தனனதான தனனதன தனனதன தனனதன*
*தனனதன தனனதன தனதான தானனா"*

என்ற சந்த அமைப்பில் அமைந்தது இது. இவ்வாறே பிறவும்!

## வண்ணம் - அவயவம் எழுத அரிது எனல்

*வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்*

'வண்ணம்' என்பது சந்தக் குழிப்புகளை ஆதாரமாகக் கொண்டது. பண்ணோடு பாடுதற்கு உரியது.

காதலன் ஒருவன், தன் காதலித்த பெண்ணை அடைவதற்காக 'மடலேறுதல்' உண்டு. அப்போது அவனின் உருவத்தை ஒரு துணியில் வரைந்து, எருக்கம்பூ , எலும்பு மாலைகளைச் சூடி வருவான்.

முருகன் மீது பாடப்பெற்ற 'வண்ணம்' இது. அவனின் திருவுருவத்தை எழுதுதல் அரிது என்பது கருத்து.

*"குருதே சிகனார் சிவசுப் பிரம ணிக்கு*
*விலைநா மெனவே தமிழிற் கவிதொ டுக்கு*
*மறுமைப் புலவர் சித்த மலரிற் றினநடிக்கு*
*மிருபொற் சுழல்படைத்த பெருமைக்கு மாரர். . . !"*

என வருவது.

## வருக்கக் குறள்

*வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்*

'குறள்' என்பது யாப்பு வகைகளில் ஒன்று. ஈரடியால் அமைவது.

'வருக்கம்' என்பது 'இனம்'. உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு 'உயிர்வருக்கம்', 'மெய்வருக்கம்' 'உயிர்மெய் வருக்கம்' எனப் பாடலைத் தொடங்குவது. மொழிக்கு முதலில் வாரா எழுத்துக்களாயின், துணை ஒலிகளுடன் அவை பாடப்பட்டுள்ளன.

நீதி நெறிகள் மட்டுமன்றிச் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பலவும் இதன்கண் சொல்லப்பட்டுள்ளன.

*"ஓங்காரத்(து) உண்மை உணரார் உரைமுழுதும்*
*பாங்காமென்(று) எண்ணப் படா!"*

என்பது 'ஒகாரத்'தில் தொடங்கும் பாடல். இவ்வாறே பிறவும் வரும்!

## வல்லீ பரதம்

*கடிகை . நமசிவாயப் புலவர்*

'கழுகுமலை' என்னும் ஊர், கோவில்பட்டிக்கு அருகில் உள்ளது. ஆங்கு எழுந்தருளியுள்ள குமரப் பெருமான் ஆகிய கார்த்திகேயர் பெயரில் அமைந்த ஒரு நாடக நூல். பல்வேறு பண்கள் கொண்டது.

*"மானே நீயிங்கே வாராய் . . . குற*
*மானே நீயிங்கே வாராய்! . . . (பல்லவி)*
*தானே மனதிரங்கிச் சற்றே பரண்விட்டிறங்கி . . மானே (அநுபல்லவி)*
*கூடிநாம் விளையாடக் குறிஞ்சிப்பூ மலர்சூட*
*ஊடி மகிழ்ந்துகூட உருவிவி கண்டொழித் தோட . . . மானே!" (சரணம்)*

என்பன போன்ற சந்தப் பாடல்கள் பல உள்ளன.

## வள்ளலார் சாத்திரம்

*சிவஞான வள்ளலார்*

'வள்ளலார்' என்பது முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைக் குறிக்கும். 'சாத்திரம்' என்பது சைவ சித்தாந்த சாத்திரத்தைக் குறிக்கும்.

நூலின் தொடக்கத்தில் 'பாயிரம்' – 3 பாடல்கள். அடுத்து 'சத்திய ஞான போதம்' முதல், 'திருமுகப் பாசுரம்' வரை 18 பகுதிகள் உள்ளன. இறுதியில்; அதிகாரப் பிள்ளை அட்டவணை, மரபட்டவணை' எனும் 2 பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதிக்குமெனத் தனித்தனிப் 'பாயிரம்' உள்ளது.

*"ஆணவ மலமான்மாவுக் கனாதியி லியற்கையென்னின்*
*மாணவ சங்கின் வெள்ளை போலொரு காலுமாயா!*
*ஆணவ மலமான்மாவுக் கனாதியிற் செயற்கை யென்னிற்*
*காணும்வெண் மடிக்கழுக்குக் கலத்தல்போற் பினும்வந் தெய்தும்!"*

என்பன போன்ற சைவசித்தாந்தக் கருத்துக்கள் அடங்கிய பாடல்கள் பலவுள்ளன.

**வாளலங்காரம்**

*வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.*

வாள் + அலங்காரம் = வாளலங்காரம்.

கந்தபுராணத்தில் சொல்லப்படும் நவ வீரர்களில் முதலாவதாக உள்ளவரும், சூரபத்மனிடம், திருச்செந்தூரிலிருந்து தூது சென்று வீரச்செயல் புரிந்து வந்த வெற்றி வீரருமான வீரவாகு தேவரது வாளின் பெருமையைக் கூறுவதால் 'வாளலங்காரம்' எனப்படுவதாயிற்று.

இந்நூலில், முருகன் அருட்டிறம், வாளின் வீரச் செயல், அன்பு வழிபாடு, அநுபூதி முதலாயின சொல்லப்படுகின்றன.

காப்புச் செய்யுள் முதலிலும், நூற்பயன் இறுதியிலுமாக 2 செய்யுள் தவிர, இந்நூலில் 100 கட்டளைக் கலித்துறைப் பாக்கள் உள்ளன.

*"முத்தமிழ்ச் செல்வம் முதிர்செந்தி*
*லான்றனை முன்னுமுண்மைப்*
*பத்தர்அ னேகர்என் றாலும்அன்*
*னோன்திருப் பாதமலர்*
*வைத்த மனத்து வயவீர*
*வாகுகை வாட்புகழை*
*உத்தமத் துத்தம மாம்சிலர்*
*தாமிங் குணர்பவரே!"*

என்பன போன்ற பாடல்கள் உள்ளன.

**விண்ணப்பக் கலிவெண்பா**

*இராமலிங்க அடிகளார்*

'கலிவெண்பா' என்ற யாப்பில் அமைந்தது.

அன்புமிக்க அடியவர் சொல்மாலை சூட்டும்போது, தாம் வழிபடும் தலங்களையும் அங்கெழுந்தருளியுள்ள இறைவனையும் எண்ணி வழிபடுவர். இவ்வகையில் திருஞானசம்பந்தர் 'சேத்திரக் கோவை' பாடியுள்ளார். அதே போல் இராமலிங்க அடிகளாரும், திருத்தலங்கள் பலவற்றையும் நினைந்து கலிவெண்பாவில் பாடியுள்ளார்.

இது, 'திருவருட்பா'வில் மூன்றாம் திருமுறையில் உள்ளது.

தொடக்கத்தில், 'விநாயகர் காப்பு' – நேரிசை வெண்பா 1 பாடல் உள்ளது; 261 கண்ணிகள் உள்ளன.

அடுத்துக் 'கோயில்' (தில்லை) முதல் 'திருமுல்லை வாயில்' வரை பல்வேறு திருத்தலங்களைப் பற்றிய செய்திகள் உள்ளன.

*"சொற்பெறுமெய்ஞ் ஞானச் சுயஞ்சோதி யாம்தில்லைச்*
*சிற்சபையில் வாழ்தலைமைத் தெய்வமே! – நற்சிவையாம்*
*தாயின் உலகனைத்தும் தாங்கும் திருப்புலியூர்க்*
*கோயில் அமர்ந்தகுணக் குன்றமே . . . !"*

என்று தொடங்குவது இது!

பார்க்க:–

திருஅருட்பா

## விநாயக கவசம்

*காசிப முனிவர்*

'கவசம்' என்பது, உடம்பிற்குத் தீங்கு வாராமல் காக்கும் ஓர் கருவி.

விநாயகக் கடவுளிடம் தம்மைக் கவசம் போல் பாதுகாக்க என வேண்டும் முறையில் அமைந்தது.

இதன்கண் 9 பாடல்கள் உள்ளன.

*"வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா*
*யகர்காக்க! வாய்ந்த சென்னி*
*அளவுபடா அதிகசவுந் தரதேக*
*மதோற்கடர்தாம் அமர்ந்து காக்க . . .*

என்பன போல் வரும்!

## விநாயக புராணம்

*கச்சியப்ப சுவாமிகள்*

முத்துசாமி முதலியார் (உரை, வசனம்)

'விநாயகபுராணம்' விளக்கம், முதல் தொகுதியில் உள்ளது. இந்நூலில் (1) உபாசனா காண்டம்; (2) இலீலா காண்டம் என 2 உள்ளன.

நூலின் தொடக்கத்தில் திருத்தணிகை விசாகப் பெருமாளையர் பாடிய 'சிறப்புப் பாயிரம்' உள்ளது. அடுத்துக் 'காப்பு கடவுள் வாழ்த்து'ப்பாக்கள் உள்ளன.

'விநாயக புராணம்' முழுதும் உரைநடையில் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு படலத்தின் தொடக்கத்திலும் ஒரு பாடல் உள்ளது.

*"பன்னிய பிருகு தன்பாற் பார்க்கவ புராணங் கேட்ட*
*மன்னவன் சோம காந்தன் மழைமதக் களிற்றுத் தேவன்*
*றன்னுல கடுத்த வாறுஞ் சாற்றினன் சூத மேலோன்*
*அன்னவ னுரைத்த வாறே, யவையெலாம் புகலப் புக்கேன்!"*

என்பது, 'சோம காந்தன் வனம் புகத் துணிந்த படலத்'தின் தொடக்கத்தில் உள்ளது. அடுத்து இப்படல வசனம். இவ்வாறே நூல் முழுதும் அமைந்துள்ளது.

**விநாயக மூர்த்தி ஒருபா ஒருபஃது**

*தி. சங்குப்புலவர்*

விநாயகப் பெருமான் மீது 'வெண்பா' என்ற ஒரே யாப்பில் பாடப்பட்ட 10 பாடல்கள் கொண்டது.

நூலின் தொடக்கத்தில் 'காப்பு'ச் செய்யுள் 2 வெண்பா; குரு வணக்கம் – 1 அகவல் விருத்தம் உள்ளன. அடுத்து, நேரிசை வெண்பா 10 பாக்கள் உள்ளன.

*"காசினியின் மீதுனது காமர்மலர்த் தாடொழுது*
*நேசமுடன் வாழவரு ணீபுரிவாய் – தேசுமதி*
*கந்தமிகு கொன்றைமலர் கங்கை!ுனை யுஞ்சடிலர்*
*மைந்தவொளிர் தந்திமுக வா!"*

என்பது அவற்றில் ஒன்று!

**விநாயகமூர்த்தி ஒருபா ஒருபஃது**

*தி. சங்கப்புலவர்*

விநாயகப் பெருமான் மீது 'கட்டளைக் கலித்துறை' என்ற ஒரே யாப்பில் பாடப்பட்டது. 10 பாக்கள் கொண்டது.

*"துயரங் கடக்க வகையறி யாதவென் றுன்மனமே*
*யயரங் கடக்க னதனமின் னார்மய லாவல்பணி*
*மெயரங் கடக்க முடியாக் கயமுக வீரற் கொறிண்*
*புயரங் கடக்க ரிவதனர் பாதமென் போதினையே!"*

என்பது அவற்றில் ஒன்று!

**விநாயகர் அகவல்**

*ஔவையார்.*

`அகவல்` என்பது யாப்பு வகைகளில் ஒன்று. `ஆசிரியப்பா' என்றும் கூறப்படும். விநாயகப் பெருமான் மீது பாடப்பட்டதால் 'விநாயகர் அகவல்' எனப்பட்டது.

இது, 72 அடிகளால் ஆனது.

விநாயகப் பெருமாளின் திருவுருவச்சிறப்பு முதற்கண் கூறப்படுகிறது. இறுதியில் அவனது அருட்செயல் கூறப்படுகிறது.

*"சீதன் களபச் செந்தா மரைப்பூம்*
*பாதச் சிலம்பு பலஇசை பாடப்*
*பொன்அரை ஞாணும் பூந்துகி லாடையும் . . .*
*அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை*
*நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்*
*தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட*
*வித்தக விநாயக விரைகழல் சரணே!"*

என்பது இதில் வரும் ஒருபகுதி!

## விநாயகர் நான்மணி மாலை

*சி. சுப்பிரமணிய பாரதியார்.*

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

மாலை போலத் தொடர்ந்து பாடப்படுவதால் இப்பெயர் வந்தது. நான்கு மணிகளால் ஆன மாலை போல, 'வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல்' என்னும் நால்வகை யாப்பினால் தொடுக்கப்பட்டதால் 'நான்மணி மாலை' எனப்பட்டது.

விநாயகப் பெருமான் மீது பாடப்பட்டது. யாப்பு 1க்குப் பாட்டுப் பத்து வீதம் 4 வித யாப்புக்கு 40 பாடல்கள் உள்ளன.

விநாயகரின் பல்வேறு சிறப்புக்களைக் கூறுவது.

*"தவமே புரியும் வகையறியேன்*
*சலியா துறநெஞ் சறியாது,*
*சிவமே நாடிப் பொழுதனைத்துந்*
*தியங்கித் தியங்கி நிற்பேனை,*
*நவமா மணிகள் புனைந்தமுடி*
*நாதா! கருணா லயனே, தத்*
*துவமா கியதோர் பிரணவமே!*
*அஞ்சேல் என்று சொல்லுதியே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## விநாயகர் புராணம்

*கச்சியப்ப முனிவர்*

புராணம் – பழைய வரலாறு. விநாயகப் பெருமானைப் பற்றியது. இதற்குப் 'பார்க்கவ புராணம்' என்ற வேறு பெயரும் உண்டு.

வடமொழியில் பிருகுமுனிவர் எழுதியதைத் தமிழில் பாடியவர் கச்சியப்ப முனிவர். வடமொழியில் (1) உபா சனா காண்டம்; (2) லீலா காண்டம் என 2 காண்டங்கள்; 250 பிரிவுகள்; 12,000 சுலோகங்கள் கொண்டது.

அவ்வாறே இவ்விநாயக புராணமும் (1) உபாசனா காண்டம்; (2) லீலா காண்டம் என இரண்டு பெரும் பிரிவுகள் கொண்டது. உபாசனா காண்டத்தில் 6+69 = 75 படலங்கள்; லீலா காண்டம் – 16 படலங்கள் என 91 படலங்கள் உள்ளன.

உபாசனா காண்டத்தில் – 3047 திருவிருத்தப்பாக்களும்; லீலா காண்டத்தில் 3178 திருவிருத்தப்பாக்களும் ஆக 6225 பாக்கள் உள்ளன.

இந்நூலில், விரதங்களின் மகிமை, அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகியோர் அடைந்த பேறுகள், கணேசப் பெருமானின் அரிய பல திருநாமங்கள், எடுத்த திருமேனிகள், சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் எனப் பல்வேறு சிறப்புக்கள் அமைந்துள்ளன.

இதன்கண் உள்ள 'விநாயகர் கவசம்' எனும் பகுதி, மக்கள் வாழ்வில் உண்டாகும் இன்னல்களை நீக்குதற்கான அருமருந்து எனப் போற்றப்படுவது.

இப்புராணத்தைப் பக்தியுடன் கேட்போர்க்கு எவ்விதத் துன்பமுமில்லை; இந்நூலினை இல்லத்தில் வைத்திருப்போர்க்குப் 'பேய்' முதலானவற்றால் ஏற்படும் அச்சம் நீங்கும் என்று சொல்லப்படுகின்றது.

இந்நூல், 'அறம் பொருள் இன்பம் வீடு' ஆகிய பயன்கள் நான்கையும்; 'சரியை கிரியை யோகம் ஞானம்' என்ற சிவபுண்ணியச் செயல் நான்கையும், 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல்' என்ற 4 படிநிலைகளால் உண்டாகும் சிவானந்தப் பேற்றினையும் தரும் சிவஞானக் கருவூலமாகும் என்பர்.

*"உயிர்தான் மூலமலத்தி னொடுமுற்ற பந்தமக மாகுஞ்*
*செயிர்சேர் மாயை கன்மமொடு சேர்ந்த பந்தமகப் புறமாம்*
*பயிலா நின்றதநு கரணப் பந்தம் புறமாம் புறப்புறமா*
*மயர்சேர் புவனபோகத் தின்மருவா நின்ற பந்தமே!"*

என்பன போன்ற சைவசித்தாந்தக் கருத்துக்கள் கூறும் பாடல்கள் பலவுள!

## விருத்தாசலம் குமாரதேவர் நெஞ்சுவிடுதூது

*சிதம்பர சுவாமிகள்*

'தூது' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கியங்கள் 96ல் ஒன்று. விருத்தாசலம் குமார தேவர்க்குத் தம் நெஞ்சைத் தூதாக அனுப்பியதால் 'நெஞ்சு விடு தூது' எனப்பட்டது.

இந்நூலில், 'காப்பு'ச் செய்யுள் 1ம், இறுதியில் 2ம் ஆக 3 நீங்கலாக 185 கண்ணிகள் உள்ளன.

குமாரதேவரின் பல்வேறு சிறப்புக்கள் சொல்லப்பட்டுள்ளன.

"வேண்டிய வேண்டிய எல்லா மிகஅளிக்கும்
ஈண்டிய தெய்வ இருந்தருவை . . . !"

என்பன போன்ற பாடல்களைக் காணலாம்!

## விருத்தாசலம் குமாரதேவர் பதிகம்

சிதம்பர சுவாமிகள்

விருத்தாசலம் குமாரதேவர் மீது பாடப்பட்ட 10, கழிநெடிலடி ஆசிரியப்பாக்கள் கொண்டது.

"அரிய ஆணவமாம் அண்டம்வின் டடியேன்
அவனியில் வெளிப்படப் பெரிதும்
அரியதோர் கமடம் அழகிய வன்மீன்
அஞ்சிறைப் புள்ளிவை போல . . . !"

என்பன போன்ற சைவ சித்தாந்தக் கருத்துக்கள் அமைந்த பதிகம் இது!

## விளத்தொட்டிப் புராணம்

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை

புராணம் – பழைய வரலாறு

'விளத்தொட்டி', சோழநாட்டில் மண்ணியாற்றின் கரையில் உள்ள சிவத்தலம். 'குத்தாலம்' என்னும் இரயில் நிலையத்திற்கு அருகில் உள்ளது. இது, திருநாவுக்கரசர் பாடிய 'சேத்திரக் கோவை'த் திருத்தாண்டகத்'தில் சொல்லப்பட்ட வைப்புத் தலங்களில் ஒன்று.

'விளம்' என்பது, இத்தலத்து மரமாகிய வில்வத்தைக் குறிக்கும். முருகக் கடவுள் தொட்டிலில் கண் வளர்தலால் 'தொட்டி' என்ற பெயர். இவ்விரண்டும் சேர்ந்து 'விளத்தொட்டி' என்றாயிற்று.

இத்தலத்து இறைவன் திருப்பெயர் வில்வநாயகர், அம்பிகையின் பெயர் : கரும்பிரதநாயகி, நூலின் தொடக்கத்தில், 'கடவுள் வாழ்த்து' முதலாயின, 22 திருவிருத்தப்பாக்களால் பாடப்பட்டுள்ளன.

'திருநாட்டுச் சிறப்பு' முதல், 'ஈசான தீர்த்தப்படலம்' ஈறாக 17 உட்பிரிவுகள் உள்ளனர். 353 திருவிருத்தப்பாக்கள்.

இந்நூலின்கண், இத்தலத்தைப் பற்றிய செய்திகள். 'சிதம்பரம்' முதலான பல சிவத்தலங்கள் பற்றிய செய்திகள், பழமொழிகள், உலக வழக்கச் சொற்கள் ஆகியன இடம்பெற்றுள்ளன.

"மண்ணுலக நடுநடுங்க வானுலகஞ் செவிடுபட
நண்ணுசிறு பறையெறிந்து நகுசிறுதே ருருட்டியும்வந்
தெண்ணுமணித் தொட்டிமிசை யிவர்ந்தமரு மதுகண்டு
கண்ணுமன முங்குளிர்வாள் கரும்பிரத நாயகியே!"

என்பன போன்ற பாடல்களைக் காணலாம்!

## வினா வெண்பா

உமாபதி சிவாசாரியார்.

சைவ சித்தாந்த சாத்திரம் 14ல் ஒன்று.

13 வெண்பாக்கள் கொண்டது. திருவாவடுதுறை ஆதீனம் நமச்சிவாயத் தம்பிரான் இதற்கு உரை எழுதியுள்ளார். ஒவ்வொரு பாடலும், சைவ சித்தாந்த சாத்திர நூலாகிய சிவப்பிரகாசத்தோடு தொடர்புடையது.

"அருளால் உணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித் – தெருளா
வினாவெண்பா உண்மை வினாவாரேல் ஊமன்
கனாவின்பால் எய்துவிக்கும் காண்!"

என்பது இதன் இறுதிப் பாடல்.

# 'ஸ்ரீ'

## ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை

தமிழில் உள்ள சிற்றிலக்கியவகை 96ல் இப் 'பிள்ளைத்தமிழ்' நூலும் ஒன்று! இதற்குப் 'பிள்ளைப் பாட்டு' என்ற பெயரும் உண்டு!

'பிள்ளைத் தமிழ்' என்பது, பாட்டுடைத் தலைவனைப் பிள்ளைப் பருவத்தில் வைத்துப் பருவங்களுக்கு ஏற்ற ஏற்ற செயல்களைக் கூறிப் பாராட்டுவதாம். இதனைச் செவிலித்தாய் முதலானோர் கூறிப் பாராட்டுவதாகக் கவிஞர் புனைந்துரைப்பர்.

புலவர்கள், தாம் வழிபடு கடவுளையோ, தம் ஞானாசிரியரையோ, தம்மைப் பாதுகாத்த வள்ளல்களையோ, அரசர்களையோ பற்றிப் பிள்ளைத்தமிழ் பாடுவது மரபு.

இத்தகைய சிற்றிலக்கியம், புறப்பொருள் பாடாண்திணையில், 'குழவி மருங்கினும் கிளவதாகும்' என்னும் தொல்காப்பிய நூற்பாவுக்கு ஏற்ப அமைந்தது என்பர் அறிஞர்.

இப் பிள்ளைத்தமிழ் (1) ஆண்பாற் பிள்ளைத்தமிழ் (2) பெண்பாற் பிள்ளைத்தமிழ் என 2 வகைப்படும்.

இப்'பிள்ளைத்தமிழ்', 3ஆம் மாதம் முதல், 21 ஆம் மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய 10 மாதங்களிலும் கேட்பிக்கப்படும். மேலும் 5ஆம் ஆண்டிலும், 7ஆம் ஆண்டிலும் கேட்பினும் தவறில்லை என்று 'வெண்பாப் பாட்டியல்' என்ற நூல் கூறும்.

ஸ்ரீ அம்பலவாண தேசிகர் என்பவர், திருவாவடுதுறை ஆதீனத்தில் 15ஆம் குரவராக விளங்கியவர். அவர்மீது பாடப்பட்டது இந்நூல்.

இந்நூலின் தொடக்கத்தில் 2 செய்யுட்களும் அடுத்துப்பருவம் 1க்குப் 10 பாடல் வீதம் 100 செய்யுட்களும் உள்ளன. இவற்றில் வரும் பருவங்கள்: காப்பு, செங்கீரை, தாய், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன. இவற்றில் அம்புலிப் பருவத்தில், 'சாம, பேத, தான, தண்டம்' என நால்வகை உபாயங்கள் அமையப் பாடுதல் மரபு.

"முத்தன் வருக யாவர்க்கு
        முன்னோன் வருக முப்புவன
    முதல்வன் வருக முன்னாரை
        முன்னான் வருக மறைமுடிவில்
    அத்தன் வருக வகர வுயி
        ரனைய்யன் வருக! நமவொழிக்கும்
    ஐயன் வருக! வகரமளித்
        தருள்வான் வருக . . . !"

என்பன போன்ற சைவசித்தாந்தக் கருத்துக்கள் கொண்ட பாடல்களைக் காணலாம்!

## ஸ்ரீ அழகிய கூத்தர் தோத்திராட்டகம்

செப்பறை சுவாமிகள்

தோத்திரம் +அட்டகம் = தோத்திராட்டகம். தோத்திரம் – வழிபாடு; அட்டகம் – எட்டு.

செப்பறையில் உள்ள அழகிய கூத்தப் பிரானை, அக்கினிதேவர் துதிசெய்த சுலோகத்தின் தமிழ்மொழி பெயர்ப்பு இது.

"வீடும் அன்பர்க் கருள்புரிவாய்! மெய்ப்பரத்துட் பரமாவோய்!"

என்று தொடங்கும் பாடல் முதலாக 8 பாடல்கள் உள்ளன.

## ஸ்ரீகுமர குருபரர் கலம்பகம்

குமார சுவாமித் தம்பிரான்.

தூது, அம்மானை, மதங்கியார், பிச்சியார், சொற்றியார், சித்து எனும் பல்வேறு உறுப்புக்களைக் கொண்டது, கலம்பகம். சிற்றிலக்கியம் 96 வகைகளில் ஒன்று. இந்நூலில் காப்புச் செய்யுள் தவிர 10 பாடல்கள் உள்ளன.

"அறிவரும் பெருமைக் குருபரன் எம்மான்
        ஆனந்த வனத்துவாழ் அண்ணல்!
    அனைத்திலும் கலந்தும் கலப்பில னாய
        ஆற்றலால் அவனொரு துறவி!"

என்பன போன்ற, குமரகுருபரரின் வரலாற்று மணம் கமழும் பாடல்கள் அமைந்துள்ளன.

## ஸ்ரீ சிவஞான சுவாமிகள் சந்தப் பஞ்சரத்தினம்

வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை

பஞ்சரத்தினம் – 5 மணிகள். அருணகிரிநாதரின் திருப்புகழ்போலச் சந்தப்பாக்களால் ஆனது.

சிவஞான சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன முனிவர்களில் முதன்மையானவர். பல நூல்கள் யாத்துள்ளார். அவற்றில் சிறப்புடையது 'சிவஞான மாபாடியம்'.

இச் 'சந்தப் பஞ்சரத்தின' நூலில் 5 சந்தப் பாக்கள் உள்ளன.

"துளவமால் பேணு மும்பன் அருளாலே
துறைசைமே னானெ ழுந்த முதல்வோனே!
உளமதே கோயில் கொண்ட புகழாளா!
உருகியே தாழு மன்பர் பெருவாழ்வே!
தளர்விலா தோர்ப ணிந்த குருநாதா!
தமிழின்மா பாடி யஞ்செய் திருவாளா!
வளமெலா மேவு சிங்கை வருதேவா!
மலநிலா தோவு மெங்கள் பெருமாளே!"

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ சிவஞான பாலயதேசிகர் கலம்பகம்

சிவப்பிரகாச சுவாமிகள்

'கலம்பகம்' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

பல்வகை மலர்கள் கொண்ட மாலை 'கதம்பம்' எனப்படுவது போலப் பலவகை உறுப்புக்களும் கலந்து அமையப் பாடுவது 'கலம்பகம்' ஆகும்.

மயிலம் – பொம்மபுர ஆதீனம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் மீது பாடப்பட்ட நூல்.

இதில் தொடக்கத்தில் 'காப்பு' – 1; இறுதியில் 'வாழ்த்து' – 1 நீங்கலாக 93 பாடல்கள் உள்ளன. 'மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம்' எனப் பல்வகை யாப்பு வடிவங்கள் வந்துள்ளன.

இதில், சிவஞானபாலய தேசிகராம் ஞானாசிரியரின் பல்வேறு சிறப்பியல்புகள் போற்றி உரைக்கப்பட்டுள்ளன. ஞானாசிரியர் அருளும் திருநீற்றின் பெருமை, ஆதீனக் கிளைமடங்கள் பற்றிய குறிப்பு, பிரணவ உபதேசம் பெற்ற வரலாறு முதலாயினவும் இடம்பெற்றுள்ளன.

"ஆசை தனதாள் மூட்டினான்
அடித்திட்டு அமுதம் ஊட்டினான்
பாச இருளை அகற்றினான்
பதிசேர் அறிவை அகற்றினான்
தேசு மலியும் ஆகத்தன்
சிவஞா னிப்பேர் மாகத்தன்
நேசம் மருவி மறியாரே

நிரயத் துயரம் அறியாரே!"

என்பது 'மடக்கு' என்ற பாடலாகும். இவ்வாறே பிறவும் வரும்!

## ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் திருப்பள்ளியெழுச்சி

சிவப்பிரகாச சுவாமிகள்

பள்ளி – படுக்கை. 'உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து உயிர்களுக்குக் கருணை மழை பொழிக' என இறைவனை வேண்டிப் பாடுவது. பின்னர், அரசர்களையும் அடியார்களையும் விழித்துப் பாடும் மரபு வந்தது.

மயிலம் – பொம்மபுர ஆதீனம் ஸ்ரீ சிவ ஞான பாலய தேசிகர் மீது பாடப்பட்டது.

ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்தது. 10 பாடல்கள் கொண்டதாக இருந்திருக்க வேண்டும் என்றும் இப்போது கிடைத்தவை 4 மட்டுமே என்றும் கூறுர்.

இதில் எளிதில் விளக்கும் சமய தத்துவங்கள் சொல்லப்பட்டுள்ளன.

"சகலர் எனும் பசுக்களைமூலா தாரம் என்னும்
தக்கதொழு விடைமலமாம் தாம்பினால் ஆர்த்துப்
புகலும்ஒரு நுகர்வும் இலாது உரைநிறுத்திப் பின்னர்
பொருந்துகலை யாம்கரத்தால் கட்டுஅவிழ்த்து விட்டே
அகலும் நனவு எனும்புரத்தில் ஓட்டியே விடயம்
ஆகியபுல் மேய்த்துஎமக்கு இங்கு அமுதம் அருள்பவனே!
திகழும்மலை மகள்நகரின் மருவுசிவ ஞான
தேசிகனே அருள்மலையே பள்ளிஎழுந் தருளே!"

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடு தூது

சிவப்பிரகாச சுவாமிகள்

'தூது' என்பது சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று.

ஸ்ரீ சிவஞானபாலய தேசிகரிடத்துத் தம் நெஞ்சைத் தூது அனுப்புவதாகப் பாடப்பட்டது. சிவப்பிரகாசர், முதன்முதலாக ஸ்ரீ சிவஞான பாலய தேசிகரைத் தரிசனம் செய்யப் பொம்மபுரம் சென்ற போது கையுறையாகப் பாடப்பெற்றது.

நூலின் தொடக்கத்தில் காப்புச் செய்யுள் 1; இறுதியில் தனிப் பாடல் – 1 நீங்கலாக, 255 கண்ணிகள் கொண்டது; 'கலிவெண்பா' என்ற யாப்பில் அமைந்தது.

இதன்கண், சிவஞானியின் சிறப்பியல்புகள், சிவஞானி எழுந்தருளி ஆட்சிபுரியும் இடங்கள், பொம்மபுரத்தின் பெருமைகள், நெஞ்சகத்தின் மேன்மைகள், பல்வேறு சமயக் கொள்கைகள் முதலான பல அரிய செய்திகள்

மேலும், மயிலம் – பொம்மபுர ஆதீனத்தின் வரலாறும் இதன்கண் இயம்பப்பட்டுள்ளது.

*“. . . .*
*எங்கள் மலஇருளுக்கு ஈண்டு மயிலைமிசைச்*
*செங்கதிர்போல் தோன்றும் சிவஞான தேசிகனோ?”*

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் பிள்ளைத்தமிழ்

*சிவப்பிரகாச சுவாமிகள்*

‘பிள்ளைத் தமிழ்’ என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

கடவுளையோ, அடியார்களையோ, வள்ளல்களையோ சிறு குழந்தையாகக் கருதிப் பத்துப் பருவங்களில் பருவம் 1க்குப் பத்துப்பாடல் வீதம் 100 பாடல்கள் பாடுவது. இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். கடைசி 3 பருவங்கள் மட்டும் வேறுபடும்.

மயிலம் – பொம்மபுரம் ஆதீனம் ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் மீது பாடப்பட்டது.

இதன்கண், ‘காப்புச் செய்யுள்’ 1 தவிர, 101 ஆசிரிய விருத்தப்பாக்கள் உள்ளன. இதில், ஆதீன வரலாறு, சிவஞானியின் பல்வேறு சிறப்பியல்புகள், திருமட மரபு, அற்புதச் செயல்கள், முருகப் பெருமானின் திருவருள் பெற்ற திறம் முதலியன சொல்லப்பட்டுள்ளன. மேலும், வீரசைவத் தத்துவக் கருத்துக்களும் விரவிக் கிடக்கின்றன. கவித்திறம், ஆதீன ஆட்சிச் சிறப்பு, தத்துவக் கொள்கை முதலியவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் ‘ஞானக் கருவூலம்’ என்று போற்றப்படுகின்றது. ‘ஆசிரிய விருத்தம்’ என்ற யாப்பில் அமைந்துள்ளது.

*“கரிய வண்டு இமிர்குவளை இகலிஅம் கயல்வென்று*
*காதளவு ஓடி மீளும்*
*கருநெடுங் கண்ணுடைய ஒருமாது குழல்வெண்மை*
*கருமைசெய் திடும்இவற்குத்*
*திரியநின் மெய்யினிடை வருகருமை யினைவெண்மை*
*செய்வதரிது அன்று கண்டாய்!*
*சிவம் என்றும் உயிர் என்றும் வேறு செய்து அகலாத*
*திமிரமா மலம் அகன்று. . . !”*

என்பன போல் சைவசித்தாந்தக் கருத்துடைய பாடல்கள் பல உண்டு!

## ஸ்ரீ சுவர்ண விராலிகிரி அந்தாதி

*பாடியவர் பெயர் தெரியவில்லை!*

தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ‘அந்தாதி’யும் ஒன்று! அந்தம் + ஆதி = அந்தாதி. அந்தம் – முடிவு; ஆதி – முதல். ஒரு செய்யுளின் இறுதி, அடுத்த

செய்யுளின் முதலாவதாக வரத் தொடுத்துப் பாடுவது. அவ்வாறே, இறுதிச் செய்யுளின் அசையோ, சீரோ, நூலின் தொடக்கத்தில் முதற்செய்யுளின் முதலசை அல்லது முதற்சீரோடு பொருந்த அமைப்பது 'மண்டலித்தல்' எனப்படும்.

இவ் அந்தாதியில் 'மண்டலித்தல்' வந்துள்ளது.

'விராலிகிரி' என்பது 'விராலிமலை'. இது, திருச்சி – மதுரை நெடுஞ்சாலையில் உள்ளது. முருகன் உறையும் பதி 'குன்று தோறாடல்' எனப்படும். அப்பட்டியலில் இவ் 'விராலிமலையும்' ஒன்று என்பர்.

இந்நூலில், 'காப்புச் செய்யுள்' 1; நூலின் இறுதியில் – 1 என இரண்டு தவிர 100 செய்யுட்கள் உள்ளன.

"அடியேனுடைய அறியாமையைப் போக்கி அருள வேண்டும்; அடியேனுடைய குற்றங்களைப் பொறுத்தாள வேண்டும்" என்று நூலாசிரியர், முருகப் பெருமான்பால் வேண்டும் பாடல்கள் பலவாக உள்ளன.

*"மலையா திருக்க வெனக்களித்த*
*மறையா வேதா கமப் பொருளை*
*நிலையா நிறுத்தி உளத்துனையே*
*நேரே காண அறியாமல்*
*அலைவாய்த் துரும்பாய் விடயமதில்*
*அலைந்தேன் அடியேற் கருணீழல்*
*இலையா சொர்ண விராலிகிரி*
*எம்மா னேவந் தியம்பாயே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ சுந்தரேசுவரர் துதி

*உ.வே. சாமிநாதையர்*

மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சுந்தரேசப் பெருமான் மீது பாடப்பட்ட துதிப் பாடல்கள்.

இதன்கண் 10 பாடல்கள் உள்ளன. நெஞ்சுக்குக் கூறுவனவாக அமைந்துள்ளன. ஆசிரிய விருத்தப்பாவால் அமைந்தவை.

*"ஆல வாயி லமர்ந்தருளு*
*மமல னருளை யன்றிநெஞ்சே!*
*கால வாயின் வேறுதுணை*
*சாற்றற் குண்டோ வவன்பெயரைக்*
*கோல வாயி னுரைத்துரைத்துக்*
*குறித்தே யவன்றாண் மலரிருப்பின்*
*சீல வாயி னருள்புரிவன்*
*றீர்ப்பன் றுயர மியாவையுமே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்

*மகா. சோமசுந்தர சுவாமி*

தமிழில் உள்ள 96 வகைச் சிற்றிலக்கியங்களில் 'சதகம்' என்பதும் ஒன்று. 100 பாடல்கள் கொண்டது.

மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதக் கடவுள் மீது பாடப்பட்டது.

நூலின் தொடக்கத்தில் ஸ்ரீ குருபரம்பரை வணக்கம்' – 20 பாடல்கள், 'வாழ்த்து' – 1 பாடல்; காப்புச் செய்யுள், அவையடக்கம் – 5 பாடல்கள் உள்ளன.

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'சொக்கலிங்கக் கடவுளே' என முடிவது.

*"வடவால நீழலுறை காலமோ மூவர்தமிழ்*
*மகிழ்கின்ற சமைய மிதுவோ*
*மணிவாச கம்கேட்கு மேல்வையோ கோவைநூல்*
*வரைகின்ற வேளை தானோ. . ."*

என்பன போன்ற பாடல்கள் உண்டு.

## ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள் இரட்டை மணிமாலை

*பொ. பாண்டித்துரைத் தேவர்*

'மாலை' என்பது சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

வெண்பா, கலித்துறை என்னும் இருவகை யாப்பு அமைய மாணிக்கமாலை போலத் தொடுக்கப்பட்டதாகலின் இப்பெயர் பெற்றது.

சிவஞான சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன முனிவர்களுள் முதன்மையாக விளங்கியவர். இவர் எழுதிய பல நூல்களில் 'சிவஞான போத மாபாடியம்' பெருமை மிக்கது.

இம் முனிவர் மீது பாடப்பட்டது இந்நூல்.

நூலின் தொடக்கத்தில் 'காப்பு'ச் செய்யுள் 1 தவிர, வெண்பா – 10; கலித்துறை – 10 ஆக 20 பாடல்கள் உள்ளன. முனிவரின் பெருமைகளை இனிது எடுத்துரைப்பது.

*"ஓராழி உண்டமுனி உட்கவட சொற்கடலும்*
*சீரார் தமிழ்க்கடலும் சேரவுண்டு – பாருலகில்*
*தீங்கவியா மாவுறையால் செய்யசிவ ஞானமுகில்*
*ஈங்கவியா நீக்கும் இடர்!"*

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் நான்மணி மாலை

*ஏ.டி. இராமலிங்கம் பிள்ளை*

'மாலை' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று.

"நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், அகவல்" எனும் நால்வகை யாப்பு அமைய, மாணிக்க மாலைபோல் தொடுக்கப்பட்டதால் இப்பெயர் ஏற்பட்டது.

மாதவச் சிவஞான சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன முனிவர்களில் முதன்மையானவர். இவர், எழுதிய பல நூல்களில் குறிப்பிடத்தக்கது, 'சிவஞான மாபாடியம்,

*"அமுதாந் தமிழி னிலக்கியமும்*
*அதற்கு நிகழ்த்து மிலக்கணமும்*
*குமுத மலர்வாய் மலர்ந்திலகத்*
*கூறு தருக்கஞ் சித்தாந்தம்*
*இமையா நாட்டத் தமரர் குழாம்*
*இறவா துறுவான் தினமயிலும்*
*அமுதாப் பொழியுஞ் சிவஞான*
*அரசே யுன்தாள் அடைக்கலமே!"*

என்பது அவற்றில் ஒன்று!"

## ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பதிகம்

*தட்சிணாமூர்த்தித் தம்பிரான்*

பதிகம் – 10 பாட்டு

மாதவச் சிவஞான சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன முனிவர்களில் முதன்மையானவர். நூல்கள் பல இயற்றியவர். அவற்றில் 'சிவஞான மாபாடியம்' புகழ் பெற்றது.

இந்நூலில் 'காப்பு' 1 தவிர 10 பாடல்கள் உள்ளன. முனிவர் பெருமைகளைச் சொல்வது.

*"பதிபசு பாச இயல்பை உலகினர் பாத்துணர*
*விதிமுறை யாக விளங்க இயற்றி வித்தகமெய்*
*அதிபதி யாகுஞ் சிவஞான யோகி அருட்குரவர்*
*மதியருள் பூதி எழுத்தஞ்சு கண்டிகை வாழியவே!"*

என்பது அவற்றில் ஒன்று!

## ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

*வீ. திருஞான சம்பந்த முதலியார்; வை. செல்லையாச் செட்டியார்*

'பிள்ளைத்தமிழ்' என்பது தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் ஒன்று. இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இரு

வகைப்படும். பருவம் 1க்குப் பத்துப்பாடல் வீதம் 10 பருவத்திற்கு 100 பாடல்கள் பாடப்படுவது மரபு.

ஆனால், இப்பிள்ளைத்தமிழில், இம்முறைப்படிப் பாடவில்லை. ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன முனிவர்களில் முதன்மையானவர். இவர் எழுதிய நூல்களில் 'சிவஞான மாபாடியம்' பெருமை மிக்கது.

இந்நூலில் முதல் 5 பருவங்களை வீ. திருஞான சம்பந்த முதலியாரும்; பின் 5 பருவங்களை வை. செல்லையாச் செட்டியாரும் பாடியுள்ளனர். முதலாவதாகிய 'காப்பு'ப் பருவத்தில் 'காப்புச்' செய்யுள் 1 தவிர 6 பாடல்கள், செங்கீரைப் பருவம் – 5; தாலப்பருவம் – 5; சப்பாணிப்பருவம்– 5; முத்தப்பருவம்– 5; வருகைப் பருவம்– 5; அம்புலிப்பருவம்– 5; சிற்றிற்பருவம்– 5; சிறுபறைப்பருவம்– 5; சிறு தேர்ப்பருவம்– 5; இறுதியில் வாழ்த்து – 1 என அமைந்துள்ளன.

மாதவச் சிவஞான முனிவரின் பல்வேறு சிறப்புக்களை இந்நூல் கூறுகிறது.

"பங்கய மெனப் பொலிவு தங்குவத னக்குமிழ்
பதித்துநான் றசைபுலாக்கிற் . . . .
இங்குசிவ ஞானமா பாடியக் கையினொடும்
ஏழையேன் முன் வருகவே!
எத்தவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
எந்தம் பிரான் வருகவே!"

என்பது வருகைப் பருவத்தில் வரும் பாடல். இவ்வாறே பிறவும் வரும்.

## ஜெயங்கொண்டார் சதகம்

அ. முத்தப்ப செட்டியார்

சதகம் – 100. ஒரு நூறு பாடல்கள் கொண்டது.

தமிழில் உள்ள சிற்றிலக்கிய வகை 96ல் இதுவும் ஒன்று.

'நேமம்' என்ற நகரில் எழுந்தருளியுள்ள ஜெயங்கொண்ட சோழீசர் பெயரால் அமைந்தது.

தொடக்கத்தில் 'காப்பு' முதலான 4 செய்யுட்கள் தவிர 100 பாடல்கள் உள்ளன.

இந்நூலில், இளையான்குடி மாற நாயனார், திருஞான சம்பந்தர் முதலானோரைப் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

"பண்ணாருங் கவுணியர்வி பூதியினால் வழுதிசுரம்
பாதி தீர்த்தார்!
எண்ணாயி ரஞ்சமணர் திருநீற்றை மறந்துகழு
வேறி மாய்ந்தார் . . . !

என்பது, சம்பந்தரைப் பற்றியது. இவ்வாறே பிறவும்!